# கோதையின் காதல் ஓவியம்

(நாய்ச்சியார் திருமொழி)

முதல் பாகம்

கவிஞர் வி. மு. உலகநாதன்

வாசுகி பதிப்பகம்
69, தொட்டிக்கலைக்குமரப்ப முதலித் தெரு,
சூளை, சென்னை - 600 112

# பதிப்பு விளக்கம்


| | | |
|---|---|---|
| நூலின் தலைப்பு | : | கோதையின் காதல் ஓவியம் |
| பொருள் | : | கோதை கண்ணபிரானை அடைய அகத்துறைநெறியில் பாடியருளிய நாய்ச்சியார் திருமொழியில் 73, பாசுரங்களுக்கு விளக்கமும் ஆய்வும் |
| ஆசிரியர் | | கவிஞர்: வி. மு: உலகநாதன் |
| பதிப்பு | | முதற் பதிப்பு |
| வெளியீடு | | மே, 1994 |
| உரிமை | | ஆசிரியருக்கே |
| தாள் | | 11-2-K. G: ஒயிட் பிரிண்டிங் |
| நூலின் அளவு | | 18. CM. 12.5 CM: |
| எழுத்து | | 10: புள்ளி |
| பக்கம் | | 224 |
| படிகள் | | 1000 |
| அச்சகம் | | சரவணா கலர் பிரிண்டிங் பார்த்த சாரதி நாயடு தெரு, திருவல்லிக்கேணி, சென்னை-5 |
| விலை | : | உருபா 32-00 |
| பதிப்பாளர் | : | வாசுகி பதிப்பகம் 69, தொட்டிக் கலைக் குமரப்ப முதலித் தெரு, சூளை, சென்னை - 600 112 |

அருளாளன் பக்தியில் ஆழங்கால்பட்டுள்ள, அகவை எண்பத்தைந்தை அடைந்துள்ள திரு. வி. மு. வாசுதேவ ராமாநுச தாசன் என்னும் என் தமயனார் அவர்களுக்கு

# அன்புப் படையல்

திருமாலின் அடியைப் பரவிடும் வாசு—
தேவரா மாநுச தாசன்
விருப்புடன் இராமா நுசர்நூற்றந் தாதி
வியப்புற இசைப்பவர் தமக்குப்
பெருமைசால் கோதை காதலோ வியத்தைப்
பிரியமாய்ப் படைத்திடும் அவரின்
அருமைநல் லிளவல் உலகநாதன் யான்
அன்பினால் வணங்கினேன் பாடி !

---

கோதையின் காதல் ஓவியம் என்னும் இந்த ஆய்வு நூலை வெளியிட பொருள் உதவி நல்கிய திருப்பதி திருமலை தேவஸ்தான அதிகாரிகளுக்கு என்றும் நன்றி யுடையேன்.

அன்பன்

வி. மு. உலகநாதன்

# உள்ளுறை

| வரிசை எண் | | பக்கம் |
|---|---|---|

## நான்காம் திருமொழி



## ஐந்தாம் திருமொழி



## ஆறாம் திருமொழி



## ஏழாம் திருமொழி



---

(நேரிசை வெண்பா)

**மாட்சிறயுச் செய்தாரை வாழ்த்து**

நாய்ச்சியார் கோதை நயந்திசைத்த ஓவியத்தில்
வேய்ங்குழல் கண்ணன் விளையாட்டைத்—தூய்மையுடன்
காட்டினார் மக்களெலாம் கண்ணனைப் போற்றியே
மாட்சியுறச் செய்தாரை வாழ்த்து

# அணிந்துரை

## பேராசிரியர் டாக்டர் ந. சுப்பு ரெட்டியார்

**கோலச் சுரிசங்கை மாயன்செவ்**
**வாயின் குணம் வினவும்**
**சீலத் தினன்தென் திருமல்லி**
**நாடி செழுங்குழல்மேல்**
**மாலைத் தொடைதென் னரங்கருக்**
**கீயும் மதிப்புடைய**
**கோலக் கிளியவள் தூயநற்**
**பாதம் துணைநமக்கே!**

—திருக்கண்ணமங்கையாண்டான்

ஆண்டாள் அன்னையார் பெரியாழ்வார் வளர்ப்புப் பிள்ளையாகத் திருவாடிப் பூரத்துக் கிடைத்த ஒப்பற்ற செல்வம். கோதையென்று பெயர் சூட்டி, பெரியாழ்வார் வளர்த்து வந்தார். இக்கோதைப் பிராட்டியாரின் அருளிச் செயல்களில் ஒன்று திருப்பாவை; மற்றொன்று நாய்ச்சியார் திருமொழி. இந்த இரண்டாவது அருளிச் செயலில் திருமாலைத் தவிர வேறு எவரையும் கலவா திருத்தல், இறைவனின் ஆண்மையில் தன் பெண்மை கலந்திருக்க மனத்தைச் செலுத்துதல், தன் ஆன்மாவின் பெண்மை நிலைக்குத் தகச் செயல்படுதல், ஆகிய பண்புகள் திகழ்தலைக் காணலாம்.

**“மானிட வர்க்கென்று பேச்சுப்படில்**
**வாழகில்லேன் கண்டாய் மன்மதனே”**

என்று பேசுகின்றார், மறந்தும் புறந்தொழா வேண்டி யிருக்க, தேவதாந்தரத்தின் காலில் விழுவது பொருந்துமோ? என்ற வினா எழும்புகின்றது? வழியில்லாத வழியில் சென்று கண்ணபிரானோடு கலக்கப் பெற வேண்டும் என்ற முயற்சிகள் யாவும் உபேயத்தில் அடங்கி விடுவதால்; அது குற்றமில்லை என்று பெரியோர்

பணிப்பர், எனவே, காமனை வேண்டிப்பாடுதல்; இறைவன் முகம்காண சிற்றில்இழைத்தல், துகிலைப் பணித் தருள் என்றல், கூடல் இழைத்தல், திருமால் தன்னிடம் வர குயிலைக் கூவுமாறு வேண்டுதல், திருமணக் கனவை உரைத்தல், வலம்புரிக்குக் கிடைத்த பேறுபற்றி இயம்புதல் முதலானவை தொடங்கி ஏழு திருமொழிகளுக்கு விளக்கம் தருகின்றார் இந் நூலாசிரியர் கவிஞர் வி. மு. உலகநாதன். இவரது விளக்கம் சொற்பொழிவு பாணியில் அமைந் துள்ளது. அழகாகச் செல்கின்றது.

இதில் அஃறிணைப் பொருளான குயிலிடம் கூறியது காம மயக்கத்தால் கூறியதாகும்; தலைவி இவ்வாறு பேசுவது கவிமரபாகும்; இங்ஙனம் அஃறிணைப் பொருளை விளித்துக் கூறுதல் "காமம் மிக்க கழிபடர் கிளவி" என்று சொல்லப்பெறுவதாகும். இதற்குத் தொல்காப்பியச் செய்யுளியல் விதி (192) இடந்தருகின்றது.

(பக்கம் 41ல்) காமசூத்திர நெறிப்படி உன்னைப் போற்றுகின்றேன் என்று காமனிடம் கூறுவதாக,

"வாயுடை மறையவர் மந்திரத்தால்
வணங்குகின்றேன்"

என்று பாடும் கோதையின் கருத்தை இந்நூலாசிரியர் விளக்கிக் காட்டுதல் போற்றுதற்குரியதாகும்.

"மாசுடை உடம்பொடு"

என்ற தொடரைக் காட்டிக் கோதையின் எழில்மேனி நலங் குன்றியதைத் தெரிவித்த ஆசிரியர், கோதையின்பால் தாம் கொண்ட ஆதங்கத்தைக் காட்டினார். நம்மையும் பரிதாபப்படச் செய்யவைத்த ஆசிரியரின் இரக்க நிலையை இதில் காணலாம்.

(பக்கம் 52ல்) கம்சனால் ஏவப்பட்ட குவலாயபீட யானையையும் கொக்கு வடிவம் தாங்கிய அசுரனையும் கொன்றொழித்த கண்ணபிரானின் திறத்தை,

"கரியலற மருப்பொசித்துப் புள்வாய் பிளந்த"

என்று பாடிய கோதையின் உள்ளக் கிடக்கையை ஆசிரியர் தெரிவித்திருப்பது ஏற்புடையதாகும்.

(பக்கம் 65ல்) முதலையின் வாயில் சிக்கிய யானை ஆதிமூலமே என்று அலறியதைக் கேட்ட கண்ணபிரான் தன் சக்கராயுதத்தால் முதலையைக் கொன்று யானையைக் காத்த நிலையை

"மதயானை கோள்விடுத்தாய்"

என்ற தொடரால் எம்பெருமானின் அருட்குணத்தினைத் தெரிவித்த கோதையாரின் பக்தி நிலையை ஆசிரியர் கூறியது அருமைப்பாடுடையது.

(பக்கம் 102ல்) ஆய்ச்சியர்கள் நீராடும்போது கண்ண பிரான் அவர்களின் ஆடைகளை எடுத்துக் கொண்டு மரத்தில் மறைத்து வைத்திருந்தவனிடம் ஆய்ச்சியர்கள் ஆடையைக் கோரியது உலகியல் பற்றாகும்; பாஞ்சாலியைப் போல் பரந்தாமனிடம் சரணாகதி யடையாமல் ஆடையைக் கோரியது உலகியல் ஆசையால் அவனை அடைய முடியாமல் அவர்கள் இடர்ப்பட்டார்கள் என்று கூறிய இந்நூலாசிரியரின் கருத்து மிகப் போற்று தற்குரியதாகும்.

(பக்கம் 120ல்) "காட்டில் வேங்கடம் கண்ணபுர நகர்" என்றதில் தண்டகாருண்யத்தைக் காட்டில் வேங்கடம் என்பதற்கும் அயோத்தி மாநகரத்தைக் கண்ணபுர நகருக் கும் ஒப்பாகக் காட்டியிருத்தல் மிகச் சிறப்பாக உள்ளது. இவற்றால் தண்ட காருண்யவனத்தில் இராமபிரான் துன்புற்றதையும் அயோத்தி மாநகரத்தில் இன்புற் றிருந்ததையும் விளக்கியது ஆசிரியரின் திறனை வெளிப் படுத்துகின்றது.

(பக்கம் 136ல்) மாவலி மன்னனிடம் ஏழையைப்போல் குள்ள வாமனனாகப் பிச்சை கேட்டு, பின்னர் திரிவிக்கிரமனாகப் பேருருக் கொண்டு செருக்குற்ற

அவ்வனை ஒடுக்கி அழித்து ஒழித்தது, கண்ணபிரானின் கபட நாடகமாகும் என்று இந்நூலின்கண் கூறியது நுணுகி அறிந்து விவரித்ததாகும். இந்நூலிலே கருத்துகளை விவரித்துக் காட்டியதோடு கோதைப்பிராட்டியாரின் பாட்டழகையும் இலக்கண நுட்பத்தையும் இன்னோசை பிறங்க அமைத்த அழகையும் ஆசிரியர் சிறப்பாகவே கூறியுள்ளார்.

கோதைப் பிராட்டியின் பாசுரங்கள் எல்லாம் இவர் நூலில் விளக்கம் பெறுகின்றன, இங்ஙனம் இலக்கிய மரபை யொட்டியும், பக்தி மரபைப் பற்றியும் இந்த ஏழு திருமொழிகளையும் விளக்கம் அடையச் செய்கின்றார். இந்நூலாசிரியர், பஞ்சு நூல் நூற்கும் நிறுவனத்தில் பணியாற்றியவர். இவரைத் திருத்திப் பணிகொண்டு இலக்கியத் துறைக்கும் பக்தி நெறிக்கும் ஈர்த்தவர் பதிப்புச் செம்மல் இலக்கணத் தாத்தா திரு. மே. வீ. வேணு கோபாலப்பிள்ளை என்னும் நல்லறிஞராவார்,

அவர் வழங்கிய ஞானச் செல்வத்தால் இந்நூலாசிரியர் ஒளிவிட்டுத் திகழ்கின்றார்; அருளாசிரியர் பாசுரங்களுக்கு விளக்கமும் தருகின்றார்; தாம் வாழும் நாளில் இத்தகைய கைங்கரியத்தில் தொடர்ந்து ஈடுபட்டுத் திகழ வேண்டு மெனத் திருவேங்கடமுடயானை நினைந்து வாழ்த்து கின்றேன்.

(நேரிசை வெண்பா)

அஞ்சு குடிக்கொரு சந்ததியாய் ஆழ்வார்கள்
தஞ்செயலை விஞ்சிநிற்கும் தன்மையளாய்—பிஞ்சாய்ப்
பழுத்தாளை ஆண்டாளைப் பக்தியுடன் நாளும்
வழுத்தாய் மனமே மகிழ்ந்து!

—மணவாளமாமுனிகள்

வேங்கடம்,
AD, 13, அண்ணாநகர்,
சென்னை-600 040.
20-3-94

ந. சுப்புரெட்டியார்

## கோதை விரும்பிய கோவிந்தன் !

வேயர்தம் குலமாம் உயர்ந்தஒண் குலத்தில்
விளங்கிடத் தோன்றினர் கோதை
ஆயர்தம் குலமாம் தாழ்வுடைக் குலத்தில்
அவதாரம் செய்தகண் ணனையே
ஓயாமல் பாடி நோன்பினை நோற்றே
உறுதியில் நின்றவர் அந்தத்
தூயனை ஏற்கப் பெறாவிடில் உயிரைத்
துறப்பன்நான் என்றனர் ஆர்த்து!

காய்ச்சினம் உடைய கொடியரை மாய்க்க
கண்ணனே தோன்றினான் மண்ணில்
வாய்மையைப் போற்றும் மாண்புடை யாரை
மகிழ்வுடன் காத்தனன் இன்ப
வேய்ங்குழல் இசைத்தே ஞாலத்தை நடத்தும்
வித்தகன் தன்னையே ஏற்க
ஆய்ச்சியாய் மாறி அரங்கனைப் பாடி
அவாவினால் துதித்தவர் கோதை!

ஆய்ச்சியாய் ஆகி அனுதினம் உருகி
அகத்தினால் ஏத்தியே நின்று
நாய்ச்சியா ராகித் திருமொழி பாடி
நாயகக் கண்ணனோ டிணையும்
வாய்ப்பினைப் பெற்று மகிழ்ந்தவர் அந்த
மாயவன் பெரும்புகழ் தன்னைத்
தூய்த்தமி ழாலே சொன்னவர் ஞாலம்
சுகம்பெற இசைத்தனர் கோதை!

# என்னுரை

திருவாடிப்பூரத்தில் தோன்றியவர் கோதை. அவர் அருளாளர்கள் நிரம்பிய திருவில்லி புத்தூரில் அவதரித்தார்: விட்டு சித்தர் அமைத்த நறுமணம் கொண்டுள்ள பூங்கா விலே பூத்தப் புதுமலராக ஒளிர்ந்தார். உளங்கவரும் பசுமையுடைய துளபச் செடியின் கீழே அழகோவியமாக விளங்கினார், மண்மகளின் மடியிலே பெண் கொடியாகத் திகழ்ந்தார்; பூமிதேவியின் மடியில் பொலிவுடன் தோன்றி யதால், அப்பூதேவியின் அவதாரமாகவே கோதையைப் புகழ்ந்தனர் சான்றோர்.

பூந்தோட்டத்தில், துளபச் செடியின் கீழ்க் கிடந்து எடுத்த கோதையை இனிதே வளர்த்து வந்தார் விட்டு சித்தர். தாம் பாடிப் பரவி வந்த கண்ணபெருமானின் பக்தியில் ஆழங்கால் படச் செய்தார். அன்பாக அழகுடன் வளர்த்த தந்தையின் நெறியில் முறைபிறழாமல் நிறை குடமாகத் திகழ்ந்தார் கோதை. வந்தனைக்குரிய மாயனைத் தூயச் சிந்தையாலே துதித்து வந்தார். துதித்து வந்த செங்கண்மாலுக்குப் பூமாலையைச் சூடிக் கொடுத்தார்: சூடிக்கொடுத்த கோதையின் மலர் மாலையை நாடிவந்து கண்ணபிரான் களிப்புடன் ஏற்றான்; ஏற்ற மாயன், சூடிக்கொடுத்த கோதையைச் சுடர்கொடி யென உலகத்தார் போற்றுமாறு செய்தான். சூடிக் கொடுத்த சுடர்கொடியோ பாடிக் கொடுத்து அப்பரமனைக் கோடித்து வழிபட்டார்: எல்லா உலகங் களிலும் இனிது இலங்கும் எம்பெருமானைத் தம் பாட்டோவியத்தில் எழுதிக் காட்டினார் கோதை.

எப்பொருளிலும் படிந்து நிற்கும் ஒப்பிலா அப்பனை இப்பாரோர்க்குத் தெரியவே தம்பாசுரத்தில் படமாகக்

காட்டினார். கண்ண பெருமானை நாயகனாக எப்படி ஏற்று அனுபவிக்கவியலும் எனக் கருதினார்; கருதியவருக்கு முன்னாளில் ஆயர்பாடி மக்கள் அவனை அனுபவித்த நிலை நினைவுக்கு வந்தது; எனவே, அந்த ஆய்ச்சியர்கள் அனுப வித்த முறையில் கோதையும் அவனை அடைய முயன்றார். ஆய்ச்சியாக மாறினார்; நாய்ச்சியார் திருமொழியை இசைத்தார்.

எளியோர் பதியில் ஒளிவிளக்காகத் தோன்றியவன் கண்ணபெருமான்; தூயோர் பதியை நாடியே மாயப்பிரான் தோன்றினான். எளியோராக, தூயோராக, கொடுமையே இல்லாதவராக, துன்பப்படுவோருக்கு ஓடி உதவி செய்ப வராக வாழ்ந்தவர்கள் ஆயர்கள். இத்தகைய உத்தமர்கள் வாழ்ந்த ஆயர்பாடியில் அக மகிழ்ந்தே வந்து தோன்றினான் கண்ணபெருமான். அந்தக் கண்ண பெருமானையே உள்ளம் மகிழ்ந்திடச் செய்து அவனைத் தம் வயப்படுத்திக் கொண்டவர்கள் ஆயர்கள்; வயப்படுத்திய ஆயர்பால் மயங்கியவன் கண்ணபெருமான். எனவே, மாயனை வயப்படுத்திய ஆயர்களின் நெறியில் தூயமுடன் நின்று இன்னமுதனைத் தாம் அடைந்திடவே முனைந்தார் கோதை. ஆம்! இந்த நெறிமுறையைத் தம் தந்தையாகிய விட்டு சித்தரிடத்தில் அறிந்தவர் கோதை.

விட்டு சித்தர், ஆய்ச்சியாக யசோதைப் பிராட்டியாக ஆகி, கண்ணபிரானைத் தாம் பெற்ற குழந்தையாகப் பாவித்துப் பிள்ளைத் தமிழ்ப் பாடி அனுபவித்தார்; பாடிப் பேரானந்தம் கண்டார். அவனின் அருமை விளையாட்டை யெல்லாம் தம் பிள்ளைத் தமிழில் எடுத்துக் காட்டிப் பரவசம் அடைந்தார்.

தந்தையார் நெறியில் தயக்கமின்றி நடைபோட்ட கோதைப் பிராட்டியும் ஆய்ச்சியாக மாறி ஆயனான மாயப்பிரானை நாயகனாக அனுபவிக்க, திருப்பாவை,

நாய்ச்சியார் திருமொழி ஆகிய இரு பிரபந்தங்களை அழகுறப் பாடி அகமகிழ்ந்தார். கண்ணபிரான் மிகச் சிறந்த இடம் என்று தேர்ந்தெடுத்துத் தோன்றிய ஆயர் பாடியே, தூயநெறி வளர்க்கும் வீடாகுமென்று கருதிய விட்டு சித்தர் அதை அருமையாகத் தம் திருமொழியில் கூறினார்.

''பாடுவார்களும் பல்பறை கொட்ட நின்ற
ஆடுவார்களும் ஆயிற்றாய்ப் பாடியே"

என்று இனிதாய் ஆயர்பாடியின் பெருமையை, அதில் வாழ்ந்த மக்களின் அருமையை, அருளாளனை அவர்கள் அனுபவித்த நிலையினை அழகுறப்பாடியதால் தெரியலாம். இவரைப் போன்றே, கோதைப் பிராட்டியாரும்

''சீர்மல்கு ஆய்ப்பாடிச் செல்வச் சிறுமியர்காள்''

என்று திருப்பாவையில் ஆயர்பாடியை, அதில், வாழ்ந்த, கண்ணபிரானின் தொண்டில் நின்ற ஆயச் சிறுமியர்களைப் பாடிப் புகழ்ந்தார். மேலும் நாய்ச்சியார் திருமொழியில் நான்காம் பத்தில்

''ஆய்ச்சிமார்களும் ஆயரும் அஞ்சிட"

என்று பாடியதில், கண்ணபிரான் காளியன் என்னும் பாம்பை வீழ்த்த முயன்றதைக் கண்ட ஆயர்பாடி மக்கள் அஞ்சினார்கள் என்பதைக் கூறி, மாயனபால அம்மக்கள் கொண்ட பக்தியினைச் சித்திரித்தார். இவ்வாறு ஆயர்பாடி மக்கள் கொண்ட பக்தியினைத் தாமும் உள்ளத்தால் உவந்து ஏற்று அவன் பற்றில் ஒன்றி ஆய்ச்சியாக நின்று இரு பிரபந்தத்தால் பாடி அனுபவித்தார். முதல் பிரபந்த மான திருப்பாவையை அவனை அடைய உபாயமாக—துணையாக அமைந்திடப் பாடி நோன்பு நோற்றார். இரண்டாம் பிரபந்தத்தை அகத்துறை நெறியில் பாடி நாய்ச்சியார் திருமொழியெனத் தந்தார்.

இதை அப்பரம்பொருளை அடைந்திட உபேயமாக, பயனாகப் பற்றாகவே அமைந்திலங்கப் பாடி வெற்றி

கண்டார். வெற்றியைக் கண்டவர் அற்புதமாகப் பாடிய நாய்ச்சியார் திருமொழியை அவன்மேல் கொண்ட காதலின் பெருக்கால் ஓவியமாக வரைந்தார். இத்திரு மொழியிலே அருளாளனை நடம்புரிந்திடக் காட்டினார். பாரளந்தானின் பேராற்றலைப் படம்பிடித்துக் காட்டினார். இவ்வாறு செவ்வியுடன் பாடிய இத்திவ்வியப் பிரபந்தத்தைப் பதினான்குத் தலைப்பில் கதியாக வந்து உதவி செய்திட்ட உத்தமனைச் சிறப்பித் தருளினார்.

கோதை அன்னையார் அருளிய முதல் பிரபந்தமான திருப்பாவையை இரண்டாண்டுகளுக்கு முன்னர் ஆண்டாள் பாவையும் அழகுத் தமிழும் என்று ஆய்வு நூலாக்கி வெளி யிட்டேன். இது தமிழ்நாட்டரசின் பரிசைப் பெற்றதாகும். இப்போது இரண்டாம் பிரபந்தமான நாய்ச்சியார் திரு மொழியைக் ''கோதையின் காதல் ஓவியம்'' என்னும் நூலாக வெளியிடுகின்றேன். இதில், ஏழு தலைப்புகளில் பாடியுள்ள எழுபத்து மூன்று பாசுரங்களுக்கு விளக்கமும் ஆய்வும் செய்து வெளியிடுகின்றேன். மிகச் சிறப்புக்குரிய நிலையில் அகததுறை நெறியில் பாடப்பெற்ற இத்திரு மொழியை அவர் காதலித்த கண்ணபெருமானைக் காட்டு கின்ற ஓவியமாக வரைந்தார். அவனை ஒப்பில்லா வகையில் சித்திரித்தருளிய கோதை வாய்த்தமிழை ஆய்வு செய்து விளக்கிட விழைந்த நான் கோதையின் காதல் ஓவியமாக வெளியிடுகின்றேன். ஒவ்வொரு பாசுரத்தில் காணப்படும் கருத்துகளை விளக்கியதோடு, அதில் அவர் பெய்துப் பாடிய அருமையான சொற்களையெல்லாம் எடுத் தியம்பி, அவற்றில் பொதிந்துள்ள பொருள்களின் சிறப் பியல்பினை வெளிப்படுத்தியிருக்கின்றேன். அவை தரும் பயன்களையெல்லாம் அழகுறத் தெரிவித்திருக்கின்றேன். இவற்றையெல்லாம் அடியேன் அனுபவித்துத் தெரி விக்கக் காரண பூதனாய்த் திகழ்கின்ற கண்ணபெருமானின் பெற்றியினையும் அற்புதமாகக் காட்டியிருக்கின்றேன்.

முதல் திருமொழியில் காமனை உதவிட வேண்டிப் பாடியதில் விண்ணமுதனை மிக எழிலுறக் காட்டினார் கோதை. இரண்டாம் திருமொழியில் சிற்றில் இழைக்கின்றார். இதில் திருமகள் கேள்வனை நம் முன்னே தோன்றிடக் காட்டினார். மூன்றாம் திருமொழியில் நீராடலைக் குறித்துப் பாடினார்; இதில் குதி கொண்டரவின் மேல் நடித்த கோவிந்தனைப் படம் பிடித்தார்.

நான்காம் திருமொழியில் கூடல் இழைக்கின்றார். வாடிய மக்களுக்கு மழை மேகமாக உதவும் காயம்பூ வண்ணனைக் கவினுறக் காட்டினார். ஐந்தாம் திருமொழியில் குயிலைக் கூவியழைத்த கோதை, மாதவனிடம் தம் நிலையை விளக்கி அவனை வரக்கோரித் தம் ஆர்வத்தைக் காட்டினார். ஆறாம் திருமொழியில் கனவு பற்றிப் பாடுகின்றார்; கண்ணன் வந்து தம் கைத்தலத்தைப் பற்றியதாகக் கண்டு மகிழ்ந்ததை இசைத்தார்.

ஏழாம் திருமொழியில் வலம்புரிச் சங்கிடம் செங்கண்மாலின் வாயமுதம் பற்றிக் கோருகின்றார்.

**"செய்த்தீர்த்தமாய் நின்ற செங்கண்மால் தன்னுடைய**
**வாய்த்தீர்த்தம் பாய்ந்தாட வல்லாய் வலம்புரியே"**

என்று கூறி, நீ பாய்ந்தாடும் அவன் வாயத்தீர்த்தம் எத்தகைய நிலையிலுள்ளது. அந்த இனிமையைக் கோதை அனுபவிக்க விழைந்த ஆதங்கத்தைப் பாவியமாக்கி விளக்கினார்.

இப்படி ஒப்பில்லா வகையில் வரைந்த "கோதையின் காதல் ஓவியமான" நாயச்சியார் திருமொழி, உன்னத மொழியாகும்.

ஆம் இவ்வுயிர் மொழி கோதையாரின் சிறப் பியல்பினை எடுத்துக்காட்டும் அருண்மொழியாகும்.

"கோதையின் காதல் ஓவியம்" அவர்தம் இனிய தமிழையும் செய்யுள் அழகையும் இலக்கண நலத்தையும் சொற்களின் அற்புதங்களையும், பொருளின் சிறப்பையும், வெளிப் படுத்திக் காட்டுவதோடு, உலகமெல்லாம் நின்று நல புரக்கும் கமலக் கண்ணனைப் பண்புறக் காட்டிடும் காவிய மாகும்.

"கோதையின் காதல் ஓவியமோ கண்ணனை நம் முன்னேவந்து பேசவைக்கும் உன்னத உயிர் ஓவியமாகும். நம்முடைய ஆவியோ அருளாளனை நாடி அடைந்திடக் காட்டுவிக்கும் பாவியமாகும். இந்த அழகுப் பாவியத்தை எளியேன் நூலாக்கித் தமிழ் உலகத்திற்கு வழங்குகின்றேன், இப்படி இனிதாக வழங்கும் நூலை அனைவரும் வாங்கி ஊக்குவிக்க வேண்டுகின்றேன்.

இந்நூலை என் தமயனார் வைணவச் செல்வர், வி. மு. வாசுதேவராமாநுச தாசன் அவர்களுக்குப் படைய லாக்கிப் பெருமை அடைகின்றேன். சிறந்த தமிழறிஞரும், உதவி செய்யும் பண்பாளரும் திருவேங்கடமுடையான் பால் பற்றுமிக்கவரும் எண்ணிறந்த தமிழ் நூல்கள் இயற்றிப் பெருமை பெற்றவருமான பேராசிரியர் டாக்டர் ந. சுப்புரெட்டியார் அவர்கள் இந்நூலுக்கு அணிந்துரை வழங்கி நூலைச் சிறப்பித்ததோடு என்னையும் வெகுவாகப் பாராட்டிய அவர்களுக்கு என்றும் நன்றியுடையேனாவேன். இந்நூலை வெளியிட, பொருளுதவி வழங்கிய திருப்பதி திருமலை தேவஸ்தான அதிகாரிகளுக்கு என் வணக்கமும் நன்றியும் உரியதாக்குகின்றேன். இந்நூலைச் சிறப்பாக அச்சிட்டுதவிய சரவணா கலர் பிரிண்டிங் உரிமையாளருக்கு வணக்கத்தைக் கூறுகின்றேன். எல்லாவற்றிற்கும் மேலாக எல்லோருக்கும் எல்லாமும் இனிதருளி உலகைப் புரக்கும் கணணபெருமானின் கழலிணையை இறைஞ்சுகின்றேன்.

இவண்

**வி. மு. உலகநாதன்**

## கோதை பாடிய காதல் ஓவியம்

நாதனாம் கண்ணன் தன்னையே யடைய
நாய்ச்சியார் யாகிய் தலைவி
கோதையார் வரைந்த காதல்ஓ வியம்தான்
குணநலம் அருளிடும், இந்தப்
பூதல மீதில் போற்றுவார்க் கின்பம்
புரிந்திடும்; புனிதமாம் தெய்வக்
காதலை வளர்க்கும் கனிவினை நல்கும்
கருத்தினை விளக்கிடும் ஒளியே! 1

நாய்ச்சியார் என்னும் திருமொழி தன்னை
நல்லதோர் அகத்துறை நெறியில்
வாய்மையே மிளிர கோதையார் வரைந்த
வனப்புடைக் காதல்ஓ வியம்தான்
தூய்மையை விளக்கும்; கோவிந்தன் என்னும்
சுடர்தனைப் பற்றிடச் செய்யும்
வாய்ப்பினைப் பெற்றார்: உலகுளோர் அந்த
மாட்சியைப் பெறவழி செய்தார்! 2

அறத்தினைப் போற்றி அரங்கனை ஏத்தி
அன்புடை நாயக னாகப்
பெறவே அன்பாக நாய்ச்சியார் என்னும்
பெருமைசால் திருமொழி பாடிச்
சிறம்புறக் காதல் ஓவிய மாகத்
திறம்பட வரைந்த நம் கோதை
மறையென உலகம் போற்றிடத் தந்து
மண்தனில் நிலைத்தனர் வாழி! 3

# ''கோதையின் காதல் ஓவியம்''

பூதலம் புரக்க வந்த மாதவன் மீது காதல் கொண்டார் ''கோதை.'' அவனையே மணாளனாக ஏற்றிட மனத்தில் உறுதி கொண்டார். மண்ணில் தோன்றிய மனிதகுலப் பெண்டிரான அவர் விண்ணில் வானோர் தலைவனாகத் திகழ்ந்த கண்ணபெருமானையே கைப்பிடிக்கத் திட்டமிட்டார்; பாட்டாலே உலகைப் பாவித்திட வேண்டுமென்று கூறியதற்கொப்பவே தம் பாட்டுத்திறத்தாலே தயாபரனை நாயகனாக ஏற்றிட முனைந்தார்.

இத்தகைய முனைப்புடையவரான கோதைப் பிராட்டியார் தோன்றிய காலம் கி. பி. எழுநூற்றுப் பதினாறாம் ஆண்டென மு. இராகவையங்கார் தாம் இயற்றிய ஆழ்வார்கள் காலநிலை என்னும் வரலாற்று நூலில் வரைந்துள்ளார், இதைக் கோதை பாடியருளிய திருப்பாவையில் பதிமூன்றாம் பாசுரத்தின் நான்காம் அடியில்வருதல் காணலாம்.

''வெள்ளியெழுந்து வியாழம் உறங்கிற்று. என்ற தொடரைக்கொண்டே நிறுவுகின்றார் அவர். இக்காலத்தில் தோன்றியதாகக் கூறப்பெறும் கோதையார், பெரியாழ்வார் அருமையாக வளர்த்த பூந்தோட்டத்தில் வளமுடைய துளபச் செடியின் கீழ் அழகே வடிவான குழந்தையாகத் தோன்றிச் சுடர்விட்டிருந்தார். அக்குழந்தையைக் கண்ட பெரியாழ்வார் கிடைத்தற்கரியச் செல்வமென வாரி எடுத்துப் பூரித்துப் போனார். இறைவன் தந்த பரிசாக இனிது வளர்த்து வந்தார்; பூமிப்பிராட்டியின் அவதாரமாகக் கருதியே அழகுறப்பேணி வந்தார்.

பூந்தோட்டத்தில் பொலிவுடன் இருந்து பெறப் பெற்ற குழந்தைக்குப் பூவின் பெருமையினை விளக்குகின்ற வகையினில் கோதையெனப் பெயரிட்டு அருமையாக வளர்த்தார். அருமையாகவளர்த்திட்ட அக்குழந்தையை ஆராவமுதனின் பற்றில் ஆழங்கால் படச் செய்தார்; தந்தை சொல்மிக்க மந்திரமில்லை என்று கூறுகின்ற வகையில் தந்தை உணர்த்திய செந்தாமரைக் கண்ணன் பக்தியில் தோய்ந்து எழிலுறத் திகழ்ந்தார். கோதை, அம்மாயனையே உபாயமாகவே எண்ணி உறுதியுடன் போற்றி வந்தார். அல்லும் பகலும் அவனே கதியென வாழ்ந்த கோதை, செந்தமிழ்ப் பாட்டிசைத்துப் பரவி வந்தார். இவ்வாறு அவன் செவ்வி விளங்க உவப்புடன் பாடியவர் இரண்டு பிரபந்தங்களை அருமையாக இசைத்தார். அவை, இரண்டும் நம் இரு கண்களாகப் போற்றுதற்குரியனவாகும்.

இப்பிரபந்தங்களுள் ஒன்று திருப்பாவை, மற்றொன்று நாய்ச்சியார் திருமொழியாகும். முப்பதுதிருப் பாசுரங்களைக் கொண்டது திருப்பாவை. இது பக்தி பெருக்கை வாரி வழங்குவது, பாடுவார் உள்ளத்தினை உருகச் செய்வது, இந்த இனிய பிரபந்தமான திருப்பாவையைப் பற்றி இரண்டாண்டுகளுக்கு முன்னர் எளியேன் ஆண்டாள் பாவையும் அழகுத் தமிழும் என்னும் தலைப்பில் எழுதி வெளியிட்டேன்: சங்க இலக்கியப் பாடல்களோடு இன்பத் திருப்பாவைப் பாசுரங்களை ஒப்பீடு செய்து சான்றோர்கள் போற்றும் வகையில் ஆய்வு செய்து வெளியிட்டேன். இந்நூல் தமிழ் நாட்டரசின் பரிசு பெற்றதாகும்.

இப்போது இரண்டாம் பிரபந்தமான நாய்ச்சியார் திருமொழியையும் எழுதி அழகுற வெளியிட முனைந்தேன். இத்திருமொழியோ கோதை கோவிந்தன் மீது கொண்ட காதல் பெருக்கை வெளிப்படுத்துவது. இஃது ஒருநூற்று நாற்பத்து மூன்று பாசுரங்களைக் கொண்டது. பருவ மெய்திய காலந்தொட்டுக் கருணை முகில் வண்ணனைச்

சார்ந்து இன்புறவே தம் வாய்மை உணர்வாலே நாய்ச்சியார் திருமொழியை நயந்திசைத்தார் கோதை. பேய்ச்சியின் முலைப்பாலுண்டு அவளையே! சாய்த்தழித்த மாய பிரானைத் தம் நாய்ச்சியார் திருமொழியில் நடம்புரியச் செய்துள்ளார். முதலில் இசைத்த அருமைத் திருப்பாவைக்கோ இசைந்து, கோதையை ஏற்கக் கோவிந்தன் வரவில்லை. காரணம், கோதைப்பிராட்டி யாரின் மாட்சிமையை உலகுமே அறிந்து போற்ற வேண்டும் என்பதற்காகவே ஆராவமுதன் அமைதியாக இருந்தான். அந்த மாயபிரானே எண்ணி விழைந்துவந்து தம்மை ஏற்கவே மாதர்குல மாணிக்கமான கோதை, அவன் பால் கொண்ட காதல் பெருக்கால் இந்நாய்ச்சியார் திருமொழியை இசைத்தார். இஃதோர் இனிய காதல் ஓவியமாகும்.

இந்த நந்தமிழ் ஓவியத்தில் செந்தாமரைக் கண்ணனின் திறத்தையெல்லாம் வரைந்திசைத்த தோடன்றி அவன் அடியார்க்கு உதவிய நிலையையும், கொடியோரைக் குலைத் தொழித்த வீரத்தையும் எடுத்துக்காட்டியுள்ளார். அவனையே தம் மணாளனாக ஏற்க விழைந்த கோதையைப் பார்த்துப் பெரியாழ்வார் நீ விரும்பிய மாயனை மணாளனாக ஏற்க இயலுமா? என்று கேட்டார். கேட்ட தந்தையிடம் 'அவனைத்தவிர புவியிலுள்ள மானிடரை ஏற்கமாட்டேன்' என்று திட்பமாகக் கூறியவர்,

**"மானிடவர்க் கென்று பேச்சுப் படில்**
**வாழகில்லேன்" என்று பாடினார்.**

இக்கருத்தைத் தாம் இயற்றிய காதல் ஓவியமான, நாய்ச்சியார் திருமொழியில் தெரிவித்துள்ளார், நாய்ச்சியார் என்றால் தலைவி என்பதாகும். தலைவனான தாமோதரனைத் தலைவியாகிய கோதைநாயகி அடைய பாடிய காதல் ஓவியமே நாய்ச்சியார் திருமொழியாகும். இந்த ஞாலத்தில் தாம் விரும்பும் பொருள்-ஒன்றே

என்றார்; அந்த ஒன்றே செந்தாமரைக் கண்ணனைத் தவிர பிறிதொன்றில்லை என்றும் கூறினார்.

முன்பொரு காலத்தில் ஆயர்பாடியில் வாழ்ந்த நங்கைமார்கள் மாயபிரானைப் பிரிந்திருந்தார்கள். அவனைப் பிரிந்திருந்தபோது அவர்கள் பெரிதும் துன்பத்தில் ஆழ்ந்திருந்தார்கள். அப்படியிருந்த அவர்கள் அவனை அடைந்திடப் பல்வேறான செயல்களை, கண்ணபெருமான் விரும்புகின்ற பணிகளை மேற்கொண்டார்கள்; அம்மாயன் விரும்பிடவே அன்பாகத் தம்மோடு வந்தின்புறவே எண்ணிப் போற்றினார்கள். அவர்கள் அன்பாகப் போற்றியதை ஏற்று கந்தே கற்றினம் மேய்த்த கண்ணன், அவர்களுடன் மகிழ்ந்தின்புற்றான். அன்று ஆயர்பாடியிலுள்ள பெண்கள் இன்னமுதனைப்பெற அவர்கள்செய்தபணிகளை அறிந்த கோதைப் பிராட்டியார் அவ்வாறு அவனோடு தாமும் சேர்ந்தின்புறவே விழைந்தார்; ஆயமங்கைமார்கள் கையாண்ட செயலனைத்தையும் ஏற்றுக் கொண்டவர் அந்தப் பாவனையாகவே ஆற்றிட நினைந்தார் கோதை. இங்கே பாவனை என்று கூறியது, வெறும் நடிப்பன்று, மனத்தால் ஆய்ச்சியாகவே மாறி ஒன்றித் தம்மை மறந்து செயலிலே ஈடுபட்டார் அவர். சிவந்த மண்ணில் பெய்த மழைநீர் தன் இயல்பை விட்டு மண்ணின் சிவப்புத் தன்மையைப் பெற்று விடுதல் போலவே வேயர் குலத்துதித்த கோதை ஆயர்குலத்துதித்த ஆரணங்காகவே மாறி ஒன்றிய உள்ளத்தாலே தாம் விழைந்த பரம்பொருளைப் பற்றிட முனைந்தார். மண்ணின் தன்மையால் மாறிய தண்ணீரின் சுவைபோலவே மாற்ற மெய்திய கோதை ஆய்ச்சியாகி, கோவிந்தனை அடைய முயன்றார்,

அன்றைய ஆயமங்கையர்கள் செய்த உபாயங்களை அப்படியே பாவனையாக ஏற்றதைத் தம் காதல் ஓவியத்தில் அழகாகத் தெரிவிக்கின்றார், ஆய்ச்சியர்களோடு தாமும் ஓர் ஆய்ச்சியாக இயைந்து அவனை வேண்டிப்பாடுகின்றார்; புல்லாங்குழல் ஊதி, புவியனைத்தையும் தன்வயப்படுத்தும்

புருடோத்துமனைத் தம் காதல் ஓவியத்தில் காட்சிபடுத்திக் காட்டுகின்றார். கோதை தம் பாட்டோவியத்தைப் பரம்பொருள் பரவசமடையவே பாங்குற வரைந்தார்.

கவிஞர்களிலே மணிமுடியாகத் திகழ்ந்தவர் கோதைப் பிராட்டியார். இசைபட இந்த உலகத்தில் திகழ்வதற்குப் பந்தமுடன் ஆனந்தம் நல்கும் செந்தாமரைக் கண்ணனையே இசைத்தார். கோதையாரின் கொஞ்சும் தமிழ்ப் பாட்டினைக் காதைக் கொடுத்துக் கேட்போரைத் தன்வயப்படுத்தி விடும் என்பது திண்ணம்.

உலகத்தில் உயர்வாகப் பேசப்படும் கலைகள் இரண்டு, அவை 'ஓவியக்கலையும் காவியக்கலையுமேயாகும். ஓவியத்தில் திறம்படத் தீட்டப்படுவது நம்முன்னே பேசப் படுவதாக இருத்தல் கண்டு வியக்கின்றோம். காவியத்தில் கவின் பெறக்காட்டும் கருத்தோவியம் படிப்பவர்கள் மனத்தில் தோன்றி நடித்துக் காட்டுவதாகக் கண்டு களிப்படைகின்றோம்.

இவ்வகையில் உருவகப்படுத்திக் காட்டும் கலைஞர்களோ நாம் போற்றுதற்குரியவர்களாவார்கள். இந்த இருவகைச் சிறப்பினைப் பெற்ற கலைஞர்களுள்ளும் காவியக் கவிஞர்களே மிக உயர்ந்தவர்களாகப் பேசப் படுகிறார்கள். ஓவியக் கலைஞனைக் காட்டிலும் காவியக் கவிஞன் மாட்சி பெற்றவனாகத் திகழ்வதற்கு, எல்லா அற்புதச் செய்திகளைப்பெய்து பொற்புடன் விளங்கப் பொலியக் காட்டிவிடுவான். ஓவியக் கலைஞன் இயற்கையை எழுதிக் காட்டுவானேயன்றி அந்த இயற்கைக் குரிய செடி, கொடிகள் அசைந்தாடுதலைக் காட்டிடவே முடியாது. ஒரு மனிதனை ஓவியக் கலைஞன் அழகாக வரைந்து காட்டிவிடுவான்; அம்மனிதனை அவனால் பேச வைக்கவே முடியாது. ஆனால் காவியக் கவிஞன் இயற்கை யைக் காட்டுவதோடு, அசைந்தாடுவதையும் காட்டிவிடு வான். மனிதனைக் காட்டுவதோடு, அந்த மனிதனையும்

இனிதாகப் பேசவும் வைத்துவிடுவான், ஓவியன் வரைந்து காட்டவியலாத உயிர்ப்புத் தன்மையைக் கவிஞன் எளிதாக, எழிலாகக் காட்டிப் பேசவைத்து விடுவான்,

கவிஞன் வரைந்து காட்டும் பொருள் நம் முன்னே பேசுவதை அறியலாம். இவ்வாறு செவ்வி காட்டிப் பவ்வியமாகப் பாத்திரத்தைப் பேசவைக்கும் ஆற்றல் கவிஞன் பெற்றிருத்தலால் அவன் ஓவியக் கலைஞனைக் காட்டினும் சிறப்புடையவனாகப் பேசப்படுகின்றான், சூரியனால் பார்க்க முடியாத இடத்தையெல்லாம் கவிஞன் தன் கவிதையாலே காட்டி விடுவான். ஆதலால் சான்றோர்கள் கவிஞனையே புவியில் பெருமை சான்றவனாகவே புகழ்ந்துள்ளார்கள், இத்தகைய கவிஞரையே புலவரெனவும் போற்றுவார்கள், இயல்பாக எடுத்தெழுதும் திறன் பெற்ற புலவரை இயற் புலவர் என்றும் உயர்த்திக் கூறுவர் அறிவுடையோர். இத்தகைய நிலையில் இனிது விளங்கும் கோதைப் பிராட்டியார், இயற் புலவரினும் உயர் புலவராக மிளிர்ந்தார். ஆம் அவர் தோன்றியபோதே சுடர்ந்து ஆன்றவிந்தடங்கிய நிலையில் சான்றாண்மை மிக்கவராக விளங்கினார். இவர் தீட்டியருளியப் பாட்டினிலே யாப்பிலக்கணம் தேடிச் சென்று ஓடி ஒட்டிக்கொண்டு ஏவல் புரிவதைப் பார்க்கலாம். நாவலரான கோதைப் பிராட்டியாரின் பாசுரங்களில் பால் போன்ற இனிமையும் தெளிவும் ஒளிகாட்டி நிற்றலையும் காணலாம். நமைக்கவரும் இவர்தம் பாசுரங்களில் யமகம் அமையாமலும் திரிபு தெரியாமலும் மடக்கு இடர் செய்யாமலும் விலகி நின்று, எளிதாக, சுவை பிறங்க, இருத்தல் கண்டு பண்புடையார் பாராட்டும் வகையில் ஆற்றின் நீரோட்டம் போலச் சீராகச் செல்வதைக் காணலாம். இவர் சித்திரக் கவிதையில் சிந்தை செலுத்தாமல் பொருட் செறிவுடைய கருத்துகளையே பெய்து அருமைக் கவிதைகளை அழகோவியமாகவே வரைந்தார்.

சொற் சுருக்கமும் பொருட் பெருக்கமும் இயைந்து நின்று இன்பம் ஊட்டும் வகையில் கோதையின் பாட்டோவியம் இருத்தல் அறியலாம். சொல்லும் செய்திகளை வெல்லமெனப் பெய்து எல்லோரும் போற்றும் வண்ணம் நல்ல கவிதைகளாக நயந்தளித்தார். தெளிந்த நீரோடையின் அடியில் கிடக்கும் பொருள் தெளிவாகத் தெரிதல் போன்று, இவர் கவிதைகளில் உள்ள கருத்துகள் தெளிவாகவே ஒளிகாட்டி நிற்பதைப் பார்க்கலாம். தேனினும் இனிமையாக, மாணிக்கத்தை விட ஒளி காட்டும் மணியாக இவர் கவிதைகள் இலங்கக் காணலாம்.

இவர் பாசுரங்கள் உவப்பையூட்டும் தெவிட்டாத தெள்ளமுதம் என்று, உள்ளத்தால் விழைந்து போற்றிய சான்றோர்கள் இவற்றைக் கொள்ளையின்பம் தருவன என்றும் கோவிந்தனோடு கூட்டி வைப்பன என்றும் ஏத்தினார்கள். இப்புவியை வாழ்விக்க வந்த இவரை ஓவியக் கலைஞராகவும் காவியக் கவிஞராகவும் கனிவுடன் அவர்கள் உயர்த்தியே இனிது பேசுவார்கள். ஓவியரும் கவிஞருமான இவர், தாவி உலகளந்தானைப் படமாக வரைந்தும், அவன் செய்த அருமைப் பணிகளைக் கவிதையால் தீட்டியும் நாய்ச்சியார் திருமொழி என்னும் தம் காதல் ஓவியத்தில் ஒளிரக் காட்டியுள்ளார்.

கோதைப் பிராட்டியார் பாடும் திறத்தை மாதவன் திருவருளால் வாய்க்கப் பெற்றார். அவ்வாய்ப்பை அவனுக்கே பயன்படுத்தி, பாமாலை சூட்டி, வாழ்வியல் மணாளனாக ஏற்க முனைந்தார், நானிலம் புரக்க வந்த அவனை ஏற்றிடவே பாட்டிசைத்தார். பாடும் திறத்தைப் பெற்ற அன்னையார் இன்னமுதனையே பாடு பொருளாக ஏற்றுப் பாடினார், வேறெவற்றையும் நினையாமல் மாயபிரான் ஒருவனையே மகிழ்ந்து பாடினார்; முதலும் முடிவும் அவனே என்று இதயத்தால் உதயமூர்த்தியை உவந்து பாடினார். ஆயிரத்து முந்நூறு ஆண்டுகட்கு முன்னர் பாடிய அவர் பாசுரங்கள் உயிருடன் நிலைத்து

இன்றளவும் மிளிரக் காண்கின்றோம். நலம் புரக்கும் உலகளந்தானைப் போற்றிப் பாடியதால் அவர் பாசுரங்களில் உயிர்நிலை ஊடாடி ஒளிர்தல் காணலாம். அனைத்துச் சீவான்மாக்களையும் நினைந்து காக்கும் பரமான்மாவாகிய பரந்தாமன், கோதை இசைத்தப் பாசுரங்களில் பளிச்சிடுதல் பார்க்கலாம். மனம் ஒன்றி மணிவண்ணனை நினைந்து உருகிப் பாடிய நாய்ச்சியார் திருமொழியோ மிக அருமைப்பாடுடையதாகும்.

கோதை கண்ணபெருமானைக் காதலால் உருகிப் பாடிய நாய்ச்சியார் திருமொழியே அவர் ஆச்சரியமாக வரைந்தளித்த இனிய ஓவியமாகும். ஈடெடுப்பும் இல்லாத வகையில் பீடுடன் வரைந்த காதல் ஓவியம், ஓர் உயிர் ஓவியமாகும். இக்காதல் ஓவியம் போல் ஈடாக இப்பூமியில் எவரும் வரைந்தாரில்லை. இனியும் வரைவது அரிதாகும். உலகம் உள்ளளவும் நிலைத்தும் நலம் பயக்கும் வகையில் கிளைத்தும் இமயம் போன்ற இது தகுதியினை யுடையது. மனித குலம் இனிது போற்றிப் பாடித் தனிச் சிறப்பெய்திடவே புனித ஓவியமாகப் பொலிந்து இலங்க அருளினார். தாம் மட்டும் இன்பமுறக் கருதாமல் பரந்த உணர்வோடு புவியிலுள்ளோர் எல்லோருமே அனுபவித்து அருளானைப் போற்றி ஆக்கம் பெறவே தம் காதல் ஓவியத்தைச் சால்புடன் இசைத்து வழங்கினார். தாம் பெற்ற இன்பம் தரணியெலாம் எய்தி இன்புறவே வேட்கை யுடன் பாட்டாக இசைத்தார்.

இவ்வாறு இனிது இசைத்த தம் காதல் ஓவியமான நாய்ச்சியார் திருமொழியில் முதன் முதலாகக் காமன் உதவியையே நாடி இசைத்தார். காமனே பூமியில் காதல் வேட்கையில் பிரிந்து அவதியுறுபவரைச் சேர்த்து வைப்பவன் ஆவான். எனவே அவனைக் கோடித்துத் தம்மைக் கோபாலனுடன் சேர்த்து வைக்குமாறு வேண்டுகின்றார்.

# கோதை காமனைக் கோருதல்

1. மார்கழித் திங்கள் முழுமையும் நோன்பை
மனமுவந் திசைத்துமே நோற்றும்
கார்முகில் வண்ணன் கோதையை ஏற்கக்
கருதியே வராமையால் காமன்
பேர்தனைப் பாடி தை, மாசித் திங்கள்
பிரியமாய்ப் பூசித்தார்; கண்ணன்
ஆர்வலன் தன்பால் சேர்ப்பிக்க வேண்டி
அகங்குழைந் துரைத்தனர் கோதை!

2. மகிழ்ந்துஊ மத்தை மலரொடு முருக்க
மலரினைக் கொய்தும்முப் போதும்
உகப்புடன் காமன் தன்னையே வேண்டி
உரைத்தனர் மலர்க்கணை தொடுத்தே
இகத்தினைப் புரக்கும் எம்பெரு மான்மேல்
எய்துக ! என்னிடம் வரவே
வகையினைச் செய்க ! என்றனர் கோதை
மகிழ்ந்துமே இசைத்தனர் இனிதே!

3. காமனே நீதான் வந்தெனக் குதவி
கனிந்துமே செய்யாமல் போனால்,
பூமியை உழுவோன் எருதுகள் தம்மைப்
போற்றியே காவாமல் விரட்டித்
தீமைசெய் தனன்போல் நீயும்தான் ஆவாய்த்
தெளிந்துநீ என்னிலை அறிந்து
தாமரைக் கண்ணன் தன்னிடம் சேர்க்க
தயவுசெய் என்றனர் கோதை!

## வேங்கடவன்பால் சேர்ப்பாயாக !

தலைவனாகிய கண்ணபெருமானிடம் தலைவியாகிய கோதைப் பிராட்டியார் அகத்துறை இலக்கண மரபில் தொண்ணூற்றாறு வகைப் பிரபந்தங்களில் ஒன்றான நாய்ச்சியார் திருமொழியால் காமனிடம் முறையிடு செய்கின்றார். இதை அறுச்சீர்க்கழிநெடிலடி ஆசிரிய விருத்தப்பாவால் பாடுகின்றார்.

முதலில் காமதேவா என்று விளித்து நீ! தை மாதம் முழுமையும் இங்கே வந்து இருக்கவேண்டும். அப்படி வந்திருப்பதற்கு இனியஓரிடத்தைத் தேர்ந்தெடுத்துள்ளேன்; இதில் மண்டல பூசை செய்யவே குளிர்ந்த அழகிய மண்டலா காரமான மேடையமைத்துள்ளேன். இவ்வாறு யான் அமைத்த செவ்வியுடைய மேடைக்கு நீ நடந்து வர வேண்டும். அப்படி வருவதற்கு மாசித்திங்கள் முதல் பதினைந்து நாள்கள் வரை மிகச் சிறிய மணல்களைப் பரப்பித் தெருக்களை அழகு செய்தேன்.

உன்னைத் தொழுதால் பயன் ஏற்படும் என்றும் தான் எண்ணியது நிறைவேறும் என்றும் கருதியே உன்னையும் உன் தம்பி சாமனையும் வணங்குகின்றேன். ஆசையால் பூசைசெய்து உங்களைப் போற்றும் எனக்குக் கேசவன் என்னும் கேள்வன்கிட்டிட வழி செய்யவேண்டும். அவன் திருவேங்கடமலையில் சிறப்பாக எழுந்தருளியுள்ளான். அந்த அருளாளனிடமே என்னைச் சேர்ப்பிக்க வேண்டும் என்று வேண்டுகின்றார். தம் வேண்டுதலுக்குத் துணை நிற்கும் காமனிடம் தாம் ஓவியமாக வரைந்த பாவியத்தை இசைக்கின்றார்.

''தையொரு திங்களும் தரைவிளக்கித்
தண்மண்டல மிட்டு மாசிமுன்னாள்,
ஐயநுண் மணற்கொண்டு தெருவணிந்து
அழகினுக் கலங்கரித்து அனங்கதேவா.

**உய்யவு மாங்கொலோ வென்றுசொல்லி**
**உன்னையும் உம்பியையும் தொழுதேன்,**
**வெய்யதோர் தழலுமிழ் சக்கரக்கை**
**வேங்கடவற் கென்னை விதிக்கிற்றியே!'' (1)**

என்று தம் மனக்கருத்தை வெளிடுப்படுத்தினார்: எம்பெருமானிடம் சேர்க்கும் ஆற்றல் சான்றவன் காமதேவனே! என நினைந்து அவனைத் தைமாதம் முழுதும் போற்றி வேண்டுகின்றார். அவன் வாராமையால் பின்னர் மாசிமாதத்தில் பதினைந்து நாள் வரையும் அவன் வரும் தெருவைத் தூய்மை செய்து நுண்மையான மணலைக் கொண்டு அலங்கரித்தார். குளிர்ச்சி மிகுந்த நிலையில் மண்டல மேடையை அமைத்தும் விளக்கேற்றிப் பூசித்தார். இவ்வாறு பூசிக்கும் போது ஓர் ஐயப்பாடு கோதையின் மனத்தில் தோன்றுகிறது. அது, பரம்பொருளோடு சேர்ப்பிக்கும் திறன் காமன் பெற்றிருக்க முடியுமோ? என்பதாகும். இதை அவனிடமே கேட்க விழைகின்றார். அவனைப் பார்த்து

**''அனங்கதேவா உய்யவு மாங்கொலோ ?''**

என்று கூறும் தொடரால் கேட்கின்றார். இவ்வாறு ஐயப்பாடு கொண்டவர்க்கு மீண்டும் எண்ணித் துணிக கருமம் என்ற கருத்துத் தோன்றியதால் தம் ஐயத்தை விடுத்து, உன்னையும் உன் தம்பியையும் தொழுகின்றேன் உதவி செய்வீர்களாக! என வேண்டுகின்றார்.

முதலடியில் ''தையொருதிங்கள்'' என்றதில் தை மாதத்தையும் அம்மாதத்தில் வானில் தோன்றியிருந்த முழுமதியையும் குறித்தார். வானில் முழுமதி தோன்றி ஒளிவீசும் நாளிலேதான் கோதை தம்நோன்பை நோற்க முயல்கின்றார். திருப்பாவை நோன்பை நோற்கும் போதுகூட மார்கழி மாதத்தில் முழுமதி ஒளிர்ந்திருந்த நாளிலேதான் நோற்றார் என்பதை, மார்கழித் திங்கள் மதிநிறைந்த நன்னாள் என்று பாடித் தெரிவிப்பதால்

அறிகின்றோம். இங்கே தை ஒரு திங்கள் என்று சுட்டுவதால் முழுமதி ஒளிரும் நாளே எம்பெருமானைப் போற்றி நோற்பதற்குரிய நாளாகும் என அவர் கருதியதால் அந்நாளிலேயே காமனையும் பூசிக்கின்றார். ஆம் கோதை பிராட்டியாரும் ஆடிப்பூரத்தில் முழுமதிநாளில் தோன்றினார். அப்படித் தோன்றியவர் தம் பணிகளைத் தொடங்குகின்ற நாளிலும் முழுமதி ஒளிர வேண்டும் எனக் கருதியிருத்தல் கூடும். அந்த ஒளிநாளில் தம் பணியைச் செய்ய முற்பட்டார். இப்பாசுரத்தில் தரை விளக்கி என்னும் தொடரால், பூசை செய்யும் இடத்தை மெழுகிக் கோலமிட்டு அழகு செய்திருந்த நிலையைக் குறித்தார். ''தண்மண்டலமிட்டு'' என்றதால் பெரியவட்ட வடிவமாக மேடையைக் குளிர்ச்சியாக இருக்கும் வகையில் அமைத்ததைக் குறித்தார்.

பெரியமணலைக் கொண்டு தெருவை அலங்கரித்தால் காமன் நடந்து வரும்போது காலை உறுத்துமே என்று சிறியமணலைப் பயன்படுத்தியதைக் குறிக்க ''ஐயநுண் மணல் கொண்டு" என்ற தொடரை ஆண்டார். "அணிந்து" என்னும் சொல்லைப் பயன்படுத்தியபின் அழகு என்னும் சொல்லை ஏன் பயன்படுத்தினார்? என்றால், அழகை மிகுதி படுத்திக் கூறவேயாகும். ''அணங்கதேவா'' என்றதில் காமன் உருவமற்றவன் என்பதைக் குறித்தார். சிவபெருமானால் காமனின் உடல் எரிந்து போனதை இதில் நினைவுபடுத்துகின்றார். திருப்பாவையில் பதினேழாம் பாசுரத்தில் பலதேவனை விளித்து "உம்பியும் நீயும் உறங்கேல்" என்று கூறிய கோதை இங்கே காமனை விளித்து "உன்னையும் உன் தம்பியையும் தொழுதேன்'' என்றார். திருப்பாவையில் பல தேவனைக் கூறியதைப் போன்று இங்கே சாமனைக் கூறினார். கண்ணபெருமான் ஒளியையும் நெருப்பையும் உமிழ்கின்ற சக்கரத்தைக் கையில் வைத்து அன்பருக்கு நன்மையும், பகைவர்க்குக் கொடுமையும் புரிபவனாக இருந்ததைக் கோதை விவரிக்கின்றார். அவன் சமநோக்குடைய இமையோர் தலைவனாவான் எனவும்

சித்திரிக்கின்றார், அவன் அழகுடன் சுழலுகின்ற, ஒளியை உமிழ்கின்ற சக்கரத்தைக் கையிலே ஏந்திக்கொண்டு திருவேங்கடமலையில் நிற்கின்றான். அவனிடத்திலே தம்மைச் சேர்க்குமாறு காமனையும் சாமனையும் வேண்டினார்.

இப்பாசுரத்தின் இறுதிச்சீரில் "விதிக்கிற்றியே" என்றதில் "ஏ" என்னும் ஏகாரத்தை அசையாகவும்; வினாவாகவும் கொள்ளலாம். இங்கே வினாவாகவே கொண்டு எம்பெருமானிடம் என்னைச் சேர்த்து வைக்க மாட்டாயா? எனக் கோதை காமனைக் கேட்பதாக அமைந்திருத்தல் காணலாம்.

## புள்ளின் வாய்பிளந்தானிடம் சேர்ப்பாயாக !

மன்மதன் அனைவரையும் மலரம்பினாலே வசப் படுத்தும் ஆற்றல் பெற்றவன். எனவே, அவனை நோக்கிக் கோதைப்பிராட்டியார் கண்ணபெருமான் மீது மலர் அம்பினை எய்தி அவனைத் தம்மிடம் சேர்க்குமாறு வேண்டுகின்றார். அவனை நோக்கி வெண்மையான மிகச் சிறிய மணலைக் கொண்டு தெருவை அலங்கரித்தேன்; ஏன் என்றால் மெத்தென நீ நடந்து வரவே இவ்வாறு அழகு படுத்தினேன்! என்கின்றார்.

கீழ்த்திசை வெளுப்பதற்கு முன்னரே நான் நதிக்குச் சென்று நீராடினேன்; முட்களில்லாத சிறந்த சுள்ளிகளைக் கொண்டு வந்து அடுக்கி நெருப்பிட்டுத் தீயை வளர்த்தேன்! இம்முயற்சியில் தலைப்பட்டதற்கு உன் உதவியைப் பெறவேயாகும். நீ வந்து என் எண்ணத்தை நிறைவேற்றி வைப்பாயென்றே உன் வருகையைக் கருதி நோன்பு நோற்கின்றேன்!

நோற்கும் என் நோன்பு ஈடேற நீ மலர் அம்பை ஏந்திக் கொண்டு வருவாயாக! தேனைச் சொரியும் நிலையிலுள்ள

மலர்களைக் கொண்டு தயாரித்த அம்புகளை வில்லில் தொடுத்து என் நாயகன் மீது விடுவாயாக! விடும்போது கடல்வண்ணன் திருநாமத்தை நெஞ்சாரச் சொல்லிக் கொண்டே விடுவாயாக! அந்தக் கடல்வண்ணன் பகாசூரனுடைய வாயைப் பிளந்து அழித்தவன், எனவே அவனையடையவே இந்த நோன்பால் உன்னைப் பூசிக்கின்றேன் என்றார். இதை அழியாத ஓவியமாக

''வெள்ளைநுண் மணற்கொண்டு தெருவணிந்து
வெள்வரைப்ப தன்முன்னந் துறைபடிந்து,
முள்ளுமில்லாச் சுள்ளி யெரிமடுத்து
முயன்றுன்னை நோற்கின்றேன் காமதேவா,
கள்ளவிழ் பூங்கணை தொடுத்துக்கொண்டு
கடல்வண்ணன் என்பதோர் பேர்எழுதி'
புள்ளினை வாய்பிளந்தான் என்பதோர்
இலக்கினில் புகவென்னை யெய்கிற்றியே! (2)

என்று வரைந்து பாடுகின்றார். வெண்மையான சிறிய மணலைக் கொண்டு தெருவை அழகு செய்தல் காலையில் நதிக்குச் சென்று நீராடுதல், பின்னர் எரியோம்பலை வளர்த்தல் முதலானவை காமதேவனுக்காக நோன்பு நோற்கும்போது செய்யவேண்டிய முறைகள் ஆதலால் அந்த நியதியை இங்கே எடுத்தாண்டார்.

இந்த நியதில் யான் நோன்பு நோற்கும்போது தேனைப் பொழியும் பூங்கணை தொடுத்துக் கொண்டு காமதேவா! நீ வரவேண்டும். அந்தப் பூங்கணையில் அரவிந்தம், அசோகம், மா, நவமல்லிகை, கருநெய்தல் ஆகிய ஐந்து மலர்களை இணைத்து வைக்கப்பட்டிருத்தல் வேண்டும். அப்படி அழகுறச் செய்யப்பெற்ற அந்த அம்பில் கடல்வண்ணன் பெயரும் எழுதியிருத்தல் வேண்டும்; அந்த அம்பினையே நீ விடவேண்டும்.

அப்படி விட்டால் காதல் கொண்ட கோதைக்காக விடப்பெற்ற கணைகள் என்று அக்கண்ணபெருமான் உணர்ந்திடுவான், உணர்ந்திடும் அவன் என் நினைவாகவே இருப்பான்; அப்போது என்னை நீ அவனிடம் சேர்த்தலே சிறப்பாகும் என்று காமவேளிடம் முறையீடு செய்கின்றார். காமன் தம் எதிரிலே இல்லை என்றாலும் அவனுக்காக நோன்பு நோற்கும் கோதை அவன் எதிரில் இருப்பதாகவே முன்னிலைப்படுத்தி மேற்குறித்த செய்தியினைக் கூறுகின்றார்.

இப்பாசுரத்தின் இரண்டாம் அடியில் "வெள்வரைப் பதன்முன்னம்" என்றதற்கு, சிலர் சூரியன் தோன்றி வெளிச்சம் காட்டுவதற்கு முன்பே என்று பொருள் கொள்வர். இவ்வாறு கொள்ளாமல் இராப்பொழுது புலர்வதற்கு முன்பே என்று பொருள் கொள்வதே சால்பு.

இப்பாசுரத்தின் கடைசியடியில் "புள்ளின் வாய் பிளந்த" என்ற தொடர் மொழியால் கண்ணபிரானின் பேராற்றலை விளக்குகின்றார். கம்சனால், கண்ண பெருமானை அழிக்க ஏவப்பட்ட பகாசூரன் கொக்கு வடிவம் தாங்கி, யமுனை நதிக்கரைக்கு வருகின்றான். அங்கே பலராமனோடு கண்ணபிரான் மாடுகளை மேய்த்துக் கொண்டிருக்கும் போது கொல்ல எத்தனித்த பகா சூரனாகிய கொக்கின் வாயைப் பிளந்து மாயபிரான் மாய்க்கின்றான். இந்தச் சேதியைத் திருப்பாவையில் "புள்ளின்வாய் கீண்டானை" என்று பாடியுள்ளார். ஏன் மீண்டும் இங்கு நினைவு கூர்ந்தார் என்றால்; வந்த கொடியோனை மீண்டும் திரும்பிப் போகாதவாறு நொடிப் பொழுதில் அங்கேயே சாய்ப்பவன் என்பதை எண்ணிப் பார்க்கவே கூறியதாகும். இச்செய்தியை அடுத்தடுத்து நினைவுபடுத்துவதற்குக் காரணம் அருளாளன் திறத்தை மீண்டும் மீண்டும் போற்றிப் பாடிடவேயாகும்; புகழ்ந்திடவேயாகும்.

## வேங்கடவனிடம் சேர்ப்பாயாக !

மன்மதனே மிகுந்த மணமுடைய ஊமத்த மலர்களையும் முருக்க மலர்களையும் கொண்டு மூன்று காலமும் உன்னடியை வணங்குகின்றேன்: முன்பு பொய்யான தெய்வம் என்று சொல்லி மனங்கொதித்து யான் உன்னைப் பேசினேனில்லை. உன் கவுரவத்தை அழிக்கின்ற வகையில் வாய் கொண்டு குறை கூறினேனில்லை, நிந்தித்தேனில்லை. எனவே, இவ்வாறு இருக்கின்ற எனக்கு நீ உதவி செய்திடுதல் வேண்டும்.

மலராத நிலையில் கொத்துக் கொத்தாகவுள்ள பூக்களைக் கொண்டு தயாரித்த அம்பினைத் தொடுப்பாயாக! தொடுக்கும்போது கோவிந்தனின் திரு நாமத்தை நெஞ்சில் பதிய வைத்துக் கொண்டு தொடுப்பாயாக! அன்புடையவனான திருவேங்கடமுடையான் என்கின்ற விளக்கினையே யான் சேர்ந்தனுபவித்திடவே நீ இட்டுச் செல்வாயாக! என்று கோதை காமனிடம் பேசுவார். பூங்கணைகள் தொடுப்பவன் மன்மதன், யார் மீது அம்பினைத் தொடுக்கின்றானோ அவரை வயப்படுத்தி விடுவான் அவன். வயப்படுத்தியவரை யார் வேண்டியனுபவிக்க விழைகின்றாரோ, அவர்பால் சேர்ப்பிப்பான். அத்தகையவனிடமே கோதை தம் நிலையைக் கூறுகின்றார். அப்படி முறையிட்டதை ஒரு பாட்டோவியமாகவே வரைந்தார் அதை:

**மத்தநன் னறுமலர் முருக்கமலர் கொண்டு**
**முப்போதும் உன்னடி வணங்கி,**
**தத்துவ மிலியென்று நெஞ்செரிந்து**
**வாசகத் தழித்துன்னை வைதிடாமே,**
**கொத்தலர் பூங்கணை தொடுத்துக் கொண்டு**
**கோவிந்தன் என்பதோர் பேரெழுதி,**
**வித்தகன் வேங்கட வாணனென்னும்**
**விளக்கினிற் புகவென்னை விதிக்கிற்றியே! (3)**

என்று தெரிவிப்பார். மன்மதன் விரும்புவதையே தெரிந்த கோதைப் பிராட்டியார்; அவனை வழிபடுவதற்குரிய மலர்கள் ஊமத்தை மலரும் முருக்கை மலரும் ஆகும். இவற்றைக் கொண்டே அவனைப் பூசிக்கத் தலைப்படுகின்றார்; எப்போதெல்லாம் பூசிக்கின்றார்? முப்போதும் பூசிக்கின்றார். ஆம் காலைப்போது உச்சிப்போது மாலைப் போதாகிய முக்காலங்களில் அவனைப் பூசிக்கின்றார்.

இரண்டாமடியில் நான் வந்து உன்னை வணங்குவதற்கேற்ப எனக்கு நன்மைகிட்டாமல்போனால், என் நெஞ்சம் கொதிப்படைந்து நீ பொய்யன் என்றே ஊரிலுள்ளவர்கள் பழித்துப் பேசுமளவில் பறைசாற்றும் என்றார். எனவே, பழிக்கே ஆளாகாத வகையில் நீ எனக்கு உதவி செய்வாயாக! என்று கூறுகின்றார். இதைத் "தத்துவமிலி" என்ற கருத்தால் விளம்புவார். இஃது உண்மைக்கு மாறானவன் என்று மன்மதனைக் குறிக்கும் சொல்லாகும்.

முன் பாசுரத்தில் கடல் வண்ணன் "என்பதோர் பேரெழுதி என்றவர், இப்பாசுரத்தில் "கோவிந்தன்" என்பதோர் பேரெழுதி என்று பாடினார். "வித்தகன்" என்று குறித்ததால், எம்பெருமான் எண்ணிறந்த சிறந்த குணங்களால் போற்றத்தகுந்த வகையில் ஏற்றம் பெற்று விளங்குபவன் என்பதை விளக்கவே இச்சொல்லை ஆண்டார். "விளக்கு என்று திருவேங்கடமுடையானைக் கூறியதில் அவன் திருவேங்கடத்தின் மலைமேலிருந்தாலும், ஞாலமுழுதும் தெரிய ஒளி வீசித்திகழ்கின்றான் என்பதைக் காட்டவே எடுத்தாண்டார்.

இக்கருத்தைத் திருமங்கையாழ்வார்

"வேடார் திருவேங்கடம் மேய விளக்கு"

என்று பாடியிருத்தலால் வேங்கடவாணன் திருவேங்கட மலையிலிருந்து கொண்டு உலகமுழுவதும் ஒளியைப் பொழிந்து நலஞ் செய்கின்றான் என்பதை அறியலாம். "வாணன்" என்பது வாழ்நன் என்பதன் மரூஉ என்றறிக!

இக்காதல் ஓவியத்தில் கோவிந்தனாகிய வேங்கட வாணனை வரைந்தார். வரைந்த பெருமானையே நிலைறவாகப் போற்றி நெஞ்சுவந்து அவனை ஏற்றுக் கொள்ளவே காமதேவன் உதவியை வேண்டினார்.

## துவரைப் பிரானிடம் சேர்ப்பாயாக !

துவரைப் பதியென்பது துவாரகைக்குப் பெயர்; அந்தத் துவாரகாப்புரிக்குத் தலைவன் தயாபரனான கண்ண பெருமான். அப்பதியின் தலைவனே எனக்குத் தலைவனாக வரவேண்டும் என்று கோதைப் பிராட்டியார் நோன்பு நோற்றார். நோற்றவனையே ஏற்க விழைந்தார், அதற்கு மன்மதனின் உதவியினை வேண்டுகின்றார். தம் ஆன்ம பலத்தாலே ஆராவமுதனைக் கோதையால் ஏற்கவியலும்; என்றாலும் போற்றுதற்குரிய அம்மாயனை அடைய விழைந்த வேகத்தின் காரணத்தாலே தம் மனத்தில் ஏற்பட்ட ஆதங்கத்தாலே காமவேளை வேண்டினார். இயலாதவர்களுக்குக் கைத்தடி உதவியாயிருத்தல் போன்று காமன் உதவியைக் கோதை வேண்டினார்.

விரைவையுடையவர்கள் தம்மிடத்தில் உள்ள திறத்தை மறந்தே பிறரை உதவிக்கு நாடுதல் போல, கோதை காமவேளை வேண்டினார். யாரை நாயகனாக ஏற்க விரும்புகின்றார்களோ, அவர்கள் தம்மை நினையாதவர் களாக இருந்தால் அவர்களை வசப்படுத்தி எண்ணுகின்றவர் களிடத்தில் சேர்ப்பிக்கும் திறன் பெற்றவனே காமன். ஆதலால் கோதை அந்தக் காமனை வேண்டினார்; பாடி அவன் மனம் உருகவும் வந்துதவிடவும் இசைத்தார்.

தம்மீது அம்மாயனுக்குக் காதல் ஏற்பட மன்மதனே நீ செய்வாயாக! என்றார். அம்மாயபிரான் மீது உன் மலர் அம்பினைத் தொடுத்துப் பொழிவாயாக என்றார். அவன் என்னை நினைக்கின்ற வகையில் அந்த மலரம்பினை விடுவயாக என்கின்றார். நீண்ட நாள்களாக எனக்கு உதவி

செய்யவே நீ கருதியிருந்தாய்; எனவே இப்போதே அந்த உதவியினைச் செய்வாயாக என்றார். நீ எனக்கு உதவி செய்யவே உன்னைக் கோரிப் பூசிக்கின்றேன். பூசிக்கின்ற இடத்தில் உள்ள சுவரில் உன் பெயரினை அழகாக எழுதி வைத்துள்ளேன். நலம் தோன்ற மீன் கொடிகளையும், குதிரைகளையும், வெண்சாமரம் வீசுகின்ற பெண்களையும் கரும்பு வில்லையும் உனக்கு உரியனவென்று நீ காணவே எழுதிக் கட்டிவைத்தேன். இவற்றையெல்லாம் இங்கே நீ அறியவே இனிது அமைத்தேன். எனவே, நான் வேண்டுவதை ஈண்டுவந்து நன்மை புரிவாயாக!

இளம் பருவம் தொடங்கிக் கண்ணபெருமானையே நான் அடைய விரும்புகின்றேன். எப்போதும் அப்பெருமாயவனையே விரும்புகின்ற என் மார்பகங்கள் கிளர்ச்சியினால் எழுச்சியுற்று நிற்கின்றன. அவை உவப்புடன் இன்னமுதனே அனுபவிக்க வேண்டுமென்ற ஆவலால் விழைவு கொண்டுள்ளன. இவை அவனுக்கே உரியன என்று கருதுகின்றன.

எனவே, இக்கருத்தினை மன்மதனே உன்பால் உரைத்தேன். அதுவும் உன்னை வணங்கியே இதை உரைத்தேன். இத்தகைய மனநிலையை உடைய எனக்கு நன்மை ஏற்பட நீ வந்து சீக்கிரமாக உதவி புரியவேண்டும். தாமதம் செய்யாமல் காமதேவா கடிதில்வந்து, துடிக்கின்ற என்னைப் பரந்தாமனிடம் துரிதத்தில் சேர்ப்பாயாக எனக் கோரும் இக்கருத்தினைச்

**சுவரிற் புராணநின் பேரெழுதிச்**
**சுறவநற் கொடிக்களும் துரங்கங்களும்,**
**கவரிப் பிணாக்களும் கருப்புவில்லுங்**
**காட்டித்தந்தேன் கண்டாய் காமதேவா,**
**அவரைப் பிராயந் தொடங்கி யென்றும்**
**ஆதரித் தெழுந்தஎன் தடமுலைகள்**
**துவரைப் பிரானுக்கே சங்கற்பித்துத்**
**தொழுது வைத்தேன் ஒல்லை விதிக்கிற்றியே! (4)**

என்று ஓவியம் போல் எழுதிப் பாடுவார் கோதை. இதில் கண்ணபிரானையே காண ஆவல் மேவிப் பாடுவதைக் காணலாம். அப்படி ஒப்பிலாத அந்த அப்பனை எனக்குக் காமதேவன் காட்டுவானேயானால் உதவி செய்த அவனை என்றும் மறவாமல் நினைப்பேன் என்று கூறும் கோதை

''சுவரில் புராணநின் பேரெழுதி''

என்னும் தொடர்மொழியில் சுட்டினார். ''புராண'' என்றது பிரிந்தவர்களைக் கூட்டிவைக்கும் வல்லமை படைத்தவன் காமன் என்பதைப் புராணங்களில் குறிக்கப் பெற்றுள்ளன என்பதைக் குறித்தார்.

''பிணா'' என்னும் சொல் பெண்டிரைக் குறித்துக் காட்டும் பொதுச் சொல்லாகும். ''சுறவம்'' என்றது காமனின் மீன் கொடியைக் கூறினார். கோதை இதில் கண்ணபிரானைத் தவிர எனக்கு வேறொரு விருப்பமில்லை யென்று தெளிவாகவே விளம்பினார். இதை,

''அவரைப் பிராயம் தொடங்கி''

என்றதால் இளமைக்காலம் தொடங்கி உளமார கண்ணனையே தேசித்தும் பூசித்தும் வருகின்றேன் என்றார்.

'தொழுதுவைத்தேன்' என்னும் தொடர்மொழியைக் காமதேவனிடம் கூறியதாகக் கருதுதல் கூடாது. இது தம் மார்பகத்தின் நிலை பற்றிக் கூறியதாகும். கண்ண பெருமானை எண்ணி அவனை அடைய காதல் மிகுந்ததால் மார்பகங்கள் வேட்கையால் கிளர்ந்து எழுந்தன என்பதை இத்தொடரால் அருமையாகக் காட்டினார்; அஃதாவது என் மார்பகங்களை ஆராவமுதன் அனுபவிக்கவேயான் எண்ணியிருந்தேன் என்பதை, தொழுது வைத்தேன் என்று கூறியிருத்தலால் அறிலாம்.

இடுகின்ற சிறந்த எருவால் பயிர் செழித்து வளர்வதைப் போன்று கண்ணனையே அடையவேண்டும் என்ற

மனவுணர்வு மிகுதியாலே என்னுடை மார்பகங்கள் கிளர்ந்து எழுந்து நின்றன என்பதை

"ஆதரித் தெழுந்த என்தட முலைகள்
துவரைப் பிரானுக்கே."

என்று பாடுவதால் தெரிவித்தார். இக்காதல் ஓவியத்தில் எம்பெருமானாகிய துவரைப் பிரான் தன்னையே அழகுபட வரைந்தார். வரைந்ததில் தம் மார்பகத்தை அனுபவிக்க வேண்டியவன் அவன் ஒருவனே என்ற விவரத்தையும் தெரிவித்தார். இதனால் அவனன்றி வேறொன்றையும் நினையாதவர்; போற்றாதவர் கோதைப் பிராட்டியார் என்பதை நன்கு அறிந்து கொள்ளலாம்.

## உத்தமன்பால் என்னை உய்விப்பாயாக !

இன்னமுதன்தான் நான் விரும்பும் அன்பனாவான், அவனையே யான் மணப்பேன்; மனிதர்களை நினைக்காத மனநிலையையே பெற்றுள்ளேன். தெய்வத்தில் கூட நான் நினைக்கும் தெய்வம் கண்ணபிரானாவான்; அந்த மாயவனைத்தான் மணப்பேனே அல்லாமல் வேறு தெய்வத்தை நினைத்தேன் இல்லை.

கோவிந்தனைத் தவிர பிற தெய்வத்தை நாவாரப் பாடமாட்டேன்; அப்படியிருக்க, மனிதராகத் தனிச் சிறப்புடையவராக எவராக இருந்தாலும் அவரை நான் ஏற்பேனா? மாட்டேன் என்கின்றார். இதையேதான் மன்மதனிடத்திலும் கூறுவேன். காமனைப் பூசிக்கும்போது அவன் நேரில் வந்தால் இதைச் சொல்லும் முடிவோடிருந் தார் அவர்.

விண்ணுலகில் வாழ்கின்ற தேவர்களை நோக்கி மண்ணுலகில் வாழ்கின்ற பிராமணர்கள் யாகம் செய் கின்றார்கள். அந்த யாகத்தில் உண்டாகும் அவிர் பாகத்தைப் பயன்படுத்துவதற்கு முன்னர் ஒரு நரி மூக்கால்

மோந்தும் அதைத் தாண்டிக் கடந்தும் உருட்டியும் தூய்மையைக் கெடுத்து விட்டதாலே அப்பிராமணர்கள் பயன்படுத்தாமல் தூக்கி எறிவதைப் போன்று, நானும் அவனுக்காக உள்ள என் மார்பகத்தைப் பயனற்றதாக்கி விடுவேன் என்கின்றார்; அழகிய திருமேனியில் ஒளிரும் சக்கரத்தையும் ஒலிக்கும் சங்கையும் அணிந்துள்ள ஆராவமுதனுக்காக ஆசையோடு மேவி கிளர்ந்தெழுந்துள்ள என்னுடைய பருத்த மார்பகங்கள், அவனுக்கல்லாமல் மனிதர்களுக்கு உரியவை என்கின்ற பேச்சு நாட்டில் பேசப்படுமேயானால், நான் உயிர் வாழமாட்டேன்; ஆம், அன்றே என் உயிரை விடுவேன் என்று கூறும் கோதை தம் உறுதியை ஓர் ஓவியமாக

"வானிடை வாழுமவ் வானவர்க்கு
மறையவர் வேள்வியில் வகுத்தஅவி,
கானிடைத் திரிவதோர் நரிபுகுந்து
கடப்பதும் மோப்பதும் செய்வதொப்ப,
ஊனிடை யாழிசங்குஉத்தமர்க்கென்று
உன்னித் தெழுந்தவென் தடமுலைகள்,
மானிடவர்க் கென்றுபேச்சுப் படில்,
வாழகில்லேன் கண்டாய் மன்மதனே" (5)

என்று வரைந்து பாடுவார். இப்பாசுரத்தால் ஓர் உவமையைப்பயன்படுத்தித் தம் காதல் வேட்கையினை உரைக்கக் காணலாம். தேவர்களுக்காகச் செய்யும் வேள்வியில் தோன்றிய அவிர்பாகத்தை அற்ப விலங்கான நரி தன் காலால் கடந்தும் மூக்கால் மோந்தும் பாழ் செய்வதைப் போன்று கண்ணபிரானுக்காகக் கிளர்ந் தெழுந்துள்ள என் மார்பகங்களை மனிதர்களுக்கு உரியனவாக்கப் பேசுவார்களேயானால், கேட்ட அப்போதே தப்பாமல் மாய்வேன் என்று தாம் எம்பெருமான் மீது கொண்ட உறுதியான காதல் வேட்கையை வெளிப்படுத்தினார். நரி அவிர்

பாகத்தைக் கடந்தும் மோந்தும் சென்றதேயல்லாமல், நாவால் நக்கியோ வாயால் சுவைத்தோ சிறிதும் அனுப விக்காத அவிர்பாகத்தைத் தேவர்களுக்குப் பயன்படுத் தாமல் வீசி விடுதல் போன்று;

என்னை மனிதர்களுக்காகப் பேசுவார்களேயானால், அப்பேச்சு என் செவியில் விழுமேயானால் அப்போதே அழிந்து படுவேன் என்கின்றார் கோதை. கண்ண பெருமானைத் தவிர வேறொருவரை நினையாத கோதை மனிதர்களை எவ்வாறு ஏற்க விழைவார்? தாம் கொண்ட காதலுக்கு மாசு ஏற்படின், கற்பின் நிலையோ கெடின் அன்றே மாய்வேன் என்கின்றார், இது குறித்துப் பிறர் பேசினாலே போதும் அப்போதே தம் கற்புக்கு மாசு ஏற்பட்டு விட்டதாகவே கருதி மாய்வேன் என்கின்றார். பிறிதோரிடத்தில், "சிறுமானிடவரைக் காணில் நாணுங் கொங்கைத் தலமிவை நோக்கிக்காணீர், கோவிந்தனுக் கல்லால் வாயில் போகா," என்று பாடுவார். இதில் எங்குமுள்ள எம்பெருமான் சங்கொடு சக்கரக் கையனா கவே உள்ளான் என்று தெள்ளத் தெளிவாகக் காட்டினார். நாம் அவனைப் போற்றவும் உணர்த்தினார்.

## முகில்வண்ணனிடம் சேர்ப்பாயாக!

நன்மை புரியவரும் மன்மதனே! என் கோரிக்கையைக் கேட்டறிவாயாக! அழகுடைய வடிவைப் பெற்றவராயும், இளமை நலம் கொண்டவராயும், காம நூல் கூறும் கருத்து வழி நிற்பவராயும், அந்தக் காம சூத்திர நெறியினைச் சிந்தையில் கொண்டு செயல்படுபவராயும் உள்ளவர்களின் திறத்தை யான் உணர்ந்துள்ளேன்.

அவர்கள் கூறிய நெறியில் நின்று நாள்தோறும் நீ வரும் வழியில் எதிர் நோக்கியே உன்னை வரவேற்கும் முகத்தான் பங்குனி மாதத்தில் நல்ல திருநாளில் நோன்பு நோற்கின்றேன். இந்த நோன்பை யான் நோற்கின்ற காரணம் உனக்குத் தெரியுமா?

கருவுற்று நீரைத் தாங்கி வருகின்றமேகத்தைப் போன்ற எழில் நிறத்தையுடையவனும், காயாம் பூப் போன்ற அழகையுடையவனும் காக்கணாம் பூப் போன்ற பளப் பளப்பைப் பெற்றவனுமாகிய அவன் தான் செந்தாமரைப் பூப்போன்ற சிரித்த முகத்தையுடையவனாவான். தெளிந்த ஒளியையுடைய அவன் கண்களினாலே என்னை நோக்கி விருப்பமுடன் பார்க்க வேண்டும். பார்ப்பவனோ விருப்ப முடன் வந்து ஏற்க வேண்டும் என்று காமனிடம் கோதையார் கனிவுடன் கூறுகின்றார் இதையோர் கவர்ந்திழுக்கும் ஓவியமாக.

உருவுடையார் இளையார்கள் நல்லார்
ஓத்துவல்லார்களைக் கொண்டு, வைகல்
தெருவிடை யெதிர்கொண்டு பங்குனிநாள்
திருந்தவே நோற்கின்றேன் காமதேவா,
கருவுடை முகில்வண்ணன் காயாவண்ணன்
கருவிளை போல்வண்ணன் கமலவண்ணத்
திருவுடை முகத்தினில் திருக்கண்களால்
திருந்தவே நோக்கெனக் கருளுகண்டாய்'' (6)

என்று பாடி வரைந்தார், இதில் தாம் நோற்பதை முன்னோர் காட்டிய வழியினில் நோற்பதாகப் பேசுவார். அழகோடும் இளமை நலத்தோடும், காம சாத்திரம் கூறுகின்ற நெறியோடும், காம சூத்திரத்தில் வல்லார்களை முன்னிட்டுக் கொண்டும் நோற்கத் தலைப்படும் யான் நெறிபிறழாமல் முறையை மீறாமல் நின்று காமதேவா உன்னை வேண்டி நோற்கின்றேன்; எனவே நீ வந்து உதவ வேண்டும் என்று கோருகிறார்.

மாதவனின் அடிபணிவோர் எல்லாம் வேதம் தெரிந்த வல்லார்கள் காட்டிய வழியில் பணிதல் போன்றும் நானும் காமச் சூத்திரவல்லார்கள் கூறிய பண்பில் நின்றும் காமனை வேண்டுகின்றேன் என்கின்றார். இதை ''ஓத்து வல்லார்''

என்ற தொடரால் குறித்தார் ''ஒத்து'' என்பது, ஓதப்படும் வேதத்தைக் குறித்ததாகும்,

இங்கே, காமசூத்திரத்தை ஒத்து என்றது வேதமெனக் கூறுகின்றார்போலும், ''தெருவிடை எதிர் கொண்டு'' என்றதால், காமதேவன் வருகைக்காகத் தெருவினை அழகுபடுத்தி எதிர்பார்த்திருந்ததைக் குறித்தார்.

''திருந்தவே நோற்கின்றேன்'' என்று கூறுவதால் என்னுடைய ஆசையை நீ பூர்த்திச் செய்து வைக்க வேண்டு மென்று எண்ணியே நோன்பு நோற்றேன் என்று காம தேவனிடம் உரைத்ததாகும்.

''பங்குனி'' என்று பங்குனி மாதத்தைக் குறித்தார். இந்த நோன்பைத் தைமாதம் தொடங்கினேன் மாசி மாதம் வரையும் வழிபட்டேன்; இப்போது இந்த மாதத்திலும் தொடர்ந்து நோற்பதாக விளம்பினார். இப்படித் தொடர்ந்து நோற்றும் நீ வந்தே உதவி செய்ய வில்லையே என்று சுட்டினார்.

இக்காதல் ஓவியத்தில் எம்பெருமானைக் கருவுடை முகில்வண்ணன் என்றும் காயாம் பூ வண்ணனென்றும் கருவிளைப் பூ வண்ணனென்றும் அவனின் உவந்த மேனியின் நிறத்தை நிரல்படக் காட்டினார். இதோடு அமையாமல் கமலவண்ணத் திருவுடை முகத்தனென்றும், எழிலுடைக் கண்ணன் என்றும் அவனின் ஒளி பொருந்திய முகத்தினையும் கண்களையும் விவரித்தார். இதில், தம் காதலனின் கவினார் பெருநிலையினையெல்லாம் விளக்கிக் காட்டினார்.

## திரிவிக்கிரமனிடம் சேர்ப்பாயாக!

பேருருக் கொண்டு உலகமனைத்தையும் அளந்த எம்பெருமான் எடுத்த அந்த அவதாரத்தின் பெயர்தான் திரிவிக்கிரம அவதாரம் என்பதாகும். பரம்பொருள் இந்த

அவதாரத்தைச் செருக்குற்ற மாவலியை அடக்கவே எடுத்தான். இந்த விந்தைக்குரிய அவதாரத்தை எடுத்த உத்தமனே தன் திருக்கையால் என்னை வந்து தீண்டிடவே மன்மதனே நீ அருள் புரிய வேண்டும் என்று கோதை கோருகின்றார்.

இங்கே உதவி செய்ய காமனை வேண்டிய கோதை அவனுக்காகச் செய்யும் பூசையிலே வைத்துள்ள பொருளை யெல்லாம் குறித்துள்ளார். அவை பசுங்காய்நெல், கரும்பு; வெல்லக்கட்டி, பச்சரிசி. அவல் என்பனவாகும். இவற்றை இலையிலிட்டுப் படைத்துள்ளேன் என்கிறார். காமசூத்திர இசை வல்லார் பாடுதல் போன்று நான் பாடியும், உனக்குரிய மந்திரத்தைச் சொல்லியும் வழி படுகின்றேன் என்கிறார். முன்பு மூவுலகமனைத்தையும் கவர்ந்த மாவலியிடமிருந்து மீட்க, தன் திருவடிகளால் அளந்தவன் திரிவிக்கிரமன். அவனே கண்ண பெருமானாவான்; அவனே வந்து என் வயிற்றையும் பருத்துள்ள என் மார்பகங்களையும் தன் திருக்கைகளால் பற்றிட வேண்டும் என்கிறார்; அப்படிப் பற்றுவானே யானால், இப்புவியில் ஒப்பில்லா வகையில் நான் புகழோடு நிற்பேன் என்று மன்மதனிடம் முறையிடும் செய்தியை சிறந்த ஓவியமாக,

''காயுடை நெல்லொடு கரும்பமைத்துக்
கட்டி அரிசி அவல் அமைத்து,
வாயுடை மறையவர் மந்திரத்தால்
மன்மதனே! உன்னை வணங்குகின்றேன்,
தேயமுன் அளந்தவன் திரிவிக்கிரமன்
திருக்கைகளால் என்னைத் தீண்டும்வண்ணம்,
சாயுடை வயிறுமென் தடமுலையும்
தரணியில் தலைப்புகழ் தரக்கிற்றியே!" (7)

என்று வரைந்து பாடுகின்றார். இங்கே மன்மதன் வந்து உதவி செய்யவே அகம் கனிந்து பாடினார்; பால் மாறாத

பசுங்காய் நெல்லும், கரும்பும், வெல்லமும், பச்சரிசியும் அவலும் காமனுக்கு விருப்பமான பொருள்களாகும். அவற்றைப் படையலிட்டு, அவன் விரும்புமாறு வைத்துத் துதிக்கின்றார். இவையன்றிக் காம சூத்திரத்தையும் சொல்லிப் பாடியே உன்னைப் போற்றுகின்றேன், என்று அவனிடம் கூறும் இச்செய்தியினை

> "வாயுடை மறையவர் மந்திரத்தால்
> வணங்குகின்றேன்"

என்று பாடுவதால் அறியலாம். உலகத்தையே அபகரித்த கொடிய மன்னன் மாவலி; அறத்தில் சிறந்தவனாகத் திகழ்ந்தாலும் அகந்தை மிகக் கொண்டவனாக, நெறி தவறிப் பிற மன்னர்களை நச்சரித்தான்; நச்சரித்த நஞ்சுடையானை இச்சகத்தில் இராதவாறு அவனின் உச்சந் தலையிலே பச்சைவண்ணனோ கால் வைத்துச் சாவுலகத்திற்கே அனுப்பினான். அந்த அவதாரமாகிய திருவிக்கிரம அவதாரத்தைப் பற்றி

> "தேய்முன் அளந்தவன் திரிவிக்கிரமன்"

என்று பாடினார். இப்பரம்பொருளையே ஒப்பில்லா வகையில் தம் ஓவியத்தில் ஒளிரச் செய்தார் கோதை. அந்த அவதார நாயகனே தன் செந்தாமரைக் கைகளால் என்னைத் தீண்டிட வேண்டும்; ஆம் செம்மை சான்ற அவன் திருக்கைகளால் என் ஒளி பொருந்திய வயிற்றினைக் களிப்புடன் பற்றிட வேண்டும்; மென்மையுற்றும் பருத்தும் இருக்கின்ற என் மார்பகங்களை இன்னமுதனே பிடித்திட வேண்டுமென்கின்றார்.

இவற்றையெல்லாம் தாம் விரும்பும் தலைவனிடம் சொல்லவில்லை. தோழியாகிய ஒரு பெண்ணிடமும் சொல்லவில்லை, மாறாக உதவி செய்ய வேண்டுகின்ற காமதேவனிடமே கூறுகின்றார். இங்கே யாரிடம்

சொல்கின்றோம் என்பதையும் அறியாமல் பேசுகின்றார் கோதை.

இவ்வாறு பேசுவதற்கு, தம்மை மறந்ததேயாகும். யாரையும் எண்ணாமல் ஊரையும் உலகத்தினையும் காக்கும் கார்மேனியனையே தம் கருத்தில் கொண்டார். ஆதலால் அவனையே எண்ணியிருந்ததாலே யாரிடம் பேசுகின்றோம் என்ற தன்மையை மறந்தார்.

இங்கே, தம் உணர்ச்சிகள் அனைத்தையும் மறைக்காமல் வெளிப்படையாகவே காமதேவனிடம் கூறினார். அன்று மண்ணைத் தாண்டியளந்தவன் இன்று என்னைத் தீண்டிப் பற்றக் கூடாதா? என்ற வேட்கையாலே மாட்சிமை பெற்றிலங்கும் மாமாயனை அடைந்திடவே இனிதே தனிச் சிறப்பாய்ப் பாடி இவ்ஓவியத்தை வரைந்தார் கோதை!

## கேசவனிடம் சேர்ப்பாயாக !

காமதேவன் காதலால் பிரிந்தவரைச் சேர்த்து வைக்கின்ற பண்பாளன். எனவே பிரியமுடன் அவனிடமே இணைக்கின்ற பாலம் போலச் சேர்த்து வைக்கின்ற குணத்தையுடைய காமதேவா! என்னைக் கரிய நிறக் கண்ணபெருமானிடம் சேர்த்து வைக்க உன்னைக் கைதொழுது வணங்குகின்றேன் என்று கூறுகின்றார்.

யாதவகுலத் தோன்றலான மாதவன் மேல் கோதை காதல் மீதூர்ந்து இசைக்கின்றார். அவனை அடைய நீ அன்புடன் எனக்கு உதவ வேண்டுமென்று மன்மதனைக் கேட்கின்றார். என் வேட்கைக்கு நன்மை ஏற்பட இன்றே நீ வந்து உதவிட வேண்டுகின்றேன் என்றார்; நீ மிக அழகு வாய்ந்தவன்; உன் ஆற்றல் மிகப் பெரியது. உன்னைப் போற்றுகின்ற என் கருத்தை மறுக்காமல் ஏற்று உதவி செய்வாயாக என்றே வேண்டுகின்றார்.

காமதேவா, யான் மாயன் மீது காதல் கொண்டதால் என்னையே மறந்தேன், எனக்காக எதையும் யான் செய்து கொள்வதில்லை. குளிப்பதில்லை; அதனால் என் மேனியில் அழுக்கேறியுள்ளது; தலைவாரி பூவைச் சூடிக்கொள்வதில்லை, இவ்வாறு நலமிழந்துள்ள பூவையாகிய எனக்கு இக்காதல் நோயாலே வாயும் உதடுகளும் வெளுத்து விட்டன; இப்படிப்பட்ட நிலையிலும் உன்னை வேண்டுகின்றேன். நலிந்த நிலையிலும் உன்னை வேண்டியே என் நலிவை நீக்கிக் கொள்வேன் என நம்புகின்றேன். ஆகவே, என்பால் நீ வந்து உதவி செய்யவே போற்றுகின்றேன், என் நோய் நீங்கிடவே நீ செங்கண்மாலிடம் சென்று இனிதாகக் கூறி நலஞ் செய்வாயாக! காரணப் பொருளான நாரணனிடம் நாடிச் சென்று நயந்து உரைப்பாயாக! என்னுடைய பெண்மை நலம் அழியாமல் எழிலுடன் விளங்க இன்னமுதன் விழைந்து வந்து என் சித்தத்தை மகிழ்விக்க உதவி செய்வாயாக!

அந்த மாலவனின் கால்களைப் பிடிக்கவும் என் சிந்தை முந்தி வந்து நிற்கின்றது; துன்பப்படும் என்னைப் பற்றி நீ பொன்னரங்கனிடம் புகன்று, அவன் உவந்து என்னை ஏற்கப் பற்றுடன் உள்ளான் என்பதை என்பால் உரைத்து, அவன் வதியும் இடத்திற்கே என்னை அழைத்துச் சென்று சேர்ப்பாயாக என்று கோதை கருதியதை

**மாசுடை உடம்பொடு தலையுலறி**
**வாய்ப்புறம் வெளுத்தொரு போதுமுண்டு,**
**தேசுடைத் திறலுடைக் காமதேவா!**
**நோற்கின்ற நோன்பினைக் குறிக்கொள் கண்டாய்,**
**பேசுவ தொன்றுண்டிங் கெம்பெருமான்**
**பெண்மையைத் தலையுடைத் தாக்கும் வண்ணம்,**
**கேசவ நம்பியைக் கால்பிடிப்பாள்**
**என்னும் இப் பேறெனுக்கு அருளுகண்டாய்!” (8)**

என்று வரைந்த, இக்காதல் ஓவியத்தைப் பாடி இசைக்கின்றார். அருளானைத் தவிர வேறு எந்தப் பொருளையும் நினையாமல் அவன் வேட்கையில் ஆட்பட்டுக் கிடந்ததால், மற்ற எந்த வேலையையும் செய்யாமல் பித்துப் பிடித்த நிலையிலிருந்ததால், குளிப்பதைக் கூட மறந்திருந்தார், எழிலுடையதாயிருந்த அவர் மேனி மாசுடையதாக, அழுக்குடையதாக இருந்தது. என்பதை

"மாசுடை உடம்பொடு"

என்ற தொடர் மொழியில் குறித்துப் பாடுகின்றார். தலையை வாரி அழகு படுத்தாமலும் மணமிகுந்த மலர்களைச் சூடாமலும், கூடாரை வென்றிட்ட கோவிந்தனின் நினைவாக இருந்ததைத் "தலை உலறி" என்ற தொடர் மொழியால் சுட்டினார்.

மெலிந்த மேனியை யுடையராய், கலிதீர்க்கும் கண்ணனின் வேட்கையால் நலிந்தநிலை யுடையரானார். வாயின் உள்ளும் புறமும் வெளுத்துக் காயம்பூவண்ணனின் நினைவால் வாடியிருந்ததை "வாய்ப்புறம் வெளுத்து" என்ற தொடர்மொழியால் குறித்தார் கோதை. "போதும்" என்று கூறியதில் நின்றஉம்மை செய்யுளின் இசையை நிரப்பவே பயன்படுத்தினார். "உண்டு" என்று கூறியதில் கண்ணபெருமான் என்றைக்கேனும் ஒருநாள் வந்து கூடுவான் என்னும் நம்பிக்கையிலே ஒருவேளை உணவு உட்கொண்டு உயிர் வாழ்வதைக் குறித்தார். "குறிக் கொள்" என்றதில் இத்தகைய நோன்பை மெத்த வருந்தியே கோதை நோற்கின்றார் என்பது முன்னமே மன்மதனுக்குத் தெரிந்திருந்ததைச் சுட்டினார். கண்ண பெருமானின் பொற்பாதத்தை வருடுகின்ற பேறு எனக்குக் கிட்டவில்லையென்றால் உயிர் வாழேன் என்று தாம் கருதியதைக் கோதை "கால் பிடிப்பாள்" எனனும் தொடரால் வரைந்து காட்டினார்.

கோதைப் பிராட்டியார் முன் பாசுரத்தில்
**''மானிடவர்க்கென்று பேச்சுப்படில் வாழகில்லேன்''**

என்று கூறியதைப் போன்று இப்பாசுரத்திலும் ''கால் பிடிப்பாள்'' என்றதிலும் நினைவு கூர்ந்தார், அவன் காலைப் பிடித்தால் ஆகாத செயல் ஏதுமில்லை; எனவே, ஞாலத்தோர்க்கு அவன் காலைப் பிடித்தாலே சால் பெய்தலாம் என்பதை நினைவு கூர்ந்தார். ''கேசவன்" என்றதில் தேவாதி தேவர்களுக்குத் தலைவன் என்றும், கம்சனால் ஏவப்பட்ட கேசி என்னும் அரக்கன் குதிரை வடிவம் தாங்கியே அழிக்க வந்தவனை வாயைப் பிளந்து அழித்ததால் அப்பெயர் பெற்றான் என்றும் எடுத்துக் காட்டினார், இக்காதல் ஓவியத்தில் அநீதியை யழித்து, நீதியை நிலை நாட்டிய மாதவனைக் கேசவனை ஆசையுடன் வரைந்து இசையுடன் பாடிப் போற்றினார்.

## பாற்கடல் வண்ணனிடம் சேர்ப்பாயாக !

உழவன் எருதுகள் செய்த நன்றியினை உணராமல் அவற்றிற்குத் தீனிவைக்காமல், அடித்து விரட்டி விட்டதைப்போல, என் நோன்பின் நிலையை உணராமல் எனக்கு உதவி செய்யாமல் இருக்கின்றாயே இது சரியா என்று காமதேவனிடம் கேட்கின்றார் கோதை.

காலைப்பொழுதிலும் உச்சிப்பொழுதிலும் மாலைப் பொழுதிலும் மனமுவந்து உன்னைத் தொழுகின்றேன்; உன் பாதங்களில் தூய மலர்களை வைத்துப் போற்றிப் பாடுகின்றேன். உன் உதவியைக் கோரிப் பூசிக்கும் நான் வேண்டுவதை நீ செய்வாயாக! என்று காமதேவனிடம் கேட்கின்றார்.

இந்தப் பூமியைச் சூழ்ந்துள்ள கடலைப் போன்ற நிறத்தையுடைய கண்ணபிரானுக்காகத் தொண்டு செய்து வாழ வழி எனக்கு ஏற்படவில்லையாயின் பல காலம்

அழுதழுது அம்மாவென்று அலறி, கதறி, தடுமாறித் திரிவேன். என்னை இந்த அவல நிலையில் தவிக்க விடுகின்ற தொரு பாவச்செயலானது காமதேவா உன்னைத் தொடர்ந்து வாட்டி வதைக்கும் என்பதை அறிவாயாக! அப்படி உதவி செய்யாமல் இருந்தால் அஃது எதற்கு ஒப்பாகும் தெரியுமா?

உழுதொழிலுக்குப் பயன்படுத்திய எருதுகளுக்குத் தீனி போடாமல் நுகத்தடியால் அடித்து விரட்டும் நன்றியில்லா உழவனின் செயலுக்கு ஒப்புடையதாகும் என்கின்றார் கோதை. இதை விதந்தோதும் வகையில் சொல்லோவியமாக

> ''தொழுது முப்போதும்உன் அடிவணங்கித்
> தூமலர் தூய்த்தொழுது ஏத்துகின்றேன்,
> பழுதின்றிப் பார்க்கடல் வண்ணனுக்கே
> பணிசெய்து வாழப் பெறாவிடில் நான்,
> அழுதழுது அலமந்து அம்மாவழங்க
> ஆற்றவும் அதுவுனக்கு உறைக்குங்கண்டாய்;
> உழுவதோர் எருத்தினை நுகங்கொடுபாய்ந்து
> ஊட்டமின்றித் துரந்தால் ஒக்குமே" (9)

என்று வரைந்து பாடுவார். இதில் பக்தி நெறியில் ஆழங்கால் பட்ட ஒருவர், தாம் போற்றி வரும் தெய்வத்திடம் மண்டியிட்டு வீழ்ந்து தம் மனோநிலையினைப் பூர்த்திச் செய்து வைத்திடக் கோருவோர் போலக் கோதைப் பிராட்டியும் தம் மனநிலையைப் பூர்த்திச் செய்து வைக்க மன்மதனிடம் கோரி நின்றார்.

இதில் ''ஏத்துகின்றேன்" என்பதை வினை முற்றாகவும், வினையாலணையும் பெயராகவும் கொள்ளவேண்டும். ''பழுதின்றி'' என்றதில் மனத்தில் எந்தவித நினைப்பின்றி ஏற்றுக் கொண்ட பொருளினை மட்டுமே பூசித்ததைக் குறித்ததாகும். ''வழுவிலா'' அடிமை செய்ய வேண்டுமென்று ஆழ்வார் பாடியதைப் போன்று, கோதைப்

பிராட்டியாரும் ''பழுதின்றி'' என்னும் சொல்லாட்சி கொண்டு பாடினார். மூன்றாம் அடியில்

''அழுதழுது அலமந்து அம்மா'' என்றதில், கண்ணபிரானோடு தம்மைச் சேர்க்கவில்லையென்றால், மன்மதனே அம்மாவென்று அலறி அழுதழுது திரியநேரும் எனக் குறித்தார். இதனால் என்பாவம் உன்னைச் சும்மா விடாது என மன்மதனை எச்சரித்தார்.

சரணாகதிக்கு உள்ளானவர்களை ஏற்று அருள் செய்ய வேண்டுமென்பது விதி. இந்த விதிப்படி மன்மதனிடம் சரணாகதி அடைந்த கோதைப் பிராட்டிக்கு உதவாவிடில் அம்மன்மதனோ துன்பம் அடைவான் என்று எச்சரித்தார். தாம் அனுபவிக்கும் துயரம் மன்மதனும் அனுபவிக்க நேரும் என்பதை

''அதுவுனக்கு உறைக்குங்கண்டாய்''

என்ற தொடர்மொழியால் விவரித்தார். இப்பாசுரத்தின் இறுதியடியில் மன்மதனே நீ உதவி எனக்குச் செய்யாமல் போனால், அந்நிலைதான் வேலையை வாங்கிய ஒருவன் பின்னர் நன்றியில்லாமல், வேலை செய்த எருதுகளுக்குத் தீனி வைக்காமல், நுகத்தடியால் தாக்கி விரட்டியடித்த ஈன குணம் படைத்த உழவனுக்கு ஒப்பாகும்; என்று மன்மதனை நன்றியில்லாத ஈன குணம் படைத்தவனாகக் காட்டிட

''உழுவதோர் எருத்தினை நுகங்கொடு பாய்ந்து
ஊட்டமின்றித் துரந்தால் ஒக்குமே''

என்று குறித்தார். நன்றி கொன்று வாழ்வோர்களுக்கு, மேற்சொன்ன கருத்துப் பொருத்தமுடையதாகும். இப்படி உவமையை யாளுவதில் கோதை சிறந்து விளங்குகின்றார் என்பதற்கு இஃதொரு எடுத்துக்காட்டாகும். இஃதல்லாமல் கண்ணபெருமானின் மேனிக்குக் கடல் நிறத்தை ஒப்பாகக் காட்டியுள்ளார். காண்போரைக்

க்வரும் அழகு பெற்ற கடல், தன்னுள்ளே பல அற்புதப் பொருள்களை மறைத்து வைத்திருத்தல் போல, கண்ண பெருமானிடத்திலும் எண்ணிறந்த பொருள்கள் மட்டுமின்றி; எல்லா உலகங்களும் மறைந்துள்ளன என்பதைக் கடல்வண்ணன் என்று குறித்ததால் விவரித்தார். இக்காதல் ஓவியத்தில் கடல்வண்ணனைக் கோதை அழகுற வரைந்து காட்டினார்.

## மணிவண்ணற்கு என்னை வகுத்திடுக !

இத்துணை நாள் நோன்பினை மேற்கொண்டு காமனை வேண்டித் துதித்து வந்த கோதைப் பிராட்டிக்குப் பயனேதும் ஏற்படவே இல்லையென்றாலும்; தம் முயற்சியை விடாமல் மேலும் தொடர்ந்தார். கரும்பா லான வில்லையும், மலர்களா லான அம்பினையும் கொண்டுள்ள காமதேவனே! உன்னைப் பணிகின்றேன். எனக்கு உதவி புரிவாயாக! என்று கோருகின்றார்.

கம்சனால் ஏவப்பட்ட குவலாய பீட யானையைக் கதி கலங்கிட வீழவே சாய்த்தவன் 'கண்ணபெருமான். இம் மாயனே கொக்கு வடிவம் தாங்கி வந்த பகாசூரனின் வாயைப் பிளந்து ஒழித்தான். இவனின் நிறம் உவப்பை நல்கும் நீலநிறம். அந்த நிறத்தவனே என் சிந்தையைக் கவர்ந்தவன். என்னைக் கவர்ந்தவனுக்கே யான் கருத்தொன்றி அடிமையாக இருக்க ஆவல் கொண்டுள்ளேன், என்று மன்மதனிடம் கூறி அன்பாக வேண்டுகின்றார்.

மலைபோன்று மிக உயர்ந்துள்ள மாளிகைகள் அழகினால்விளங்கி ஒளிர்கின்றன, நல்லோர் போற்றும் வில்லிபுத்தூரில் அம்மாளிகைகள் பொலிந்து நிற்கின்றன. செவ்வி யுடைய அவ்வூரில் வாழும் சான்றோர்கள் போற்றுகின்ற வகையில் அருளாளனின் பற்றில் ஆழங்கால்பட்டவர் பெரியாழ்வார். அப்பெரியார் பெற்றெடுத்த அழகுடைய

திருமகளே கோதை. மாதவனை அடைய இக்காதல் ஓவியத்தைக் கவின்பெற வரைந்தவரே அவர். சாதனை கண்ட அம்மா தரசி, தந்த பாட்டோவியத்தினைப் பூதலத்தில் உள்ளவர்கள் போற்றிப் பாடினால் நன்மை கிட்டும்.

தேவர்களுக்கெல்லாம் தேவனான காவலனே கண்ண பெருமான். அவனின் மண்ணளந்த பெரிய திருவடிப் பேற்றினை விரும்பிப் பெற்றிட, தாம் பெற்ற இன்பம் தாரணியில் வதிவோர் பெற்றிட, பொதுவுடைமைக் கண்ணோட்டத்தில் திண்மையுடன் கூறிடவே சிந்தைக் கவரும் ஓவியமாக்கினார். அதை

**''கருப்புவில் மலர்க்கணைக் காமவேளைக்**
**கழலிணை பணிந்து அங்கோர் கரியலற**
**மருப்பினை யொசித்துப் புள்வாய் பிளந்த**
**மணிவண்ணற் கென்னை வகுத்திடென்று**
**பொருப்பன்ன மாடம் பொலிந்து தோன்றும்**
**புதுவையர் கோன்விட்டு சித்தன் கோதை**
**விருப்புடை இன்றமிழ் மாலை வல்லார்**
**விண்ணவர் கோன் அடி நண்ணுவரே !''** (10)

என வரைந்தார். இதில் கம்சனின் கொடிய எண்ணத்தைப் படம் பிடித்தார். அவனால் ஏவப்பட்ட பொல்லா அரக்கரை, கொடிய யானையை, விரைந்தழித்த கரிய மாலின் திறத்தை எல்லாம் எடுத்துக் கூறினார். இதைக்

**''கரியலற மருப்பொசித்துப் புள்வாய் பிளந்த''**

என்ற தொடரால் சுட்டினார். தந்தையின் பால் அளப்பரியப் பற்றுடையவர் கோதை: அருளாளன் பால் ஆழங்கால் படச் செய்தவர் தம் தந்தையே என்பதால்

**''புதுவையர்கோன் விட்டு சித்தன் கோதை''**

என்று பாடியதில் தம் நன்றியுணர்வைத் தெரிவித்தார்.

மறந்தும் புறந்தொழா மாந்தர் என்ற நிலையில் கண்ண பெருமானைத் தவிர பிறதெய்வத்தைப் போற்றாதவர் பெரியாழ்வார்; இவரைப் போன்று கண்ணபெருமான் நெறியில் ஆழங்கால் பட்டவர் கோதை.

இப்படிப்பட்டவர் காமனை வேண்டிக் கண்ணபிரானைப் பற்ற நினைத்தது ஏற்புடையதாகுமோ? என்று சிலர் கேட்கக் கூடும். இதற்கோர் சான்றினைக் காட்டுவது பொருத்தமாக விருக்கும் எனக் கருதுகின்றேன்.

தமிழ் இலக்கணத்தில் மடலூர்தல் பெண்களுக்கில்லை என்று பேசப்படுகின்றது. தலைவனாகிய பரம்பொருளை அடைய தலைவியாகிய பரகாலநாயகி மடலூரத் தலைப் படுகின்றார் இவ்வாறு மடலூர்தல் தமிழ் நெறிப்படி சரியில்லை யாதலால் வடபுல நெறியைப் பின்பற்றி நான் மடலூர்கின்றேன் என்று பாடினார். இதனால் பற்ற வேண்டிய தெய்வம் கண்ணபிரானே ஆதலால், இந்தவழி முறையைக் கைக்கொண்டார் பரகாலநாயகியாகிய திருமங்கையாழ்வார்.

இவரைப் போன்றே கோதையும் காமன் உதவி கொண்டு கண்ணபிரானைப் பற்றிட முனைந்தார்; இஃதொரு வழிமுறையாகுமே யன்றி, காமனையே பற்றிட நினைக்கவில்லை என்பதை அறிதல் சிறப்பு.

கப்பலில் சென்றவன் கடலில் தவறி விழுந்து விடுகின்றான். அக்கடலில் கண்ட ஒரு கட்டையைப் பற்றிக் கொண்டு கரைக்கு வரமுயலுதல்போல, கோதை காமனின் உதவியால் கண்ணபிரானைப் பற்றிட முனைந்தார். இவ்வாறு தக்க நெறிநின்று நீடு வாழ்கின்ற தன்மையில் இக்காதல் ஓவியத்தில் மாயபிரானைக் கவின்பெறக் காட்டினார்.

## இரண்டாம் திருமொழி
## சிற்றிலைச் சிதைக்காமல் விடுக !

ஆயிரம் பெயர்கள் பெற்றகோ விந்தன்
அன்புடன் தம்முனே தோன்ற
நேயமாய்ச் சிற்றில் இழைத்தனர் கோதை
நெடியமால் கண்ணனே வந்து
தூயமாய் இழைத்த சிற்றிலைச் சிதைத்துத்
தொல்லைசெய் தானையே வேண்டி
ஆயனே இந்தத் தவற்றைச்செய் யாமல்
ியா யிருந்திடக் கேட்டார் !

சேதுபந் தனத்தைக் கட்டியே அன்று
சீதையை மீட்டகோ விந்தா
மாதரார்க் கருளும் குணத்தினைப் பெற்ற
மாயனே நாங்களும் பெண்கள்
ஆதலால் எங்கள் சிற்றிலைச் சிதையா
தன்பினைக் காட்டுதல் நன்றே
வேதங்கள் போற்றும் வித்தகா என்று
வேண்டியே கோரினார் கோதை !

கட்டிய சிற்றில் முற்றம்நீ புகுந்து
காட்டிய புன்சிரிப் போடு
பெட்புற நின்ற பிரியனே! சிற்றில்
பெருமையை அறிந்திடா தழித்தெம்
நட்பினைக் கெடுத்தாய் மனத்தினைச் சிதைத்தாய்
நாயகா இதுசரி யாமோ?
ஒட்பமாய் உன்னை நினைந்துமே போற்றும்
ஊமறி வாய்என்றார் கோதை !

பெரியாழ்வார் பெற்றெடுத்த பெண் பிள்ளை கோதை, மாதவனை விழைந்தேற்கவே கருதினார். அவ்வழகனை விழைந்தவர் பழந்தமிழிசைத்தே அதில் ஓவியமாக அவன் இலங்கவே ஏத்திப் பாடினார். நல்லோனை, நானிலம் புரக்கும் நாயகனை அடையவே பல்வேறான உபாயங் களைக் கையாண்டார். முன் திருமொழியில் காமனை வேண்டி, உதவி செய்திடுக என்றே கண்ணபிரானிடம் சேர்த்து வைக்கவே பாடினார், போற்றினார்.

தை மாதம் மாசிமாதம் பங்குனிமாதத்தில் சில நாள்களும் காமவேளைப் பூசித்தேன். அவனிடம் யாசித்த எனக்கு அவன் நேசங் கொண்டு உதவி செய்ய வரவில்லையே என்று நொந்த மனத்தாலே வெந்து பேசுகின்றார் கோதை. யாதவகுலத் தோன்றலைக் காதலால் அடையவே பண்ணிசைத்தார். அந்தப் பற்றற்றானுக்கே தாம் பற்றுடை யராகவே இருந்திட நற்றொண்டை நயந்து ஆற்றி வந்தார். சத்திய சீலனிடம் சார்ந்து நிற்கவே பத்துப் பாசுரங்களை இசைத்து அம்மாயனை வசப்படுத்த முயன்றார். ஆம் மன்மதனின் துணைகொண்டே இன்னமுதனை அடைய முயன்றார்; முயன்றவரின் கோரிக்கையை ஏற்று உதவி செய்ய மன்மதன் வந்தானில்லை, ஆதலால். கோதை வேறு விதமான வினையின் மூலம் தம் காதலனைக் கைப்பிடிக்கவே திட்டமிட்டார். முன்னாளில் ஆயர்பாடியில் வாழ்ந்த பெண் மக்களான ஆய்ச்சியர்கள், இன்னமுதனைக் கண்டு இன்புறவே சிற்றிலை இழைத்தார்கள். அவர்கள் அன்று கட்டாயமாகவே அக் கண்ணபெருமான் வந்து சிற்றிலைச் சிதைப்பான் என்று திட்டமிட்டே இழைத்தார்கள்.

ஆய்ச்சியர்கள் அவ்வாறு அழகுற இழைத்த சிற்றிலையே, போற்றும் நாற்றத்துழாய் மாலையணிந்த நாயகன் வந்து சிதைத்தான். சிதைத்த செங்கண்மாலைக் கண்ட ஆய்ச்சியர்கள் எச்சரித்தார்களா? என்றால் இல்லை. ஆனால் சிதைக்காமலிருக்க அவனைப் பார்த்து இனிதாகக்

கூறினார்கள். இந்த நிகழ்ச்சியால் அந்தச் செந்தாமரைக் கண்ணனுடன் ஆய்ச்சியர்கள் அன்பாக நேரில் பார்த்துக் கலந்துரையாடிட முடிந்தது. பேசியவர்கள் அவன் பால் தம் நேசத்தைக் காட்ட இயன்றது: இவ்வாறு இவர்கள் முயன்றே அன்று அவனைக் கண்டதைப் போலஃ கோதையும் சிற்றிலை இழைத்துத் தாமோதரனுடன் கலந்துரையாடிட இயலும் என்றும் அவனும் உவந்து வந்து தம்முடன் பேசி மகிழ்வான் என்றும் சிற்றிலை இழைக்க முனைந்தார். நினைத்த அவனை இனிது பெறவே இந்த உபாயத்தில் தலைப்படுகின்றார். இவ்வாறு முயற்சியில் நின்ற கோதை அந்த முழுமுதற்றெய்வத்தைப் பற்றிடவே முனைந்தார்.

## சிரீதரா சிற்றில் சிதைக்காதே!

அற்புதனை அடைய சிற்றில் இழைத்த கோதை, தம் நற்றிறத்தை வெளிப்படுத்தவே பைந்தமிழால் பெட்புற இசைத்தார். விழுமிய இத்தமிழ்ப் பாவியத்தை எழுச்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தத்தில் கவினுறத் தீட்டி இசைத்தார். இவ்வாறு இந்தச் சிந்தைக் கினியப் பாட்டோவியத்தில் அருளாளப் பெருமானை வேண்டியவர் தாம் இழைக்கின்ற சிற்றிலைச் சிதைக்காமல் விடுமாறு கோருகின்றார்.

பெருமானே! ஆயிரம் திருநாமங்களைப் படைத்த உன்னைத் தேவர்கள் அன்று ஆவல் கொண்டு நாவாரப் போற்றினார்கள்: அவர்கள் போற்றுகின்ற வகையில் நீ ஏற்றமுடன் மிளிர்ந்திலங்கியே நின்றாய்! நாராயணனே! நீ மானிட உடம்பினை எடுத்துச் சக்ரவர்த்தித் திருமகனாகத் தோன்றினாய்! அத்தகைய உன்னை நாயகனாக யாம் ஏற்பதால் எம்மைப் பற்றிய துயர் ஓடிப்போகும்.

எனவே; உன்னை அடைய மன்மதனின் உதவியினை நாடினேன். அவன் வரும் காலம் பங்குனி மாதமென்றே

அறிந்து போற்றினேன்; எனவே வரும் வழியினை எதிர் நோக்கிக் காத்திருந்தும் பயனின்றிப் போனதே. அவனைக் கொண்டு உன்னைப் பற்ற முடியாது எனக் கருதியே இப்போது உன்னையே நேரிடையாகப் போற்றிப் பெற்றிட முனைந்தோம். பிறிதொருவர் துணையை நாடாமல் நீ வந்து முகம் காட்டவே போற்றுகின்றோம்: விளையாட்டாகத் தீங்கினைச் செய்யும் கண்ணபெருமானே! நாங்கள் கட்டிய மணல் வீட்டினைச் சிதைத்தழிக்க வேண்டாமென்று கோரிய கோதைப் பிராட்டியார் இதையோர் அழிவில்லாத சிறந்த பாட்டோவியமாகவே

''நாம மாயிரம் ஏத்த நின்ற
நாராயணா நரனே! உன்னை
மாமி தன்மக னாகப் பெற்றால்
எமக்கு வாதை தவிருமே,
காமன் போதரு கால மென்று
பங்குனிநாள் கடைபா ரித்தோம்,
தீமை செய்யும் சிரீதரா! எங்கள்
சிற்றில் வந்து சிதை யேலே!" (11)

என்று வரைந்திசைத்தார்; இதில் நாராயணா! என்றும் நரனே! என்றும் குறித்துள்ளார். எம்பெருமான் பத்திரி காசிரமத்தில் மாயனாகவும் மனிதனாகவும் விளங்கிய அற்புதப் பெற்றியினை விளம்பினான்: பரம்பொருள் குருவாகவும் மாணவனாகவும் இருந்தே குரு மாணவனுக்கு உபதேசிக்கும் தன்மையைக் காட்டி, உலகம் இம்முறையை அறிந்து செயற்படவே உணர்த்தினான், இதைக் கோதை இனிது பாடியிசைத்தே தெளிவுறக் காட்டினார்: ''மாமிதன் மகன்'' என்று கூறியதில், மாமியாருடைய மகன் தமக்கு நாயகன் என்பதைக் குறித்தார். ''வாதை'' என்றதால் அருளாளன் தனக்கு வேண்டிய அன்பர்களிடம் குறும்புத் தனம் செய்பவன் என்பதை விளம்பினார், இது நெருக்கமான உறவு முறையாரிடம் அம்மாயன் குறும்பு

செய்வான் என்பதைக் காட்டேவ கூறியதாகும். கோதை இச்சிற்றிலைத் தாம் மட்டும் அமைக்கவில்லை; தம் தோழி மார்களோடு சேர்ந்தே அமைத்தார் என்பதை, "எங்கள்" என்னும் பன்மைச் சொல்லால் தெளிவுபடுத்தினார்.

இவர்கள் சிற்றிலை இழைத்தது சிரீதரன் வருவான் என்று எதிர்பார்த்தே இழைத்தார்கள். இவர்கள் நினைத்தபடியே மாயபிரான் அங்கு அவர்கள் கட்டிய மணல் வீட்டை அழிக்கவே முனைந்தான், இவன் செய்யும் குரும்பைக்கண்ட ஆய்ச்சியர்கள் நீ ஏன் இங்கு வந்தாய்! உன்னை நாங்கள் அழைக்கவில்லையே என்றார்கள்; நீங்கள் எண்ணாமல் நான் வரமாட்டேன். எண்ணியே என்னை இங்கே விழைந்ததாலே நான் வந்தேன் என்று இயம்பினான்.

இதற்கு ஆய்ச்சியர்கள் இது பங்குனி மாதம் இம் மாதத்திற்குரியவன் மன்மதனே அவன் வருவதற்காகவே, இங்கே வழி பார்த்து நிற்கின்றோம் என்றார்கள்: இக்கருத்தை;

"காமன் போதரும் காலமென்று
பங்குனிநாள் கடைபாரித்தோம்"

என்பதில் குறித்திருத்தல் காணலாம். உடனே உலகளந் தான் சிற்றில் இழைத்தது காமனுக்காக அன்று, என் வரவுக்காகத்தான் என்றே உரைத்தான்.

உரைத்தவன் அவர்கள் அழகுற அமைத்த மணல் வீட்டைக் காலால் அழிக்க முனைந்தான். இப்படி அழிப்பவனை நோக்கி ஆய்ச்சியர்கள் எங்கள் மாமி உன்னைப் பெற்றது எங்களைத் துன்புறுத்தவா? என்றார்கள். இப்படிப்பட்ட தப்புகளைப் புரியும் உன்னை எங்கள் மாமி ஏன் பெற்றாளோ? தெரியவில்லை என்று வருந்திக் கூறும் அவர்களின் கருத்தை,

"மாமி தன்மக னாகப் பெற்றால்
எமக்கு வாதை தவிருமே"

என்றதில் குறிப்பிட்டார். இதில் மாமி இவனைப்

பெற்றதால் நாங்கள் துன்பம் அனுபவிக்கின்றோம் என்றே கோதை கூறுவதைக் காணலாம். சொல்லியும் கேளாமல் தொல்லை தரும் வகையில் சிற்றிலை அழிக்கும் அவனைப் பார்த்து இவர்கள்,

"தீமை செய்யும் சிரீதரா எங்கள்
சிற்றில் வந்து சிதையேலே"

என்று இரங்கி, கெஞ்சிக் கேட்கின்றார்கள். இவ்வாறு அவனை அணுகிக் கேட்பது பெரிய அதிகாரியிடம் கெஞ்சிக் கேட்கும் பணியாளரைப் போன்றே இருந்தது. இதனால், எம்பெருமானிடம் இரங்கி அருள் சுரக்க வேண்டு கின்றார்கள் என்பதையறியலாம்.

## ஆதி நாதனை எண்ணிச் சிற்றில் இழைத்தல்

எங்கள் பணி செங்கண்மாலை அடைகின்ற நோக்க முடையதாகும். பங்கையக் கண்ணனைப் பார்க்க முயல்வதைத் தவிர எமக்கு வேறு தொழிலில்லை; எனவே, இன்றைய நாள் முழுவதும் முதுகு நோகச் சிற்றிலை உருவாக்கினோம். இந்த அருமை மணல் வீட்டை இனிது உருவாக்கியதை மாயபிரானே உன் திருக்கண்களால் உற்று நோக்கிப் பார்த்திருந்தும், அதையே உன் கால்களால் சிதைத்தல் நன்றோ?

நாங்கள் நயந்திழைத்த இச்சிற்றிலை நாடி வந்த நீயோ உன் கண்களால் பார்த்திருப்பாயானால், ஆர்வமுடன் எம் செயலை மதித்துப் போற்றியிருப்பாய்: அதோடு எங்கள் வேட்கையையும் தணியுமாறு செய்திருப்பாய்,

ஐயனே! அன்று பிரளயக் காலத்தில் எல்லா உலகமும் இல்லாமல் அழிந்தபோது, எங்கும் கடல் நீர் சூழ்ந்திருந்த போது, நீ மட்டும் ஒரு சிறிய ஆலந்தளிரின் மேல் அழகிய பாலகனாய்க் கிடந்தாயே! எப்படி நீ மட்டும் இவ்வாறு இருக்க முடிந்தது? ஆம் சூழ்ந்திருந்த கடல் நீரின் மேல் ஆடிய ஓர் ஆலந்தளிரின் மேல் நீ சிறு பாலகனாய்க் கண் வளர்ந்ததோ வியப்புக்குரியதாகும்;

பிறிதொரு பொருளைக் காணவியலாத அந்தப் பிரளயக் காலத்தில் நீ மட்டும் அலைமோதும் நீரில் ஆல இலைமேலே ஊஞ்சலாடும் சிறு குழந்தையாய் ஆதரவு இல்லாமல் இருந்ததுதான் எப்படி? இஃது எமக்கு வியப்பாக இருந்தது, உனக்கோ விளையாட்டாக இருந்தது போலும்; உலகையே விளையாட்டுப் பொருளாக கொண்டே, மகிழும் திறன்பெற்ற உன்மீதே யான் காதல் கொண்டுள்ளேன். இத்தகைய நிலையிலுள்ள எம்மீது உனக்குத் தயவு ஏற்படவில்லை போலும். எப்போது ஏற்படுமோ? யாமறியோம்! இவ்வாறு எம்பால் நீ கருணை காட்டாமல் போனதற்கு யாம் என்ன பாவம் செய்தோமோ? அதுவும் தெரியவில்லை. மாமாயனே! எம் கோரிக்கையை ஏற்று எம்பால் வர வேண்டுகிறோம், நீ அப்படி வந்தால் யாம் விரும்பி இழைத்த இந்த மணல் வீட்டை அழிக்காமல் இருப்பாயாக எனக் கோரியேஅம்மாயவனை ஓவியமாக,

''இன்று முற்றும் முதுகுநோவ
இருந்தி ழைத்த இச்சிற்றிலை,
நன்றுங் கண்ணுற நோக்கி நாங்கொளும்
ஆர்வந் தன்னைத் தணிகிடாய்,
அன்று பாலகனாகி ஆலிலை மேல்
துயின்ற எம் ஆதியாய்
என்றும் உன்றனக் கெங்கள்மேல்
இரக்கம் எழாததெம் பாவமே'' (12)

என்றேத்தி எழுதினார். இப்பாசுரத்தில் கண்ணபெருமானை நோக்கி நீ எல்லா வகையான திறமையினைப் பெற்றுள்ளாய்; அரிய செயலை எல்லாம் சிரமமின்றி ஒரு நொடிப் பொழுதில் முடிப்பவன் நீ! இத்தகைய உன் திறமையை அறியப் பெறாத நாங்கள் இந்தச் சிறியமணல் வீட்டைச் சிரமப்பட்டுக் கட்டி முடித்தது பெரும்பாடாகும்;

நாங்கள் இழைத்ததை நீ உன் கண்களால் பார்த்திருப்பாயே யானால் எங்கள் சிரமத்திற்கு இரக்கம் காட்டி

யிருப்பாய்! வேட்கையோடு ஆட்பட்டு இழைத்ததைக் கண்டிருப்பாயே யானால் எம்மைத் தணிவிக்கின்ற இனியனாகவே இருந்திருப்பாய். ஆர்வத்தாலே யாம் படைத்திட்ட அருமை மணல் வீட்டை நீ அழித்திருக்கவே மாட்டாய்!

என்று அழகனிடம் அன்பாகக்கூறிய கோதை குழாத்தினரின் மொழியைக் கேட்ட ஆராவமுதன் அதை ஏற்றானில்லை; ஆற்றலுடன் வந்த நாற்றத்துழாய் மாலையை அணிந்திருந்தவன் கேளாத காதினனாய் அவன் காலாலே, அவர்கள் கட்டிய மணல் வீட்டைச் சிதைத்தான். சிதைத்தவன் வயிறு குலுங்கக் குலுங்கச் சிரித்தான். இப்படிச் சிதைத்தவனின் எதிரிலே சென்று நின்ற கோதை அவனின் முந்தைய வரலாற்றை மொழியத் தலைப் பட்டார்: ஐயனே! உன் திறத்தையெல்லாம் நான் அறிந்துள்ளேன்; முன்பு இம்மண்ணுலகமெல்லாம் தண்ணீருக்குள் மூழ்கிப் போமாறு கடலலையைப் பொங்கி எழவைத்தாய்! எப்பொருளும் இல்லாமல் அழிந்துவிடுகின்ற அப்பிரளயக் காலத்தில் உயிர்களையெல்லாம் உன் வயிற்றில் வைத்துக் காத்தது வியப்புக்குரியதாகும்.

தண்ணீர் மயமாகவே தரையே தெரியாமலிருந்த காலத்தில் நீ மட்டும் அந்தத் தண்ணீரின்மேல் ஓர் ஆலிலை மேலே சிறு பாலகனாய் வியப்புறக் கண் வளர்ந்தாய். இஃது உன் மாயச் செயலாகும்.

அக்காலத்தில் அழியாமல் உயிர்க்குலத்தை உன் வயிற்றில் வைத்து இனிது காத்த புனித மூர்த்தியே! நீ கனிவுடையவ னாவாய். இத்தகை ஆற்றல் பெற்றுள்ள கண்ண பெருமானே! எளியவர்களான எங்களைக் காத்திட வாராதது ஏனோ? என்று கேட்கின்றார். இப்பாசுரத்தில் "முதுகு நோக" எனக் குறித்ததால் அடியார்கள் துயர் கண்டு அமைதியுடனிருக்காமல் மைவண்ணனே தன் கால் வண்ணம் காட்டி ஓடிப்போய் உதவி செய்பவன். அப்படிப்

பட்டவன் அடியார்களாகிய எங்களிடம் வந்து உதவி செய்திட வாராதிருத்தல் ஏனோ? என்று அவனை நோக்கிக் கேட்டார்கள்.

**''நாங் கொளும் ஆர்வந் தன்னைத் தணி''**

என்றதில், நாங்கள் எண்ணியது நிறைவேறினால் எம் ஆர்வம் பூத்தியாகும். அப்பூர்த்தியினை அவனே வந்து செய்ய வேண்டுமென்று கூறியுள்ளார்.

சிற்றிலைச் சிதைக்காமல் ஏற்றருள வேண்டுமென்று கூறியதைத் ''தணிகிடாய்'' என்னும் சொல்லால் சுட்டினார். ''கொளும்'' என்றது கொள்ளும் என்றதன் விகாரமாகும்.

''நாங்களும் ஆர்வந்தன்னை'' என்றுபாடியிருந்தாலும் பொருத்தமுடையதாகவே இருக்கும் என்றாலும். ''நாங்கொளும்'' என்று பாடியிருப்பதே ஏற்புடையதாகும். இது நாங்கள் கொண்ட ஆவர்வம் என்னும் பொருளை யுணர்த்தி நிற்கக் காணலாம். எம்பெருமானே ஆழமான கடலில் படுத்துக் கொண்டே இனிது பார்க்கும் உன் கண் களாலே வாழுமுயிர்க்கு அருள் சுரக்கின்றாய்.

இனியவர்களான எம்மீதும் இவ்வாறு இரக்கம்காட்டி அருள் சுரக்க வேண்டும் என்று கோதை இப் பாட்டோவியத் தில் குறித்துள்ளார்.

## கடற்பள்ளியோய் கனிவுடன்வருக !

ஆழத்தையுடைய அலைகடல் மேல் படுத்துக் கொண் டிருந்தும் உன் நயனத்தால் பார்த்தே அடியார்களுக்கு அருள் சுரக்கின்றாய்! கடலில் படுத்திருக்கும் நீ நடுக்கமிலாச் சிங்கத்தைப் போன்று மிடுக்குடன் கிடக்கின்றாய்; மதம் மிகக் கொண்ட கசேந்திரனாகிய யானைக்கு, முதலையால்

துன்பம் நிகழ்ந்த போது அம்முதலையைக் கொன்று, உன்னையே நினைந்த யானையைக் காத்தாய், எனவே, இவ்வாறு உன்னை எண்ணுகின்ற அடியாருக்கே உதவி செய்யும் உத்தமன் நீ!

உன் அடியார்களைப் போலவே என்றும் உனைப் போற்றும் எங்களைக் கடைக் கண்களால் பார்த்துத் துன்புறுத்த வேண்டா! உன்னுடைய முழுமையான அழகுப் பார்வையைக் காட்டி அரவணைப்பாயாக! எழிலனையை வளைக்கரங்களால் வண்டல் படிந்துள்ள, அந்த மண்ணை அப்புறப் படுத்திவிட்டு, நல்ல மணல்களைச் சிரமப்பட்டுப் புடைத்தெடுத்தே சிற்றிலைக் கட்டினோம். அந்தச் சிறிய மணல் வீட்டை நாங்கள் எம் சிந்தை மகிழவே கட்டினோம்.

தெளிந்த அலைகளையுடைய திருப்பாற்கடலில் படுத்திருக்கும் நீ! எழுந்து வந்து நாங்கள் விரும்பிக் கட்டிய வீட்டினைச் சிதைக்கலாமா? இப்படிச் சிதைப்பது தப்பாகும்; நாங்கள் கட்டிய அருமைப்பாட்டை நீ உணர்ந் திருந்தால் சிதைத்திருக்கமாட்டாய்! என்றதை

**"குண்டு நீருறை கோளரி! மதயானை**
**கோள்விடுத்தாய் உன்னைக்**
**கண்டு மாலுறு வோங்களைக் கடைக்**
**கண்களால் இட்டு வாதியேல்,**
**வண்டல் நுண்மணல் தெள்ளியாம் வளைக்**
**கைகளால் சிரமப் பட்டோம்,**
**தெண்டிரைக் கடற் பள்ளியாய் எங்கள்**
**சிற்றில் வந்து சிதையேலே! (13)**

என்று பாடி இசைத்தார். இக்காதல் ஓவியத்தில் சிங்கத்திற்கு ஒப்பாகக் கண்ணபெருமானின் பேராற்றலைக் காட்டினார்.

அவனின் திறத்தையெலாம் அறிவித்தவர், முதலை வாயில் அகப்பட்டு அலறிய யானையைக் கலங்காமல்

காத்த கருணா மூர்த்தியின் அருமையினை அழகாகச் சித்திரித்தார், இச்சிறிய தொடரில் ஒரு பெரிய வரலாற்றினைக் கூறுகின்றார்.

இந்திரத் தியூம்னன் என்ற அரசன் பரம்பொருளான கண்ணபெருமான் மீது பெரும் பக்தி கொண்டிருந்தான்; ஒருநாள் அருளாளனின் பக்தியில் ஆழங்கால் பட்டுத் தன்னை மறந்து இருந்தபோது குறுமுனிவரான அகத்தியர் அந்த அரசனிடம் வந்தார், பரம்பொருளின் பக்தியில் தோய்ந்திருந்ததால் வந்த அகத்திய முனிவரை அரசன் அறியவில்லை; அரசனின் இனிய பக்தி நிலையை எண்ணிப் பார்க்காமல் அகத்தியர் தம்மை மதியாமல் அரசன் அகந்தை கொண்டிருந்தான் என நினைத்து; சினந்து சபித்தார்: சபித்ததால் தயாபரனின் பக்தியில் இருந்த அரசன் யானையாக மாற்றமடைந்தான். யானையாக அரசன் மாறியபோதும் ஞானமூர்த்தியான மாயபிரானை மறவாமல் போற்றி வந்தான்.

அருளாளப் பெருமானை யானை வடிவம் எய்திய அரசன் ஆயிரம் தாமரை மலர்களைக் கொண்டு அனுதினமும் பூசித்துவந்தான். ஒருநாள் யானை கருணா மூர்த்தியைக் கனிவுடன் தொழுவதற்கு, மலர் எடுக்கத் தடாகத்திற்குச் சென்று தண்ணீரில் இறங்கியது.

அந்தத் தடாகத்தில் தேவலன் என்னும் முனிவர் சிந்தையொன்றிச் செந்தாமரைக் கண்ணனைத் தவம் செய்து வந்தார். அப்போது தடாகத்தில் கந்தருவன் ஒருவன் குளித்துக் கொண்டிருந்தான். அவன் குறும்புத்தனமாகத் தவஞ் செய்து கொண்டிருந்த தேவல முனிவரின் காலைப்பற்றி இழுத்தான். முனிவரோ முனிந்தார்; கந்தருவனை முதலையாகச் சபித்தார்.

மலர் கொய்ய வந்த யானை, தடாகத்திலிறங்கிய போது அம் முதலை யானையின் காலைக் கௌவிப் பிடித்துக் கொண்டது.

முதலையின் பிடியிலிருந்து விடுவித்துக் கரையேற முடியாத யானை 'ஆதிமூலமே' என்று அலறியது. யானையின் அவலக்குரல் கேட்டிட்ட மாயபிரான் கருடன்மீது விரைவாகப் பறந்து வந்தான். வந்தவன் தன் சக்ராயுதத்தை விட்டுத் துன்பம் விளைவித்த முதலையைக்கொன்று, நித்தம் பூசித்த கசேந்திராழ்வானை முத்தியுலகத்திற்குப் பத்தி செய்ய அனுப்பினான். அருட்தன்மையுடையவனை, காக்கும் நல்லோனின் வரலாற்றினைக் கோதைப் பிராட்டியார்

''மதயானை கோள்விடுத்தாய்''

என்ற தொடர்மொழியால் படம் பிடித்தார். ''குண்டு நீருறை" என்றதில் பிரளயக் காலத்தில் உலகைத் தம் வயிற்றில் வைத்துக் காத்தான் என்று, அவன் பெருமையைக் குறித்துக் காட்டினார். அவன்மீது காதல் கொண்ட நிலையைக் கண்டு மாலுற்று'' என்று கூறினார்.

கடல்மீது உடம்பை வைத்துப் படுத்துள்ள பரம மூர்த்தியே! நீ எழுந்துவந்து எங்களுக்குக் காட்சி நல்குவாயாக என்றார். எழுந்து வருகின்ற நீ, நாங்கள் கட்டிய சிற்றிலைச் சிதைக்க வேண்டாமென்று இரங்கி வேண்டிக் கூறினார்.

## முகில்வண்ணா சிற்றிலைச் சிதைக்காதே!

மண்ணின்மேல் எண்ணிறந்த நலத்தை உண்டாக்குகின்ற, மழைமேகத்தைப் போன்ற மேனிதன்னை உடையவனே! நீ செய்யும் அரும்பணிகளும் உன் வாயினின்று உதிர்க்கும் மறைமொழிகளும் எங்களை மயக்குகின்றன. அறிவின் நிலையைத் தெரிவிக்கும் உன் இனிய முகமானது பேரெழிலை உடையதாகும்; அந்த எழில்முகம் சிந்தையைக் கவர்ந்து இழுக்கும் மகிமையை யாம் அறியவில்லை,

அற்பத்தனமுடைய அறியாத சிறுபிள்ளைகள் என் எம்மை நீ கருதுவாய் என்று அஞ்சியே, நாங்கள் உன்னிடம் கவலை தருகின்ற எதையும் பேசவில்லை. அவ்வாறு பேசுகின்ற நீசத்தனம் எம்மிடமில்லை. செந்தாமரை நிறத்தைப் போன்ற அழகிய கண்களை உடையவனே! உன்னை யாங்கள் பணிகின்றோம். அன்பர்களை நாடி அருளை நல்கும் பெருமை வாய்ந்த பரம்பொருளே! நாங்கள் மனமுவந்து மணலால் கட்டிய இச்சிறிய வீட்டினை உன் திருக்கால்களால் அழிக்க வேண்டாம் என்று கேட்கின்றோம் என்ற செய்தியினைப் பாட்டோவியமாக்கினார். அதை

பெய்யும் மாமுகில் போல்வண்ணா! உன்றன்
பேச்சும் செய்கையும், எங்களை
மையலேற்றி மயக்க உன்முகம்
மாய மந்திரம்தான் கொலோ,
நொய்யர் பிள்ளைகள் என்பதற்கு உன்னை
நோவ நாங்கள் உரைக்கிலோம்;
செய்ய தாமரைக் கண்ணினாய் எங்கள்
சிற்றில் வந்து சிதையேலே! (14)

என்று இசைத்தார். ஆய்ச்சியர் கண்ண பெருமானை நோக்கி, ஐயனே! எங்களிடம் உன்னை மிகத்தாழ்ந்தவன் என்றே நீ பேசுகின்ற இனிய மொழிகளும், உன் கன்னங்களில் ஏற்படும் குழைவுகளும் உவப்பில் ஆழ்த்தி எங்களை உன்வயப்படுத்தி விடுகின்றன. இந்த எழில் நிலையை ஒளியையுடைய உன் திருமுகமே காட்டுகிறது. சொக்குப் பொடி தூவிச் சூழ்ந்திருப்பவரைத் தன்வயப்படுத்துதல் போலே சிரித்த முகம் ஊர் மக்களை உன்வயப்படுத்தி விடுகின்றது. ஆம்! உன் துங்கமுகப் பொலிவை எடுத்துக் கூற முடியாத அளவில் சிறந்ததாகும். இதைக் கோதைப் பிராட்டியார், "மாயம், மந்திரம் தான்கொலோ" என்னும் தொடரால் எடுத்துக் காட்டினார். மழை பொழிந்து மண்ணுலகை வாழவைப்பதைப் போன்று உன்

கரியத்திருமேனி இரு நிலத்தையும் இனிதுவாழச் செய்விக்க வல்லது என்றார்.

எங்களை நீ அறியாத சிறுமியர்கள் என்றே கருத மாட்டாய் என அறிகின்றோம். இவ்வாறு இருக்கும் நாங்கள் உன்னைக் குறித்து என்றும் குறைவாகவே கூறியது இல்லை என்பதனை

**''நொய்யார் பிள்ளைகள் என்பதற்கு உன்னை**
**நோவ நாங்கள் உரைக்கிலோம்''**

என்ற தொடரால் தெரிவித்தார்; மைவண்ண மேனியைப் பெற்றவனை, தாமரைக் கண்கள் பெற்றவனை நோக்கி மெய்யுணர்வால் மிக அன்பாக யாம் கட்டிய மணல் வீட்டினை உன் திருவடியால் சிதைக்காமல் விடுக! என்று கோதை கனிவுடன் கேட்டார்.

## கள்ள மாதவா சிற்றில் சிதைக்காதே !

மாதவனைப் பார்த்துக் கோதை மகிழ்ந்து உரையாட நினைக்கின்றார், நினைத்தவரோ தயக்கமின்றி அவனிடமே நீ கபட நாடகம் நடத்துவது நன்றாமோ? என்றார். மாசில்லாமாணிக்கமான கேசவா! நீ எளியோர் பால் நேசம் காட்டுபவன் அல்லவா?

அப்படிப்பட்ட நீ! தவறு செய்யலாமா? கண்ண பெருமானே! வெண்மையான சிறிய மணல்களைக் கொண்டு தெருவிலே விரும்பி வீடுகட்டினோம். அப்படிக் கட்டிய அந்த வீட்டினை அனைவரும் வியக்கும்படியே கட்டினோம்; அவ்வீட்டிலே அழகுடன் கோலத்தைத் தீட்டி வைத்தோம். அப்படித் தீட்டிய கோலத்தை நீ உன் காலால் அழிக்கலாமா? இஃதுனக்கு நியதியாகுமா? நீ அழித்ததைக் கண்ட எங்கள் மனம் வருந்தியது. ஆனால் உன் மீது சினம் கொள்ளவில்லை. அழிக்கின்ற உன்னைப் பழிக்காத நாங்கள் ஒன்று கேட்கின்றோம்! உன் முகத்தி

விருப்பது கண்களா? கண்களாகவிருந்தால் கவின் மிகுந்த எங்கள் கோலத்தைக் கலைக்கத் தூண்டுமா? அனைத்தை யும் அறிந்திருக்கும் நீயோ நாங்கள் வரைந்த கோலத்தை அறியாதது ஏனோ? யாம் உவந்து வரைந்த கோலத்தை ஞாலமுதல்வனே உன் காலால் சிதைத்தது சரியில்லை என்ற கருத்தைக் கோதை

**"வெள்ளை நுண்மணற் கொண்டு சிற்றில்**
**விசித்திரப் பட, வீதிவாய்த்**
**தெள்ளி நாங்கள் இழைத்த கோலம்**
**அழித்தி யாகிலும், உன்றன்மேல்**
**உள்ளம் ஓடி உருகல் அல்லால் உரோடம்**
**ஒன்றும் இலோம் கண்டாய்,**
**கள்ள மாதவா கேசவா உன்**
**முகத்தன கண்கள் அல்லவே!"** (15)

என்று இனிய பாட்டோவியமாக வரைந்து பாடுகிறார். முன்பு மன்மதன் வந்து உதவி செய்வானென்று மனம் கோணாமல் அவன் வரும் வீதியை அழகிய நுண்மையான மணலைக் கொண்டு அலங்கரித்தோம். இப்போது நிலவைப் போன்ற வெண்மையான மணலைக் கொண்டு அவற்றில் பருக்கைக் கற்களே இல்லாதவாறு புடைத் தெடுத்து வீட்டைக் கட்டினோம்; கட்டின வீட்டில் சிறப்பாகவே கோலமிட்டோம்; அக்கோலத்தை நீ வந்து அழித்தாய்; அதற்காக நாங்கள் உன் மீது கோபம் கொள்ள வில்லை. ஏதும் உன்னைக் குறித்தும் பேசவில்லை. அப்படி யிருக்க எல்லாவற்றையும் அறிந்தவனாகிய நீ எங்களை வருத்தலாமா? நன்மை புரியும் நீயே இத்தீமையைச் செய்யலாமா? இதை நினைக்கும் போது எம்நெஞ்சம் கலங்கின.

அருமையாகச் செய்த செயலை, அச்செயலால் உருவான பொருளை அறிந்த எவனும் அழிக்கமாட்டான். என்பது திண்ணம். அருமைப் பெருமைகளைத் தம் கண்களால்

பாராமல் அறியாமல் இருப்பவரே அழிவுத் தொழிலினை மேற்கொள்வர் என்பதைப் போல, நாங்கள் இழைத்த கோலத்தின் அருமையைக் கருதாத கண்ணபெருமான் அழித்ததால் அவனைப் பார்த்து உன் முகத்திலே கண்களில்லைபோலும் என்றார், கற்றவர் முகத்தி லிருப்பன கண்களே! கல்லாதவர் முகத்திலிருப்பன புண் களே! என்று பேசுவார் திருவள்ளுவர். இவரைப் போன்றே கோதையும் கட்டிய மணல் வீட்டை அழித்த கண்ண பெருமானின் முகத்தினிலே கண்கள் இல்லையென்றார். "இதை உன் முகத்தன கண்கள் அல்லவே" என்பதால் குறித்தார். அழிவைச் செய்பவரையெல்லாம் அழிப்பவன் கண்ணன். இழிந்த குணமுடையாரையெல்லாம் இல்லாமல் தீர்த்துக் கட்டும் அவனோ நன்மை செய்யும் எங்களின் நிலையை உணராமல், வந்து உதவாமல் இருப்பது எதனால்? அவனை நாங்கள் வருமாறு, கட்டிய சிற்றிலைக் காணுமாறு அழைத்தது உண்மையே! ஆனால் நாங்கள் கட்டிய சிற்றிலைச் சிதைக்கவும் கோலத்தைக் கலைக்கவும் அழைக்கவில்லையே என்றார்கள்.

குழந்தைகள் செய்யும் பணியினைக் கண்டு தாய் மகிழ்வதைப் போல, இவன் எங்கள் செயலைக் கண்டு மகிழாமல் அழிக்கும் தொழிலைச் செய்தது சரியில்லை என்றும், அவன் படைத்த கண்கள் கண்களல்ல என்றும் கூறினார்கள். இவ்வாறு கூறியது அவன் நிலையைக் குறை கூறியதாகாது. ஆனால் முன் வந்தே தம்மை ஆதரிக்க வில்லையே என்ற மனஆதங்கத்தாலே கூறியதாகும். இப்பாசுரத்தில் மாதவனை, கேசவனைச் சிறப்புற வரைந்து ஒளிரும்படி காட்டினார். இதில் வீதிவாய் என்றது ஏழன் உருபாகும். "ஆழ்த்தி" என்றது முன்னிலையொருமை வினைமுற்றாகும் உரோடம் என்றது சினத்தைக் குறித்த தாகும்: உருகல் அல்லால் என்றிருத்தலை உருகிய தல்லால் என்றே கொள்ள வேண்டும்.

## சேவகா எம்மை வருத்தாதே !

மாதவா ! நீ சேது எனும் கடலில் அணையைக் கட்டினாய்; அவ்வணையைப் பயன்படுத்தி அதன் வழியாக உன் சேனைகளை அழைத்துச் சென்று இலங்கையிலுள்ள அரக்கர்கள் கலங்க வதைத்தொழித்தாய்; அப்போது நீ காட்டிய வீரம் ஆற்றல்மிக்கது. இத்தகைய திறன் பெற்றுள்ளவனான நீ !

முதிர்ச்சியில்லாத இளம்பிள்ளைகளாகவும், பக்குவம் அடையாதவர்களாகவும் உள்ள எங்களிடம் நீ வந்து நாள் தோறும் துன்பம் தருகின்ற செயலைச் செய்வது நன்றாக வில்லை. நாங்கள் கட்டிய மணல்வீட்டை நீ குறும்புத்தனமாகக் கலைப்பது உன் பெருமைக்கு நல்லதென்று நீ கருதுகின்றாய் போலும்.

நீ செய்யும் குறும்புத்தனத்தை நாங்கள் வெறுக்கின்றோம்; நாங்கள் கட்டிய சிறிய மணல்வீடு அழகாக இல்லையென்றே அழிக்க எண்ணுகின்றாயா ? அஃது அழகாக இருந்தாலும், இல்லையென்றாலும் உனக்கென்ன ? அதை நாங்கள் சிறப்புக்குரியதாகவே கருதுகின்றோம். அஃதோ எங்கள் விருப்பத்தால் உருவாகியது. அதன் பெருமையை அறியாமல் அழிக்க முற்படுவது நன்றாக இல்லை யென்று இன்னமுதனிடம் கூறும் கோதை

''முற்றிலாத பிள் ளைகளோம் முலை
போந்தி லாதோமை, நாடொறும்
சிற்றில் மேலிட்டுக் கொண்டு நீ
சிறிதுண்டு திண்ணென நாமது
கற்றிலோம், கடலை அடைத்து
அரக்கர் குலங்களை முற்றவுஞ்
செற்று இலங்கையைப் பூச லாக்கிய
சேவகா! எம்மை வாதியேல்!'' (16)

என்று பாடியதை ஓவியமாக்கிக் காட்டுகிறார். இதில் காதல் மீதூர்ந்த கோதை, மாதவனைப் பார்த்துக் கேட்கின்றார் ;

ஐயனே ! நீ சேது எனும் கடலில் அணை கட்டினாய்; இலங்கைக்குச் சென்றாய்; அநீதியே வடிவான இராவணாதியர்களான அரக்கர்களைப் பூண்டோடு ஒழித்தாய்; இதனால் உன்னுடைய பெருமை மிகுந்த வீரத்தைக் காட்டினாய். மாயனே வலிமைபெற்றவர்களான கொடியவர்களின் முன் உன் திறனைக் காட்டியது சரியே !

முதிர்ச்சிபெறாத இளம்பிள்ளைகளான எங்களிடம் அத்திறமையைக் காட்டலாமா ? நாங்கள் விளையாடுவதற்குக் கட்டிய சிறிய மணல் வீட்டினை இலங்கையை அழித்ததைப்போன்று அழிப்பது சரியாகுமா ? நாங்கள் அரக்கர்களைப்போலக் கொடியவர்களா ? எங்களைப்பற்றி நீ நன்கு அறிந்தவனாவாயே ! அப்படி அறிந்த நீ எங்கள் செயலைக் கண்டு போற்றாமல், எங்களுக்குச் செய்ய வேண்டிய உதவியினைச் செய்யாமல், எங்களின் மனம் வருந்துமாறு கட்டிய சிற்றிலைச் சிதைப்பது சிறப்புடையதாகுமா என்கின்றார்.

நாங்கள் கட்டிய வீடு அழகாக இல்லையென்பதற்காக அதை அழிக்கின்றாயா? இவ்வாறு அழிப்பதாலே எங்கள் மனத்தையும் அல்லவா துன்புறுத்துகின்றாய் ? இதை நீ எண்ணிப்பார்த்தாயா ? என்று கேட்கும் கோதை

"அது திண்ணென நாம் கற்றிலோம்
எம்மை வாதியேல்"

என்று பாடியதால் தெரிவித்தார். நீ ஒரு பெண்ணிற்காக, இலங்கைக்குச் சென்று அரக்கர்களை வதைத்து, அப்பெண்ணின் துன்பத்தைக் களைந்தாய் அல்லவா ? அப்பெண்ணைப் போன்று நாங்களும் பெண்கள்தாமே ! அப்படியிருக்க எங்களை நீ வருத்தலாமா ? என்று கூறி, சிற்றிலைச் சிதைக்காமல் இருப்பாயாக என்றார். சீதாப் பிராட்டிக்குப் பற்றுடன் அருளியதைப்போன்று கோதைப் பிராட்

டியும் ஆதரிக்க கோவிந்தனிடம் முறையிட்டு நலஞ்செய்யு மாறு இப்பாசுரத்தின் மூலம் வேண்டுகின்றார்.

## ஒன்றறியாத எமக்கு உதவுக !

கோதைப் பிராட்டியார் கண்ண பெருமானைப் பார்த்து, உன் பேச்சின் திறத்தை அறிந்தவர்களிடம் நீ காட்டினால் அஃதுனக்குப் பெருமையாக விருக்கும், எந்த விவரமும் தெரியாத எம்மிடம் காட்டியது உனக்கு மாட்சிமையாகாது. தெரிந்த செய்தியை அறிந்தவர் களிடமே விளக்குவது மேன்மை தரவல்லது. அதைப் புரிந்துகொள்ள வியலாத எம்மிடம் புகலுவது போற்றுதற் குரியதன்று.

உன்னுடைய திறத்தை அறியாத நாங்கள் பாராமல், கேட்காமல் போனதற்கு நீ பிணக்குக் கொண்டாய் போலும். இவ்வாறு சினம்கொண்டது ஏற்புடையதன்று. அலைகளை மேல் எழச்செய்யும் கடலோ கருமை நிறத்தை பெற்றது. அந்த அழகிய கருமை நிறத்தை உன் திருமேனி யிலே விளங்கப் பெற்றுள்ளாய். கண்ணபெருமானே ! நீ அன்றொரு நாள் துன்மார்க்கர்கள் வதியும் இலங்கைக்குச் செல்லவே சேது அணையைக் கட்டினாய் ! அவ்வணையைக் கட்டியதால் உன்னுடைய திறத்தினைக் காட்டினாய் ! அதனால் அரக்கர்களையெல்லாம் அழித்து ஒழித்தாய் ! இந்த வல்லமையால் ஈடெடுப்புமின்றி விளங்குகின்ற நீ ! எளியோர்மாட்டு அவ்வேகத்தைப் பயன்படுத்துவது சரி யாகுமா ? நாங்கள் எளியவர்கள். களிப்புடன் விளையாட கட்டிய மணல் வீட்டை ஆற்றல்சான்றவனான நீ அழிப்பது இழிந்த செயலாகும். பழியற்றவனாய் இருந்தால் எம் சிற்றிலைச் சிதைக்கமாட்டாயல்லவா? அறிவுடையவனே, கல்வி அறிவு பெறாமலிருக்கும் நாங்கள் பற்றுடன் கட்டிய சிற்றிலைச் சிதைக்க வேண்டாமென்றும், நும்பத்தினியின் மேல் ஆணையிட்டுக் கேட்டுக் கொள்கின்றோம் என்றும் தம் காதல் நாயகனிடம் இயம்பியதை

''பேதம் நன்கறிவார் களோடிவை
பேசினால் பெரிதின்சுவை,
யாதும் ஒன்றறியாத பிள்ளைக
ளோமை நீநலிந் தென்பயன்?
ஓத மாகடல் வண்ண உன் மணவாட்டி
மாரொடு சூழறும்,
சேது பந்தந் திருத்தினாய் எங்கள்
சிற்றில் வந்து சிதையேலே'' (17)

என்று பொன்றாத நல்ஓவியமாக்கிய கோதையார் இனிதே பாடி இசைத்தார்.

இப்பாட்டோவியத்தில் எளிவந்த பிரானாகவுள்ள கண்ணபெருமானின் குறும்புத்தனத்தைக் கூறினார். வெறுப்பினை உண்டாக்கும் குறும்புத்தனத்தினைச்செய்யும் கண்ணபிரானைப் பார்த்து ஐயனே! ஏதும் அறியாத எம்மிடம் உம்வல்லமையைக் காட்ட முற்படுவது பொருத்த முடையதாகாது. நீ எதைச் செய்தாலும் நாங்கள் உன்னை எதிர்ப்பவர்களாகவே இல்லை. உன்னை ஊற்றமுடன் எதிர்க்கும் திறனும் எமக்கில்லை.

உன் ஆற்றலை எதிர்ப்பவர்களிடம் நீ காட்டுவாயாக! ஒன்று சொன்னால் வேண்டாத ஒன்பது வார்த்தைகளைக் கூறி உன்னை எதிர்ப்பவர்களிடம் காட்டுவாயாக! அப்படிக் காட்டினால் உன் திறமைக்குப் பொருந்தும். அவர்களை விட்டுவிட்டுக் கபட மற்ற கன்னியர்களான எம்மிடம் பேசுவதால் பயன் ஏதும் விளையாது என்று இயம்பினார் கள். இவ்வாறு கூறியும் யாசோதையின் இளஞ்சிங்கமான அவன், அமைதியாகவே இல்லாமல், இவர்கள் இழைத்த மணல் வீட்டினையே இல்லாமல் அழித்திட்டான். இதைக் கண்டதும் இதயம் நொந்த ஆய்ச்சியர்கள் ஆவேசங் கொண்டவர்களாய்க் கண்ணனை நோக்கி, மனம் வெந்து கூறத் தலைப்பட்டார்கள். மாயபிரானே உன் நேயத்திற்கு உகந்த மனைவிமார்களின்மேல் ஆணையாகவே கூறு

கிறோம். எங்கள் சிற்றிலைச் சிதைக்க வேண்டாமென்றே ஆய்ச்சியர்கள் அவனின் மனைவி மார்களின் மீது ஆணையிட்டுக் கூறினால் அஞ்சிச் சிற்றிலைச் சிதைக்காமல் விடுவான் என்றே கருதி இவ்வுத்தியினைக் கையாண்டார்கள். கோதை

"யாதுமொன்றறியாத"

என்ற தொடர் மொழியால் கண்ணபெருமானைத் தவிர வேறொரு பொருளையும் தாம் நினையாதவர் என்பதைக் குறித்தார். இவ்வோவியத்தில் கோவிந்தனின் திறமையை அருமையாக வரைந்து அவனாலேயே தரணியாவும் சால்புற்று விளங்குகிறது என்பதை விளம்பினார்.

## கண்ணனே சிற்றிலைச் சிதைக்காதே!

ஆதியாகிய நீ, உன் அழகிய திருக்கரத்தில் ஒளியைப் பொழியும் சக்கரத்தைத் தூக்கி நிறுத்தியுள்ளாய்! அதோடு கடல் நிறத்தைப் போன்ற உடலைப் பெற்றுள்ளாய். இத்தகைய உன்னை விழைந்த நாங்களோ வட்டவடிவமான வாயையுடைய பானையும் சிறிய முறமும் கொண்டு இவற்றின் உதவியால் இந்த அழகிய மணல் வீட்டினைக் கட்டினோம். நாங்கள் விரும்பி விளையாடவே இன்று இந்தச் சிற்றிலை இழைத்தோம். இதைக் கட்டி முடிப்பதற்குப் பெரிதும் உழைத்தோம்.

இதை உருவாக்க நாங்கள் உழைத்த அருமைப்பாட்டை நீ அறியவில்லை. அறிந்திருந்தால் இதைச் சிதைத்திருக்க மாட்டாய்! கட்டிய சிற்றிலைச் சிதைக்கின்ற உனக்கு என்ன நன்மை ஏற்படும்? கூறுவாயாக. கண்ணபெருமானே! நீ எம்மை உன் கையால் தொட்டும் காலால் உதைத்தும் தொல்லைபடுத்தி விட்டாய்! இதனால் எங்கள் மனங்கள் உன்மீது வெறுப்படைந்துள்ளன. கருப்பங்கட்டியென்கின்ற வெல்லமும் கசப்புடைய நாவில் இனிப்பைத்

தராமல் போவதைப் போன்று உயர்ந்த பெருமைவாய்ந்த உன் சிறப்புத் தன்மையானது, நீ செய்யும் குறும்புத் தனத்தால் சிறுமையுடையதாய்ச் செய்தது. உயர்ந்தவனான நீ செய்யும் குரும்புத்தனத்தால்தான் நாங்கள் உன்னைக் குறைகூற நேர்ந்தது. இதை நீ உணர்ந்தாயா ? என்று இன்னமுதனிடம் கேட்கும் வகையில் வரைந்த இக்காதல் ஓவியத்தினை

''வட்ட வாய்ச்சிறு தூதையோடு
சிறுசுளகும் மணலும் கொண்டு,
இட்டமா விளையாடு வோங்களைச்
சிற்றில் ஈடழித் தென்பயன் ?
தொட்டு உதைத்து நலியேல் கண்டாய்
சுடர்ச்சக் கரம்கையில் ஏந்தினாய்,
கட்டியும் கைத்தால் இன்னாமை
கடல்வண் ணனே !" (18)

என்றமைத்தே இசைத்தார் கோதை. சிற்றில் இழைப்ப தற்கு மணலைக் கொணர்ந்தார்; அதை முறத்தால் புடைத் தார்; தோண்டியில் தண்ணீர் எடுத்துவந்து புடைத்த மணலில் விட்டுப் பிசைந்து சிற்றிலை அமைத்தார். இதை

வட்ட வாய்ச்சிறு தூதையோடு
சிறுசுளகும் மணலும் கொண்டு

என்ற தொடர்மொழியால் சுட்டினார். இந்த வீடு கட்டு வதற்குப் பயன்படுத்திய பொருளைக் கண்ணபெருமானிடம் கூறுகின்றார் கோதை. இவ்வாறு கூறியவர் யாம் கட்டிய வீட்டினை நீ கேடுற அழிக்கலாமா ? என்று அவனிடமே வினவுகின்றனர் ஆய்ச்சியர்கள்.

அதைக் கேட்ட ஆராவமுதன் நான் இதை அழிப்ப தைக் காணுகின்ற நீங்கள் என்னிடம் பேசுவீர்களன்றோ ? அப்படிப் பேசும் உங்களின் அன்பினை அனுபவிக்கவே யான்

இதைச் செய்தேன் என்றான். சொல்லியவனோ அவர்கள் தன்னை உலகநாயகன் என்பதை அறிந்திடவே தன் கையில் சுடருகின்ற சக்கரத்தை வியப்புறக் காட்டி நின்றான்.

அதற்கு ஆய்ச்சியர்கள் கண்ணனைப் பார்த்து நீ உலக நாயகன் என்பது உண்மைதான் என்றாலும் உலக நாயகன் என்பவன் எளியவர்களான எங்களின் மனத்தை நோகச் செய்யலாமா? இந்த உன் செய்கையால் நாங்கள் வெறுப் படைந்துள்ளோம் என்பதை நீ அறியவில்லைபோலும். உன்னுடைய வெறுக்கத் தகுந்த செயல் எங்களுக்கு எப்படி யிருக்கின்றதென்றால், இனிக்கும் கரும்புச் சாரும் கசப் புடைய நாவில் சுவையைத் தராதது போன்று உன் பெருமை சான்ற செயலும் இழிந்ததாகவே ஆனது என்று கூறி அவனிடம் துன்பஞ் செய்யாமலிருக்கவே வேண்டு கின்றனர். இதைக்

'கடல்வண்ணனே''

என்ற தொடரால் இயம்புகின்றார். பெரிய கடலில் உள்ள உப்பு நீர் குடிக்கும் நீர் ஆவதில்லை. இதைப் போன்றே பெரியவனான உன் குறும்புச் செயலும் பெருமை தருவதாக வில்லை. அருளாளனின் குறும்புக்குக்

''கட்டியும் கைத்தால்''

என்று கூறி வெல்லமும் கசந்ததை ஒப்பாகக் காட்டினார். எம்பெருமானின் எழிலார் சக்கரத்தைப் பற்றிச் ''சுடர்ச் சக்கரம்'' என்று இடையில் ஒற்றைப் பெய்தவர் இரண் டாம் வேற்றுமை உருபும் பயனும் உடன்தொக்கத் தொகை யாகக் கூறியதனால் ''எம்பெருமான் ஒளியைப் பொழியும் சக்கரத்தையுடையவன் என்றும் அவன் தம்முன் ஒளியுடன் திகழ்ந்தவன் என்றும் விளக்கினார், அறிதி'' என்னும் சொல் முன்னிலையொருமை வினைமுற்றாகும். இதனால் எம் பெருமானிடம் தம் நிலையை அறிவாயாக எனக் கோதை சுட்டியதைத் தெரியலாம்,

# சிற்றிலோடு எங்கள் சிந்தையைச் சிதைக்காதே!

எம்பெருமானே! அன்று உன் ஒரு திருவடியால் பூவுலக மனைத்தையும் அளந்தாய்! அப்படி அளக்கும் போது வானளாவ ஓங்கி நின்றாய்; அவ்வாறு நின்ற நீ மற்றொரு திருவடியால் மேலுலகம் முழுவதையுமே அளந்தாய்! இவ்வாறு அளக்கும் திறனைப் பெற்ற எழில் முதல்வனே! எளிமையும் அறியாமையும் உடைய எங்களிடம் அத்திறத்தைக் காட்டலாமா? என்று கோதை வினவு கின்றார்.

ஒன்றுபட்டு இனிமையுடன் விளையாடுகின்ற முற்றத்தில் எங்கள் முன்வந்து உன்திருமுகத்தைக் காட்டியும் புன்முறுவல் பூத்தும் நின்றாய்! அப்படி நின்றது மிக நன்றாகவே இருந்தது. பின்னர் அந்த நிலையிலிருந்துமாற்ற மெய்தி இமைக்கும் நேரத்திற்குள் எங்கள் சிற்றிலைச் சிதைப்பது அழகாகுமா? அந்தச் சிற்றிலைச் சிதைத்த தனால் எங்களின் சிந்தையையும் சிதைத்தவனானாய். எண்ணிறந்த நன்மையைச் செய்யும் உனக்கு இஃது ஏற்புடையதாகுமா? இப்படிச் சிதைத்ததால் அதிகப் பிரசங்கியாகிய நீ! எம்மோடு சேர்ந்து விளையாட நினைப்பது சரியாகுமா? இதைப் பார்க்கின்ற அக்கம் பக்கத்தி லிருப்பவர்கள் ஏளனம் செய்யமாட்டார்களா? இதை யெல்லாம் நீ எண்ணிப் பாரர்மல் இருப்பது எதனால்? என்று கோதை கோவிந்தனிடம் கேட்கின்றார். இவ்வாறு கேட்ட அக்கருத்தைப் பாட்டோவியமாகக் காட்ட

"முற்றத் தூடு புகுந்து நின்முகம்
காட்டிப் புன்முறுவல் செய்து,
சிற்றிலோ டெங்கள் சிந்தையும்
சிதைக்கக் கடவையோ? கோவிந்தா,!
முற்ற மண்ணிடம் தாவி விண்ணுற
நீண்டளந்து கொண்டாய்! எம்மைப்
பற்றி மெய்ப்பிணக் கிட்டக்கால் இந்தப்
பக்கம் நின்றவர் என்சொல்லார்!" (19)

என்று வரைந்திசைத்தார். இதில் கண்ணபெருமான் தம்மை அறிந்துகொள்ளாமலிருக்கும் வகையில் ஆய்ச்சியர்கள் கதவைத் தாளிட்டுக் கொண்டு சிற்றில் கட்டி விளையாடு கின்ற நிலையைக் கூறுகின்றார். அப்படித் தெரியாமல் விளையாடிக் கொண்டிருக்கும் அவர்களின் மத்தியில் எப்படியோ மாயபிரான் போய் நின்றிருந்தான். இவன் வந்து நின்றதைக் கண்டு ஆய்ச்சியர்கள் வியப்புற்றார்கள். இவன் இங்கு எப்படி வந்தான் என்று ஒருவரையொருவர் கேட்பதைப் போலப் பார்த்துத் திகைத்து நின்றார்கள்.

இவன் நமக்கு முன்னமே இங்கு வந்துவிட்டானோ? எதுவும் புரியவில்லையே என அதிசயத்து நின்றார்கள். இவனிடமிருந்தே தப்பித்துச் செல்லக் கருதினார்கள். என்றாலும் மாமாயன் அங்கும் வந்ததைக் கண்டு ஆய்ச்சியர் கள் நாண முற்றார்கள். நாம் எண்ணியபடி விளையாட இயலவில்லையே என்று ஏங்கினார்கள்.

ஆய்ச்சியர்கள் வியக்கவே அவர்கள் ம‌
கண்ணபெருமான் அமைதியாக இராமல் தன் அழகுமுகம் பொலிய புன்முறுவல் காட்டி நின்றான். இந்தச் செய்தியை

''முற்றத் தூடு புகுந்து நின்முகங்
காட்டிப் புன்முறுவல் செய்து''

என்றதால் தெரிவித்தார். அவனைப் பார்த்து ஆய்ச்சியர் கள் கோவிந்தா நாங்கள் இழைத்திட்ட சிற்றிலைச் சிதைத்ததால் எம் சிந்தைகளையும் சிதைத்தல் ஆகாதோ? இது நல்லதா? சொல்வாயாக! என்றார்கள். இப்படி இரக்கமுடன் கேட்டவர்கள் அவனிடம் சிற்றிலைச் சிதைக்க வேண்டாமென்று கோரினார்கள். பிறரை நோவச் செய்த மாவலியைத் தாவியழிக்க முயன்ற மாயபிரான் எடுத்த திரிவிக்கிரம அவதாரப் பெற்றியினை

"முற்ற மண்ணிடந் தாவி விண்ணுற
நீண்டளந்து கொண்டாய்"

என்று சுவை படப் பாடிப் பரவசம் கொண்டார் கோதை. அடியார்களோ படியளந்தானை விழைந் தழைத்தக்கால் அம்மாயன் கடிதில் சென்று உதவுகின்ற செயலினை உடையவன். என்பவனைப்பற்றி

"எம்மைப் பற்றி மெய்ப்பிணைக் கிட்டக்கால்"

என்றதில் எம்மைத்தீண்டிப்பிணக்கை உண்டாக்குகின்றான் என்று வெறுத்துக் கூறினாலும், அவன் தம்மைப் பற்றியதோ பேராநந்தமாகவே உள்ளது என்பதைக் காட்டிடவே மேற்குறித்த தொடர்மொழியை ஆண்டார் போலும்.

கடைசி அடியின் இறுதியில்

"பக்கம் நின்றவர் என்சொல்லார்"

என்றதில் உலகியல் பற்றில் மற்றவர்கள் இருத்தல் தன்னைக் குறித்தார். உலகப் பற்றின்றி அவன் பற்றில் மக்கள் நிற்கவே கோவிந்தனின் திருப்பெயரினை இப்பாசுரத்தில் பெய்து காட்டிப் போற்றினார்.

## சீதையின் வாயமுதம் உண்டவனே !

கண்ணபெருமானே! நீ முன் இராமபிரானாக அவதாரஞ் செய்தபோது சீதாப்பிராட்டியின் உதட்டில் ஊறிவரும் அமுதநீரைப் பருகினாய், அப்படிப் பருகியதால் உன் மனையாட்டியிடம் மிக அன்பு காட்டியிருந்தாய் அப்பிராட்டியும் ஒரு பெண் பிள்ளை எனக் கருதியே அன்பு காட்டினாயல்லவா? அந்நிலையில் நாங்களும் பெண் பிள்ளைகளென்று நீ கருதவில்லை போலும். அவ்வாறு கருதியிருந்தால் நாங்கள் விரும்பிக் கட்டிய மணல் வீட்டினை அழித்திருக்கமாட்டாய்! பெண்கள்பால் அன்பு

கொண்டு நன்மை செய்யும் நீயோ பெண்களான எங்களிடமும் அன்பு காட்டி நாங்கள் கட்டிய மணல் வீட்டினை அழிக்காமலிருக்க வேண்டுகின்றோம்.

வீதியிலே விரும்பி விளையாடுகின்ற ஆய்ச்சியர்களாகிய எங்களின் இனிய சொற்களை மாயவண்ணா கேட்பாயாக! கள்ளத்தனமில்லாத நாங்கள் கனிவுடன் கூறும் மொழியை உன் உள்ளத்தில் கொள்வாயாக! சிற்றிலைச் சிதைக்காமல் இருப்பாயாக என்று அவனிடம் ஆய்ச்சியர்கள் அன்பாக கேட்டுக் கொண்டார்கள்.

மறைமொழியை உணர்ந்தே உரைக்கின்ற வாய்மையாளர்கள், இறைவன் தொண்டில் ஆழங்கால் பட்ட ஆன்மீக அருளாளர்களே! அவர்கள் விரும்பிப் பெருகிவாழும் திருவில்லிபுத்தூரின் பதிக்கே அதிபதியாக விருக்கும் பெரியாழ்வாரின் திருமகளாகிய யானே என்வாய் கொண்டு தூய நிலையில் பாடி அருளிய தமிழ்ப் பாசுரங்களைப் பாடுகின்ற யாவரும் கருணா மூர்த்தியின் பரமபதத்தை அடைவார்கள் என்று கோதைப் பிராட்டியார் இயம்புகின்றார், அவர் பயன் தோன்றிடப் பாடிய இக்காதல் ஓவியத்தில் வைகுந்தம் நல்கும் கோவிந்தனை

''சீதைவா யமுதம் உண்டாய்! எங்கள்
சிற்றில்நீ சிதையேல்! என்று,
வீதி வாய்விளை யாடும் ஆயர்
சிறுமியர் மழலைச் சொல்லை,
வேத வாய்த்தொழிலார்கள் வாழ் வில்லி
புத்தூர்மன் விட்டு சித்தன்தன்,
கோதை வாய்த்தமிழ் வல்லவர்குறை
வின்றி வைகுந்தம் சேர்வரே!'' (20)

என்று வரைந்து இசைத்தார்.

இப்பாசுரங்கள் யாவும் அகத்துறையில் பாடப்பெற்றன. இவை அந்நெறிக்குறியன என எடுத்துக்காட்ட இந்தக் கடைசி பாசுரத்தின் தொடக்க அடியில்

"சீதை வாயமுதம் உண்டாய்"

எனக் கோதை சுட்டியதால் உணரலாம். சீதையாகிய தலைவியிடம் இராமனாகிய தலைவன் கொண்ட காதல் நிலையை இவ்வோவியத்தில் வரைந்து காட்டினார். இங்கே கண்ணனைப் பார்த்துக் கோதை நீ உன் தலைவியிடம் காதல் நிலையைக் காட்டியது சரியே! அதையே சிறியவர்களாக, அறியாதவர்களாக உள்ள எங்களிடம் காட்டுதல் தகுதியாகுமா? என்பதை "எங்கள் சிற்றில் நீ சிதையேல்" என்றதால் விளக்கினார். ஆயச் சிறுமியர்கள் பேசுகின்ற மொழியை மழலைச் சொல் என்றார், மழலைச் சொல்லைக் கண்ணன் விரும்புவான் என்பதால் கோதை இங்கே குறித்தார் போலும்.

மழலைச்சொல் விழைவையூட்டும் குழந்தையின் சொல், பிறரைக் கவர்ந்திடும் சொல் ஆதலால் ஆராவமுதனைத் தம்வயப்படுத்தவே கோதை இங்கே இதை இனிது பெய்து பாடினார்.

இப்பாசுரத்தில் சீதையின் வாய்அமுதம், ஆயச்சிறுமியரின் மழலைச் சொல், வேதவாய்த் தொழிலார் சொல் ஆகியவற்றை மிகச் சிறப்பாகவே எடுத்துக் கூறினார். ஆனால் அடுத்துத் தம்முடைய சொல்லைக் கோதைவாய்த் தமிழ்ச்சொல்லென்று கூறினார். இவ்வாறு கூறியது தம்மைப் பற்றித் தாமே புகழ்ந்து கூறியதாகுமன்றோ? இவ்வாறு கூறுவது தன்னலமாகாதோ என்று சிலர் கேட்கக் கூடும்.

அவர்களுக்கு அடியேன் தன்னலமாகாது எனக் கூறுகின்றேன். கோதைப் பிராட்டியார் இறைவனான அருளாளனைப் பாடினார். அச்சொல் உயர்ந்த மந்திரச் சொல்லாகும். ஆதலால் அந்த மந்திரமான சொல்லால் செந்தாமரைக் கண்ணனை உள்ளம் விழைந்து பாடியதால்

அச்சொல்லைக் கோதைவாய்த் தமிழ்ச் சொல் என்றார். இந்தக் கோதைவாய்த் தமிழ்ச்சொல்லை ஓதவல்லவர்கள் மேதினியில் சாதனைகாண வல்லார்கள் என்று கோதை தம் பாசுரத்தால் ஏற்படும் பயனைக் கூறிமுடிக்கின்றார். பயனை நல்கும் பரந்தாமனைப் பாடியதால் தாம்பெற்ற இன்பத்தைப் பாரிலுள்ளோர் துய்க்கவே, கோதைத் தமிழை ஓதவல்லார் மேதினியில் மேன்மை காண்பார் என்றார்.

இந்த ஓவியத்தில் இராமபிரானைப் போற்றிக் கூற எண்ணினார். இராமபிரானின் பெயரைக் குறிக்காமல், "சீதைவாயமுதம் உண்டாய்" என்று கூறியதால் இராமபிரானை நாம் உய்த்துணருமாறு செய்கின்றார். இஃது உள்ளுறையாகக் கூறியதாகும். அடுத்த அடியில் கண்ணபிரானைக் கூறாமல்,

"ஆயர் சிறுமியர் மழலைச் சொல்"

என்றதால் ஆயர் சிறுமியரின் மழலைச் சொல்லினை விரும்பு பவன் கண்ணபிரான். ஆதலால் மேற்குறித்த தொடர் மொழியின் மூலம் அவன் பெயரைச் சுட்டாமலே உய்த்துணருமாறு செய்தார், வேதங்கள் எம்பெருமானைக் கூறிக் கொண்டும், அவன் பெற்றியினைப் பேசிக்கொண்டும் அவனை முதலாகக் கொண்டும் இலங்குவனவாகும். அவற்றைப் போலவே இங்கே அப்பெருமானின் பெயரைக் குறிக்காமலேயே கோதை

"வேதவாய்த் தொழிலார்கள்"

என்று இன்னமுதனின் மாட்சியை உணர்ந்தவர்களைக் குறித் தார். தம் சொல்லைக்கோதை வாய்த்தமிழ் என்றதில் இவர் தம் வாய்த்தமிழே உலகத்திற்கு நலனை அருளும் தமிழ் என்றும் அருளாளனைக் காட்டும் தமிழ் என்றும் கூறினார். அதைப் பாட வல்லார்கள் சாதனை காண்பார்கள் என்றும் கூறி முடித்தார்.

## மூன்றாம் திருமொழி
## கண்ணா! கவர்ந்த ஆடையைத் தருக !

1. கோழிகள் எழுந்து கூவிடா முன்னம்
குளத்திற்கு நீராடச் சென்ற
தோழிகள் உடையைக் களைந்துமே வைத்துத்
துரிதமாய்க் குளித்ததும் கரைக்கே
ஆழியான் தோன்றா முன்னரே வந்தார்
ஆடைகள் இலாமையால் தவித்தார்
பாழியன் கவர்ந்த ஆடையைக் கொடுக்கப்
பரிவுடன் கோரினர் கோதை!

2. இலங்கையை வில்லால் அழித்தநீ பெண்ணின்
இன்னலைத் தவிர்த்தனை இன்றெம்
கலையினைக் கவர்ந்து மரத்தின்மேல் வைத்த
கண்ணனே ஆடையே இலாத
நிலையினில் உள்ள எங்களின் மானம்
நிலைகுலைந் தழிவது நன்றோ?
கலையினைத் தருக என்றுமே அன்பாய்த்
கனிவுடன் கோரினர் கோதை!

3. ஆடையைத் தராமல் வைத்துளப் போக்கை
அன்னையர் அறிவரேல் வீட்டைக்
கடந்துவந் திங்கெம் நிலையினைக் கண்டு
கலங்குவர் உன்னையே பழிப்பர்!
கடமையில் சிறந்தோய் உன்புகழ் கெடுமுன்
கனிவுடன் எம்மிடம் வந்தே
ஆடையைத் தருக எனஇனி தாக
அன்புடன் கோரினர் கோதை!

## மூன்றாம் திருமொழி

பெரியாழ்வாரின் திருமகளான கோதைப்பிராட்டி இம்மூன்றாம் திருமொழியை நீராடல் குறித்துப் பாடினார். முன்னர் சிற்றிலை இழைத்தபோது மாய வண்ணன் வந்து அச்சிற்றிலைச் சிதைத்து வருத்தினான். எனவே, அவனுக்குத் தெரியாமல் நீராடத் தம் தோழிமார் களுடன் கோழி கூவுவதற்குமுன் வைகறைப் பொழுதில் நதிக்குச் சென்றார் கோதை.

பெரியாழ்வார் தம்மைக் கோபிமார்களுடன் ஒருத்தியாகவே கருதி "ஆற்றிலிருந்து விளையாடு வோங் களைச் சேற்றாலெறிந்து வளைதுகில் கைக்கொண்டு" என்பதை அவர் திருமொழியில் பாடியிருத்தல் போன்று கோதையாரும் ஆயச்சிறுமியரோடு நீராடச் சென்றதையும் அங்கே கரிய பிரானோடு பேசியதையும் இத்திருமொழியில் அருமையாகப் பாடுவார்.

கண்ணபெருமானின் குறும்புத்தனத்தை அறிந்து இவர்கள் கோழி கூவுதற்கு முன்னரே கூட்டமாகச் செல்லாமல் தனித்தனியாகப் பொய்கைக்குச்சென்றார்கள், செல்லும்போது ஓசைபடாமல், அடிச்சுவடு தெரியாமல் மெதுவாகச் சென்றார்கள். நதிக்கரையில் ஆடை அணிகலன்களைக் களைந்து வைத்துவிட்டு நீரில் குடைந் தாடிக் கொண்டிருந்தார்கள்.

இவர்கள் இங்கே சென்றதை எப்படியோ அறிந்து கொண்ட மாயன், பின் தொடர்ந்தான். கரியமேனிய னான கண்ணன் இருட்டில் பின் தொடர்வதை ஆய்ச்சியர்களால் அறிந்து கொள்ள இயலவில்லை. சென்றவன் பொய்கைக் கரையில் களைந்து வைத்திருந்த ஆடைகளை எடுத்துக்கொண்டு குருந்த மரத்திலேறி

மறைவில் தெரியாமல் அமர்ந்திருந்தான். நீராடிவிட்டுக் கரைக்கு வந்த இவர்கள் ஆடை அணிகலன்கள் இல்லாமையைக் கண்டு திடுக்கிட்டார்கள். பின்னர் மேலே இருக்கும் கண்ணபிரான் வைத்திருத்தல் கண்டு பணிவாக இரக்கமுடன் கேட்டார்கள். கேட்டவர்களுக்கு உடனே ஆடை அணிகலன்களைத் தாராமல் சிறிது நேரம் வம்பு செய்த பின்னரே கொடுத்தான். கொடுத்த ஆடை அணிகலன்களைப் பெற்ற இவர்கள் மகிழ்வுடன் அணிந்து கொண்டதை இத்திரு மொழியில் அறுசீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தத்தில், தேனனைய பாட்டோவியமாகக் கோதை வரைந்தருளினார்.

## அரவணைமேல் துயில்வோனே
## ஆடையைத் தருக !

பாம்பணைமேல் கண்வளரும் பரம்பொருளே ! நாங்கள் குடைந்து நீராடவே பொய்கைக்கு வந்தோம். ஆடை அணிகலன்களைக் கரையில் களைந்து வைத்துவிட்டு நீராடிக் கொண்டிருந்தோம். இந்த நேரத்தில் உன்னிலிருந்து தோன்றிய சூரியன் உதயமாகிவிட்டான். அதனால், பொய்கையில் குளித்த யாங்கள், ஆடையை அணிந்து கொள்ள கரைக்கு வந்தோம். ஆடை அணிகலன்கள் இல்லாமையால் மெத்தவும் வருத்தப் பட்டோம்.

பிறர் பரிகசிக்கும் நிலையில் நிருவாணமாகவிருக்கின்றோம். இந்த நிலைக்கு எம்மை ஆளாக்கியது நீயல்லவா? குருந்த மரத்தில் எங்கள் ஆடை அணி கலன்களையெல்லாம் எடுத்து வைத்துக் கொண்டு[1] எம்மை இக்கதிக்குள்ளாக்கியது சரியா? எடுத்து மறைத்து வைத்துள்ள ஆடையைக் கொடுத்து விடுவது நல்லது. ஆடையின்றி மானமழிந்திருத்தல் ஏற்புடையதாகுமா?

எனவே, எங்கள் மானத்தைக் காக்க பங்கயக் கண்ணா ஆடைகளைக் கொடுத்தருள வேண்டுகின்றோம்; என்ற இவ்வேண்டுகோளை மாண்புடைய ஓவியமாகக் காட்டவே

"கோழி யழைப்பதன் முன்னம்
 குடைந்து நீராடுவான் போந்தோம்
ஆழியஞ் செல்வன் எழுந்தான்
 அரவணைமேற் பள்ளி கொண்டாய்!
ஏழைமை யாற்றவும் பட்டோம்
 இனியென்றும் பொய்கைக்கு வாரோம்
தோழியும் நானும் தொழுதோம்
 துகிலைப் பணித்தரு ளாயே!" (21)

என்று வரைந்து இசைத்தார். இதில் பொய்கைக்கு வந்த நேரத்தை, "கோழி யழைப்பதன் முன்னம்" என்று கூறினார். ஒருவர் முகம் ஒருவருக்குத் தெரியாத வைகறையில் இவர்கள் நீராடச் சென்றார்கள்." குடைந்து நீராடப் போந்தோம் என்பதால் பொய்கையில் நீராடாமல் இருந்த நிலையைக் குறித்தார். சங்க இலக்கியங்களில் சுனையாடல் நதியாடல் பேசப்படுகின்றன. அங்கே தலைவனோடு தலைவி சேர்ந்தாடியதைக் குறித்துப் பேசுதல் காணலாம்.

இங்கே தோழிமார்களுடன் கோதை பொய்கையில் நீராடியதைக் குறித்துள்ளார். இஃது எம்பெருமானோடு சேர்ந்தின்புறும் நிலையில் பாடிய அகத்துறை நெறியைக் காட்டியதாகும். தலைமகனாகிய கண்ணனை நினைந்து தலைமகள் கோதை நீராடியதைப் பாடியதாகும். தலைவிக் கோதை நீராடும்போது தலைவன் கண்ணன் மரத்திலிருந்து காணுகின்றான்.

தலைவியின் ஆடை அணிகலன்களைத் தலைவன் குருந்த மரத்தில் மறைத்து வைத்துக் குறும்பு செய்தது, அகத்துறையில் பேசப்படும் ஊடலைக் குறித்ததாகும்;

மறைகள் புகழும் குறைவொன்றுமில்லாத கோவிந்தன் எம்மாடைகளை மறைத்து வைத்திருத்தல் அறிவுடைமை யாகுமா? என்று கூறி அன்பாக, அவனிடம் ஆடைகளைக் கொடுத்திடக் கோதை கோரினார். ஆடையின்றி இருக்கும் எங்களை அக்கம் பக்கத்தார் பார்த்தால் பரிகசிப்பார்கள். சூரியனும் எங்களைக் கேலி செய்யும் வகையில் தோன்றி விட்டான், ஆதலால், மாதவா எம் ஆடையை அருள்வாயாக எனக் கேட்டார். சூரியன் தோன்றியதை ''ஆழியஞ் செல்வன் எழுந்தான்'' என்று பெருமையாகப் பேசுவார். ''செல்வன்'' என்றதால் சூரியனால் ஏற்படும் பல்வேறான நன்மைகளை எடுத்துக்காட்டவே குறித்தார்.

கோதை இன்னொரு நிலையில் ''செல்வன்'' என்று சூரியனைப் பழித்துள்ளார். தாம் நீராடும்போது சூரியன் தோன்றி விட்டதால் பழித்திட்டார். தவறு செய்பவனைப் பார்த்து நீ மிக நல்லவன் என்று சொல்வதைப் போன்றே சூரியனைச் செல்வன் என்று பழித்தார். எம்பெருமானைக் காண நீண்ட நாளாக வேட்கை கொண்டிருந்த கோதை நீராடிய காலத்தில் ஆடையை மறைத்து வைத்திருந்த போது அவனைப் பார்த்தார். அதை

''ஏழைமை யாற்றவும் பட்டோம்''

என்று கூறுவதால் அறிவித்தார். மேற்குறித்த தொடர் மொழியால் அவனைப் பார்த்ததற்கு மகிழ்வுற்ற கோதை, ஆடை அணிகலன்களை மறைத்து வைத்து மானமழியச் செய்ததற்காக நிந்தித்ததையும் இதில் கூறியிருத்தல் அறியலாம், அவனிடம் பலமுறை கேட்டும் ஆடை தாராமையால் தொழுதும் வணங்கியும் பணிந்தும் கோரியதை,

''தோழியும் நானும் தொழுதோம்''

என்ற தொடரால் குறித்தார். இதில் சரணாகதி தத்துவத்தை எடுத்துக் காட்டுதல் அறியலாம். இங்கே

நிருவாணமாயிருந்த இவர்கள் உலகியல் பற்றிலிருந்து அருளியல் பற்றில் ஒன்றி இருத்தலைக் குறித்தார். இந்நிலையே மீண்டும் இம்மண்ணில் பிறவாமையை அளிக்கும் நிலையாகும். இப்பாட்டோவியத்தில் ஒப்பில்லா அப்பனான மாயன்பால் சரணாகதியானதைக் குறித்திருத்தல் அறியலாம்.

## அரவின்மீது ஆடியவனே ஆடையைத் தருக!

மாயபிரானே இப்பொய்கைக்கு நீ எப்படி, எப்போது வந்தாய்? எவ்வழியாக வந்தாய்? தேன்மிகுந்த துழாய் மாலையை நீ சூடிக்கொண்டு அழகாக உள்ளாய்! பார்ப்பவர் பரவசம் கொள்ளும் வகையில் எழிலாக இருக்கின்றாய்! பல்லோர்க்கும் உதவும் பண்பினனான நீயோ நாங்கள் போற்றும் வண்ணம் திகழ்கின்றாய்!

இத்தகைய நிலையில் திகழ்ந்தாலும் நாங்கள் விரும்பும் வகையில் உன் செயல்கள் இல்லை! உன் சேட்டைகள் எமக்கு வேட்கை தருவனவாயில்லை. உன் மாட்சிமையில்லாச் செயல் எம்கோட்பாட்டிற்கு உகந்தனவாயில்லை; வியப்புக்குரியனவாயுள்ள உன் வேகம் எமக்கு ஐயத்தை உண்டாக்குகின்றது.

நீயோ குருந்த மரத்தில் ஏறுகின்றாய். அங்கிருந்து மடுவில் பாய்கின்றாய்! மடுவில் ஆடித்திரியும் நஞ்சுடைய நாகத்தின் தலைமேல் நிற்கின்றாய்! அந்த ஆடும் பாம்பின் தலைமேல் நின்று நீ ஆடுகின்றாய்! ஆடும் நீ! நாகத்தைத் தாக்கிப் பெரும்பாடு படுத்தி நின்றாய்! ஆடும் பாம்பை ஆட்டிவித்ததால் ஆற்றல் சான்றவனாயுள்ளாய். இத்தகைய வலிமைபெற்ற நீ எளிமை நிலையிலுள்ள இந்தப் பெண்களிடம் உன் வன்மையைக் காட்டலாமா? எம்மிடம் வம்பு செய்வது உனக்குத் தெம்பாகவுள்ளதா? எங்கள் சேலைகளை இந்தச் சோலையிலுள்ள குருந்த மரத்தில் ஏறி

வைத்திருப்பது உன் பெருமைக்கு இழுக்காகுமன்றோ? நீ ஆடைகளைத் திருடிச் சென்று மரத்தின்மேலே வைத்துக் கொண்டு, நிருவாண கோலத்திலுள்ள எம்மைப் பார்ப்பது அழகாகுமா? ஆடையின்றி நாணமுற்று எம்மேனியினைக் கைகளால் மூடிக்கொண்டு நிற்பது வேதனையாக உள்ளது. இருநிலம்புரக்கும் பெருமானே இஃதுனக்கு விருப்பாக வுள்ளதா? எங்கும் பொலிந்திலங்கும் இனியனே, சங்கடப் படும் பெண்களான எங்கள் சேலைகளைத் தந்துவிடுதல் சிறப்பாகுமல்லவா? என்று தம் காதல் நாயகனான கண்ண பிரானிடம் கேட்கும் கோதை ஒரு பாட்டோவியத்தில் வரைந்து பரிவுடன் கோருவதை

"இதுவென் புகுந்திங் கந்தோ
இப்பொய்கைக் கெவ்வாறு வந்தாய்
மதுவின் துழாய்முடி மாலே
மாயனே யெங்கள் அமுதே
விதியின்மை யால்அது மாட்டோம்
வித்தகப் பிள்ளாய் விரையேல்
குதிகொண் டரவில் நடித்தாய்
குருந்திடைக் கூறை பணியாய்!" (22)

என்றிசைப்பார். இதில் மாயபிரான் இப்பொய்கைக்கு வந்திருக்க மாட்டான் என்று நினைந்த ஆய்ச்சியர்கள் மகிழ்ந்து நீராடிக்கொண்டிருந்தார்கள். இவ்வாறு இனிது நீராடியவர்கள் கரையில் களைந்து வைத்துவிட்டு வந்த ஆடை அணிகலன்களை விரைந்து எடுத்துச் சென்று குருந்த மரத்தின்மேல் மாயன் வைத்துக்கொண்டு மகிழ்வுடனிருந் தான். கள்வனான கண்ணன் சேலைகளைத் திருடியதல் லாமல் அவர்களின் உள்ளங்களையும் திருடிச் சென்றான். மகிழ்ந்து நீராடுவோரை வானில் தோன்றிய ஞாயிறு வெளிச்சமிட்டுக் கரைக்கு விரைந்துவரச் செய்தான்.

கரைக்கு விரைந்துவந்த இவர்கள் ஆடைஅணிகலன்கள் இல்லாமை கண்டு தொல்லைப்பட்டார்கள்.

தொல்லையுற்றவர்களின் ஆடைகளைக் கவர்ந்து சென்றவன் மாயன் எனத் தெரிந்திராமையால்,

"இதுவென் புகுந்தது'"

என்றதில் இங்கு வந்து எடுத்துச் சென்றவர்கள் யார்? என வியந்தார்கள். பிறகு, பெருமாயனே கவர்ந்து சென்றவன் என்றதை அறிந்த இவர்கள்

"இப்பொய்கைக்கு எவ்வாறு வந்தாய்"

என்று அவனைக் கேட்டார்கள்; அதற்கு நான் விரும்பியதை இங்கே பெறமுடியுமென்றே வந்தேன், என்று பதிலிறுத்தான் கண்ணன். உன் குறும்புத்தனம் வெறுக்கத் தக்கது. இச்செயலால் உன்பால் நாங்கள் கொண்டிருந்த அன்போ இல்லாமல் போனது. ஆதலால் உனக்குத் தெரியாமல் நீராட வந்தோம் என்று அவனிடம் கூறினார்கள். அவனிடமிருந்த குறும்புத்தனத்தால் இவர்கள் விலகியிருந்ததாலே, அவனிடம் பெறவேண்டிய பேரானந்த நிலையினைப் பெறவியலாமல் போனது என்பதை

"விதியின்மையால்"

என்ற தொடரால் சுட்டினார். இப்பாட்டோவியத்தில் முன்னிகழ்ந்த வரலாற்றுச் செய்தி ஒன்றைக் காட்டுகின்றார். யமுனை நதிக்கு அருகிலிருந்த மடுவில் ஐந்து தலை நாகமிருந்தது, அது மடுவை நஞ்சாக்கி வந்தது. இம்மடுவில் நீர் அருந்த எவரும் செல்வதில்லை. இந்நீரை அருந்தினால் உயிரிழக்க நேரும். ஆதலால் அதனருகில்கூட எவரும் செல்வதில்லை.

இந்தக் கொடிய காளிங்க நாகத்தின் அடாத செயலைச் செந்தாமரைக் கண்ணன் அறிந்திருந்தான். ஆதலால் சாதனை காணும் மாதவன் கடம்ப மரத்திலேறி, படம்

எடுத்தாடிய நாகமிருந்த மடுவில் பாய்ந்தான். வேகமாக நாகத்தின் தலைமேலேறி, அதன் செருக்கை அடக்கி வருத்தினான். முடிமீதேறிய அவன், நடம்புரிந்தான். கண்ணபிரானின் வீரச்செயலைக் கண்ணாரப் பார்த்தவர்கள் பயந்தார்கள்! என்றாலும் அவன் சிரித்துக்கொண்டே ஆடியதைக் கண்டு பெரிதும் வியந்தார்கள்.

எமனுலகத்திற்கு நாகத்தை அனுப்பவிருந்த அருளாளனிடம், நாகக்கன்னி சரண்புகுந்தாள். என் நாயகனைக் கொன்றழிக்காமல் விடுவாயாக எனக் கெஞ்சினாள். கெஞ்சிய நாகக்கன்னியின் சஞ்சலத்தைப் போக்கும் வகையில் மடுவிலிருந்த நாகத்தைக் கடலில்போய்ப் பிழைத்துக்கொள்ள விடுத்தான். இச்செயலால், அச்சங்கொண்டு வாழ்ந்த இச்சகத்தோருக்குப் பச்சைவண்ணன் வாழ்வளித்தான் என்பதைக் கோதை

''குதிகொண் டரவில் நடித்தாய்''

என்று தம் ஓவியத்தில் சித்திரித்தார். முன்பு கோவிந்தன் மன்பதையின் துன்பத்தைக் களைய குடக் கூத்தாடினான். பின்னர் ஆயர்பாடி மக்களின் துயரத்தைப் போக்க, அடக்கிய நாகத்தின் மேலேறி திட்முடன் நடனம் புரிந்தான். இவ்வரலாற்றைப் பவ்வியமாகத் திவ்வியமுடன் வரைந்த தம் காதல் ஓவியத்தால் நமக்கு நினைவு கூர்ந்தார். ''விதி'' என்னும் சொல்லால் கதியாயிருக்கும் கண்ணபெருமானின் அருள் தன்மையை அறிவித்தார். ''குதிகொண்டு'' என்றதிலுள்ள ''குதி'' முதனிலைத் தொழிற்பெயராகும். இதனால் அவன் விழைந்து தொழிலாற்றும் நிலையைக் குறித்துப் போற்றினார்.

## பட்டுடையைத் தந்திடுக !

நல்லோர் போற்றும் நாயகனே! அன்று நீ வில்லாலே இலங்கையைச் சிதைத்த வல்லமை பெற்றவன்! இன்று

நீ வம்பு செய்யும் குறும்புத் தனத்தால் எம்மை வருத்து கின்றாய்; இஃது எங்ஙனம் நியதியாகும்? ஈடும் எடுப்பும் இல்லாமல் இருப்பவனே! உன்னிடம் இந்தக் குறும்புத்தனம் இருப்பதால் சிறப்பினை இழந்துள்ளாய். உன்பால் உள்ள சிறுப்பிள்ளைத்தனம் பெருமையைக் குறைத்து விடுகின்றது என்பதை நீயறியவில்லைபோலும்!

இப்போது எங்களிடம் நீ நடந்து கொள்வதை எங்கள் தாய்மார்கள் கண்டால், வீட்டில் சேர்க்கமாட்டார்கள். நீ எங்களோடு இருக்கின்றாய் என அவர்களுக்குத்தெரிந்தாலே போதும், அவர்களெல்லாம் ஒன்றாகச் சேர்ந்துகொண்டு ஏசுவார்கள். உன்னெதிரில் ஆடையில்லாமல் நாங்கள் இருப்பதை அவர்கள் அறிந்து விட்டால் அவ்வளவுதான்! இது பொல்லாத செய்கை என்று சினந்து உன்னை எம் இல்லத்திற்கு வாராதவாறு வெறுத்து விரட்டி விடுவார்கள்.

எனவே, நீ இவற்றையெல்லாம் நினைந்து பார்க்க வில்லை போலும். நினைந்து பார்க்கும் மனமும் உனக்கில்லாமையாலே எங்கள் சேலைகளையெல்லாம் பூத்திருக்கும் குருந்த மரக்கிளையின் உச்சியில் எடுத்துச் சென்று வைத்திருக்கின்றாய்! நீ மேலே இலைகளின் மறைவில் இருந்து சிரித்துக் கொண்டும் எங்கள் நிலையை ஏளனமாய்ப் பார்த்துக் கொண்டும் இருக்கின்றாய்? ஆண்பிள்ளையாகிய உனக்கு இஃது ஏற்றதாகுமா? நீ விரும்புவதையெல்லாம் நாங்கள் கொடுக்கின்றவர்கள். எனவே இத்தகையவர்களான எங்களின் இந்த அலங்கோல நிலையை ஊரில் உள்ளவர் காண்பதற்குள் நீ எடுத்து வைத்துள்ள பட்டாடைகளைக் கொடுத்து விடுவாயே யானால் நாங்கள் புனைந்து கொண்டு விரைந்து வீட்டிற்குச் சென்றுவிடுவோம், எனக் கண்ணனிடம் கோரும் நிலையை

''எல்லே ஈதென்ன இளமை
எம்மனை மார்காணில் ஒட்டார்
பொல்லாங்கு ஈதென்று கருதாய்
பூங்குருந் தேறி யிருத்தி

வில்லால் இலங்கை யழித்தாய்நீ!
வேண்டிய தெல்லாம் தருவோம்
பல்லாரும் காணாமே போவோம்
பட்டைப் பணித்தரு ளாயே! (23)

எனப்பபாடி வரைந்தார் கோதை. இப்பாட்டோவியத்தில் குருந்தமரத்தின் மேலிருக்கும் கண்ணனைப் பார்த்து ஆய்ச்சியர்கள்; நாங்கள் நீரைவிட்டுக் கரைக்கு வர இயலாத நிலையில் ஆடையின்றி அவலமுறுகின்றோம். ஆடையைக்கொடுத்து எங்களின் மானத்தைக் காப்பாயாக! என்றார்கள். இந்தக் கோலத்தில் நாங்கள் மானம் இழந்து வருந்தி நிற்கின்றோம், நீயோ நாங்கள் இப்படி இருப்பதைத் தவறென்று நினைக்கவில்லை போலும்.

எங்கள் வீட்டார் இந்தக் கோலத்தைக் கண்டுவிட்டால் எம்மைச் சேர்க்கமாட்டார்கள்; சுற்றத்தார்கள் பார்த்து விட்டாலோ எங்களை வெறுத்தே விடுவார்கள். என்று அவனிடம் கூறுவதை

''எம்மனையீர் காணில் ஒட்டார்''

எனச் சுட்டினார். அதற்கு மதுசூதனன் நான் வானத்தி லிருந்து குதித்தவன் அல்லன். எனக்கும் தாய் தந்தை, சுற்றம் முதலானோர் உள்ளார் என்பதை அறிவீர்களாக! என்றான். இதை அவன் வாயால் சொல்லவில்லை. என்றாலும் மேற்குறித்த தொடர்மொழியான ''எம்மனையீர் காணில் ஒட்டார்'' என்பதால் கண்ணனும் பேசியிருப்பான் என நாம் அறியலாம்.

இவ்வாறு அவன் கூறியதாக எண்ணி மறுமொழியாக ஆய்ச்சியர்கள் நீ மானத்தைப்பற்றி எண்ணிப் பாராதவன்; நாங்கள் மானத்தை உயிரெனக் கருதி வாழ்பவர்கள்; நீ பழி பாவங்களைக் கண்டு அஞ்சாதவன்; நாங்கள் பழி பாவங்களைக் கண்டு அஞ்சி வாழ்பவர்கள் என்று கூறிய வர்கள் அவன் போக்கை.

"பொல்லாங்கு ஈதென்று கருதாய்"

என்னும் தொடர் மொழியால் சுட்டியதையறியலாம். எங்கள் கோலத்தைச் சுற்றத்தார்கள் காண நேர்ந்தால் துயரம் ஏற்படும் என்று கூறியதைக் கேட்டும் கண்ணன் சிறிதும் அஞ்சாமலும் குருந்த மரத்தை விட்டிறங்காமலும் சேலையைத் தாராமலும் மரத்திலேயே இருந்ததைக் கண்டவர்கள்.

"பூங்குருந் தேறி இருத்தி"

என்று குறித்தார்கள்: அன்று ஒரு பெண்ணுக்காக இலங்கையை யழித்தாய். இன்று நாங்களும் பெண்கள் என்பதை நீயறியவில்லை போலும். அறிவுடைய நீ எங்களை வருத்தலாமா? என்று ஆய்ச்சியர்கள் அவனிடம் பணிவாகக் கேட்டார்கள். அதற்கு அவன் சீதை என் விருப்பத்திற்குரிய நாயகி ஆதலால் இலங்கையை அழித்து அவளுக்கு ஆதரவு காட்டினேன்! நீங்கள் அவ்வாறில்லையே என்றான். அவர்கள் நாங்களும் உன் விருப்பத்திற்குரியவர்களே என்றவர்கள் இதைப்

"பல்லாரும் காணாமே போவோம்"

என்று கூறியே யாரும் நம்மைப் பாராமலிருக்கின்ற இடத்திற்குச் செல்வோம் என்றதைக் கேட்ட மாயன் சரி வாருங்கள் போகலாம் என்றான்? அதற்கு அவர்கள் ஆடையைக் கொடுத்தால் தானே வர முடியும், என்பதைப்

"பட்டைப் பணித்தருளாய்"

என்றதால் தெரிவித்தார்கள், இப்பாசுரத்தில் எம்பெருமான் தம் அடியார்களுக்கு அருளும் தன்மையை எடுத்துக் காட்டினார், அடியார்களாகிய ஆய்ச்சியர்களும் படியளந்தானைப் பற்றிட விழைந்த தன்மையினையும்

"பல்லாரும் காணாமே போவோம்"

என்பதால் விவரித்தார். கோதை மேற்சொன்ன தொடர் மொழியால் நிருவாண நிலையான பற்றற்ற நிலையினை

அற்புதமாகக் காட்டினார். உடலுறவுத் தன்மையைக் கூறாமல் உயிர் பிறவாமையாகிய பேற்றை அடையவே மாயபிரானோடு வயப்படும் நிலையை யுணர்த்தினார். ஆம் சீவான்மா பரமான்மாவோடு இணையும் தன்மையினை மேற்குறித்த தொடர்மொழியால் படம் பிடித்தார். இக்காதல் ஓவியத்தில் எம்பெருமானோடு தாம் இயைந்து நிற்கும் நிலையை வரைந்து காட்டினார். இதில் அவனோடு இணைந்து நிற்கின்ற உபாயத்தை அவனி யிலுள்ளோரும் அறிய உணர்த்தினார்.

## இறங்கியெம் கூறையைத் தாராய்!

இலங்கையை இடர்ப்படுத்திய பிரானே! இந்தப் பொய் கையின் கரையில் நிற்கும் எங்கள் கண்களில் நீர் தாரை தாரையாக வழிந்தோடுவதை நீ காணவில்லையா? கண்ணீரை வாராமல் அடக்க முயன்றாலும் அது நிற்க மாட்டாமல் ததும்பி நாற்புறமும் பெருக்கெடுத்தோடு கின்றது. இவ்வாறு எங்கள் கண்களிலிருந்து வருவதை உற்றுப் பார்க்கும் நீ! அதற்காக இரக்கங் காட்டா மலிருத்தல் நன்றாமோ?

உன்னை முன்னமே மரம் ஏறுகின்றவர்களுக்குத் தலைவன் என்று அறிந்திருக்கின்றோம். இப்படி மரம் ஏறுபவர்களுக்குத் தலைவனாயிருக்கும் நீ குருந்த மரத்தில் ஏறியிருப்பதால், எங்கள் சேலை களையெல்லாம் அந்த மரத்தில் எடுத்துச் சென்று வைத்திருப்பது சரியாகுமா? எங்களை வருத்திடவே நீ சேலைகளை எடுத்துக் கொண்டு வைத்திருப்பது நல்லதல்ல. எனவே, எங்களின் சேலைகளைத் தருமாறு உன்னைப் பணிவோடு வேண்டுகின்றோம் என்று ஆய்ச்சியர்கள் கருத்தைக் கோதை நாய்ச்சியார் அவனிடம் இதமாக கேட்கும் வகையில் இனிய பாட்டோவியமாக

''பரக்க விழித்தெங்கும் நோக்கிப்
பலர்குடைந் தாடும் சுனையில்
அரக்க நில்லாக் கண்ணநீர்கள்
அலமரு கின்றவா பாராய்
இரக்கமே ஒன்றும் இலாதாய்
இலங்கை அழித்த பிரானே!
குரக்கர சாவது அறிந்தோம்
குருந்திடைக் கூறை பணியாய்! (24)

என்று வரைந்திசைத்தார். கோதை கண்ணபிரானைப் பார்த்து இந்தச் சுனையில் நாங்கள் மட்டும் நீராடு கின்றோம் என்று நீ எண்ணினாய் போலும். இதில் வேறு பலரும் நீராட வருவார்கள் என அறிவாயாக! எனவே, மற்றவர்கள் நீராட வருவதற்கு முன்பே மரத்தின் மேல் வைத்திருக்கும் எங்கள் ஆடையை அளித்திடுவாயாக! பிறர் இங்கே வந்து ஆடையில்லாமல் இருக்கும் எங்கள் நிலையைப் பார்த்தால், அவமானப் படவேண்டியதாகவே நேரும். எனவே, பிறர் வருவதற்குள் சேலைகளைக் கொடுத்துவிட வேண்டுகின்றோம், ஆடையின்றி இருப்பதைப் பிறர் அறிந்தால் என்ன சொல்வார்களோ என்று வேதனையாலே அழுகின்ற எங்கள் கண்களில் தாரை தாரையாகக் கண்ணீர் வெளிப்படுவதை நீ காண வில்லையா? இப்படி அலங்கோலத்தில் அவதிப்படும் எங்கலளப் பற்றிக் கவலை கொண்டாயில்லை போலும். இவ்வாறு அவனிடம் தங்களின் துன்பத்தை எடுத்துச் சொல்லி இறைஞ்சி நின்றதை

''அரக்க நில்லாக் கண்ணநீர்கள்
அலமரு கின்றவா பாராய்
இரக்கமே ஒன்றும் இலதாய்''

என்ற அடிகளால் குறித்துள்ளார். கண்ணபிரானைப் பார்த்து நீ அன்று ஒரு பெண்ணுக்காக இலங்கையினை அழித்தாய். அவளுக்கு ஆதரவு காட்டிய நீ பலராக, பெண்

மக்களாக இருக்கும் எங்கள் பால் இரக்கம் காட்டாமல் வருத்துவது சரியா? சொல்க! என்று கூறியதை "இலங்கை அழித்த பிரானே," என்ற தொடரால் விளம்பினார்.

நீ! அன்று சீதையை மீட்க அலையையுடைய கடலில் அணையைக் கட்டினாய்! அஃதன்றியும் உண்ணாமலும் உறங்காமலும் கிடந்தாய்; அன்று நீ! பட்ட துன்பம் பகரவே முடியாத அளவில் மிகுதியாகும்; அப்படிப்பட்ட துன்பத்தி லிருந்த நீயோ உன் நாயகியை ஆற்றலினால் இன்னலி லிருந்து மீட்டாய்; மன மகிழ்ச்சி கண்டாய்,

உன் நாயகிக்குப் பிறர் துன்பம் தந்தார்கள் என்பதால் நீ மிகவும் துன்பப்பட்டாய். அதனால் துன்பத்தில் சிக்கித்தவித்த உன் துணைவியை மீட்டாய்! நீயும் துன்பத்தி லிருந்து விடுபட்டாய்! எனவே, துன்பம் எப்படிப்பட்டது என்றுனக்குத் தெரிந்திருக்கும். அப்படியிருக்கும் நீ! பெண் களான எங்களுக்குத் துன்பம் தருவது சரியா? என்று கூறியதை "இரக்கமே ஒன்றும் இலாதாய்" என்பதால் தெரிவித்தல் காணலாம்.

இவர்கள் கூறியதைக் கேளாத காதினன் போல் இருந்த் கண்ணன் மேலும் உயரமான கிளைக்குத் தாவிச்சென்றான். இதைக் கண்ணுற்ற கோதை அவனைப் பார்த்து நீ குரங்கு களின் தலைவன் போலும் என்று கூறியதை

"குரக்கர சாவது அறிந்தோம்"

என்றார். இந்தச் செயல்யாவும், எம்பெருமானாகிய உனக்கு ஏற்புடையதல்லவென்று கூறினார். இவ்வாறு மேலே குறித்தவற்றாலே, குரங்குகளின் அரசனான சுக்கிரிவன் என்பவனுக்கு அன்று நீ உதவி செய்தாய்! உதவி பெற்ற அவனும் நன்றி மறவாமல் உனக்கு உதவி செய்தான். அவனைப் போன்றேயுள்ள உன்னுடைய பக்தர்களான எங்களுக்கு உதவ வேண்டிய நீயோ உபத்திரவம் கொடுத்தல்

சரியாகுமா? என்று கேட்கின்றார். சுக்கிரிவன் ஆட்சியை ஏற்றாள உதவி செய்ததைப் போன்று நீ எடுத்து வைத்துள்ள எம் சேலையைத் தந்து உதவி செய்வாயாக எனக்கோருதல் காணலாம்.

## கரிய பிரானே கூறையைத் தாராய்!

கருத்தத் திருமேனியைப் பெற்றுக் கவினுறவே, திகழும் கண்ணபெருமானே நீ மிகப் பேராற்றல் உடையவன் தான். அப்படியிருந்தும் எங்கள் துன்பத்தை ஏனோ எண்ணிப் பார்த்தாயில்லை. இந்தக் குளத்தில் இனிது நீராடலாம் என்று வந்தோம். நீராடிக் கரைக்கு வந்து களைந்து வைத்த சேலைகள் இல்லாமையால், துடித்தோம். ஆடையின்றிக் கரையிலே இருக்க இயலாமல் மீண்டும் குளத்து நீரிலே, எங்கள் உடம்பை மறைத்துக் கொண்டு நிற்கின்றோம்.

இந்தக் குளத்திலே கயல் மீன்களும், வாளை மீன்களும் பெருகியுள்ளன. அவை யாவும் சேர்ந்து எங்களின், கால் களைக் கடித்துக் துன்புறுத்துகின்றன. குளத்தில் நின்றே, துன்புறும் யாங்கள் கரையில் வந்து நிம்மதியை அனுபவிக்கலாமென்றால், வர இயலவில்லை; வைத்த எங்கள் சேலைகளை நீயெடுத்து மரத்தில் வைத்துக் கொண்டதால் ஆடையின்றி வர இயலாமல் இருக் கின்றோம். இவ்வாறு இருக்கும் எங்கள்நிலை இருதலைக் கொள்ளி எறும்பு போல் ஆனது. இப்படிக் கரைகு வர முடியாமலும் நீரிலிருக்க முடியாமலும் தவிக்கும் எங்கள் நிலையை நீ எண்ணிப் பார்த்தாயில்லை.

இப்போது எங்களை நீ துன்புறுத்தும் போக்கினை எம் தமையன் மார்கள் அறிந்தாலோ வேலை ஏந்திக் கொண்டு வந்து உன்னைத் தாக்கித் துரத்தி விடுவார்கள். என்பதை நீ அறியவில்லை போலும்; எம்தமையன் மார்கள் வந்து

உன்னைத் துரத்துகின்ற காட்சி பார்ப்பவர்களுக்குப் பிள்ளை விளையாட்டாக இருக்குமன்றோ?

எனவே, எங்களின் அழகிய சிற்றாடைகளையெல்லாம் வாரி எடுத்து மரத்தில் வைத்திருத்தலை எம்மிடம் உடனே எடுத்துத் தருதல் நல்லது எனக் கூறும் கருத்தை அரிய ஓவியமாக, வரைந்ததை,

''காலைக் கதுவிடு கின்ற
கயலொடு வாளை விரவி
வேலைப் பிடித்தென்ன மார்கள்
ஓட்டில் என்ன விளையாட்டோ?
கோலச் சிற்றாடை பலவும்
கொண்டுநீ ஏறி யிராதே
கோலங் கரிய பிரானே !
குருந்திடைக் கூறை பணியாய்'' (25)

என்று பாடி இசைந்தார். இதில் தம் துன்பத்தை இன்ன முதனிடம் கூறிய ஆய்ச்சியர்கள் அவனையே துயரைப் போக்க வேண்டி நின்றார்கள்.

மரத்தின் மேலேறியிருந்த கண்ணனைப் பார்த்து, எங்களைக் குளத்தைவிட்டுக் கரைக்கு ஏறிவர இயலாமல் நீ செய்துவிட்டாய்! நிர்வாணமாக இருக்கும் நாங்கள் குளத்தை விட்டு வர முடியாமல் தவிக்கின்றோம், குளத்திலோ எங்கள் கால்களைக் கயல்மீன்களும் வாளை மீன்களும் கடித்துத் தொல்லைப்படுத்துகின்றன. ஆதலால் இங்கேயும் நாங்கள் தவிக்கின்றோம்; இவற்றை நீ எண்ணிப் பார்க்கின்றாயில்லை, மத்தளத்திற்கு இருபக்கம் இடி ஏற்படுவதுபோல் எங்களுக்கும் குளத்தில் நிற்க முடியாமலும், கரையில் ஏறிவர முடியாலும் இடர்ப்படு கின்றோம், என்ற செய்தியினைக்

''கோலங் கரியபிரானே''

என்று அவனிடமே, கோதை கூறுதல் காணலாம். கண்ணபெருமான் தம் அடியார் பால் நலஞ்சொரியும் நல்லோன் என்பார்கள். இத்தகையவனோ, எங்கள் பால் நன்மை செய்யாமல் துன்பம் புரிவது ஏனோ தெரியவில்லை? ஏங்குபவர்களுக்கு நன்மை செய்யும் மாயபிரான் எங்களுக்குத் தீமை புரிவது எதனால்? பற்றற்றவர்களாக ஆய்ச்சியர்கள் விளங்கிடவே அவர்களின் ஆடைகளை மறைத்து வைத்தான் போலும். தன்னைச் சரணாகதி யடைய வழிகாட்டவே இவ்வாறு செய்தானா? உலகியல் பற்றிலுள்ள இவர்களுக்கு அவன் காட்டுதல் அருளியல் வழியெனத் தெரிந்தார்களில்லை, எனவே இவர்கள் திருவாண நிலையிலிருந்ததை உலகியலின் மானப் பிரச்சினையாகக் கருதியதால் குளத்து நீரிலே நின்று கொண்டிருந்தார்கள். இவர்களின் உலகியல் பற்றே, மீன்கள் காலைக் கடிப்பதால் ஏற்பட்ட துன்பமும் ஆடையின்றிக் கரையின் மேல் வரஇயலாத அவமானத் துன்பமும் வருத்தின. உடம்பைப் பற்றாகக் கொண்டதால் இவர்களுக்கு இத்துன்பங்கள் நிகழ்ந்தன எனக் கருதலாம்.

இப்படி எம்பெருமான் இந்த விளையாட்டின் மூலமாகச் சரணாகதி தத்துவத்தை உணர்த்துவதை உணராத ஆய்ச்சியர்கள், இதைத் தவறான போக்கு எனக்கருதிய தாலும் இதை உலகாயதப் போக்கிலிருந்து காண்பதாலும் இவர்கள், கண்ணனைப் பார்த்து எம்முடைய தமையன் மார்கள் உன் தவற்றைக் கண்டால் ஓட ஓட விரட்டி யடிப்பார்கள் என்றார்கள். இதை,

''வேலைப் பிடித்தென்னைமார்கள் ஓட்டில்"

எனப் பாடியே கோதை தெரிவித்தல் காணலாம், இஃதென்ன விளையாட்டு! ஆடையை மரத்தின் மேல் வைத்து எங்களைத் துன்புறுத்துதல் நல்லதல்லவே என்று கூறி ஆடையைத் தரக் கோரியதை, ''கூறையைப் பணியாய்'' என்று தெரிவித்தார். இப்பாசுரத்தை மக்கள்

விரும்பிப்பாடும் வகையில் இனிய காதல் ஓவியமாகக் கோதை வரைந்தார் என்று எண்ணியெண்ணி மகிழத்தக்க தாகும்.

## கூத்தாடுந் திறத்தோனே கூறையைத் தாராய் !

கண்ணபெருமானே! அகலமும் ஆழமும் உடைய இந்தத் தாமரைத் தடாகத்திலுள்ள நண்டுகள் எங்கள் கால்களைச் சுற்றிக் கொண்டு வருத்தத்தினைத் தருகின்றன; இஃதெப்படியுள்ளதென்றால் நஞ்சுடைய தேள் வந்து கொட்டுவதைப் போன்றே துன்பத்தை உண்டாக்க வல்லதாக உள்ளது.

நீயோ பேராற்றல் படைத்தவன்; உனக்கு நிகராக எவரையும் சொல்லவியலாது. அன்று குடத்தை உயரத்தில் தூக்கி எறிந்து, அது கீழ்நோக்கி வரும்போது பிடித்தாடும் திறனைப் படைத்தவன்; நீ தான் தாங்கள் போற்றுகின்ற தலைவன் ஆவாய்!

நல்லவனெனப்பேர்படைத்த நீ எங்களுக்குப் பொல்லாதவனாக ஆனது எதனால்? உன் பொல்லாங்கை விட்டு அன்பனாகி எமக்கு உதவிட வேண்டுகின்றோம், உன் கரத்தால் பற்றியே எடுத்துக் கொண்டு மரத்திலேறி வைத்துள்ள பட்டாடைகளை நாங்கள் கட்டிக்கொண்டு கரைக்கு வர நீ தந்தருள வேண்டுகின்றோம். எங்கள் ஆடையை எடுத்து மறைத்து வைத்துக் கொண்டு கேவலப் படுத்துவது உனக்கு நீதியாகாது! போதிக்கும் பண்பாளனான நீ! கற்றவனாகத் திகழவேண்டுமேயன்றி, நாங்கள் வெறுக்கின்ற அளவில் நடந்து கொள்ளக்கூடாது, என்று கூறினார்; கோதைப் பிராட்டியார் இந்தச் செய்தியினைச் செந்தமிழால் சிந்தைக்கவரும் ஓவியமாக வரைந்தவர்,

''தடத்தவிழ் தாமரைப் பொய்கைத்
  தாள்கள் எம்காலைக் கதுவ
விடத்தேள் எறிந்தாலே போல
  வேதனை யாற்றவும் பட்டோம்
குடத்தை எடுத்தேற விட்டுக்
  கூத்தாட வல்லஎங் கோவே
படிற்றை யெல்லாம் தவிர்ந்தெங்கள்
  பட்டைப் பணித்தரு ளாயே!'' (26)

என்று பாடினார்: இதில் தாமரைக் குளத்திலுள்ள தண்டுகள் காலைச் சுற்றிக் கொண்டு தொல்லை கொடுப்பது நஞ்சுடைய தேள் கொட்டுவதைப் போன்றுள்ளது. எனக் கூறினார். முன்பாசுரத்தில் குளத்திலுள்ள மீன்கள் கடித்துத் துன்புறுத்தின என்று கூறியவர், இப்பாசுரத்தில் தாமரைத்தண்டுகள் சுற்றித் தேள்கொட்டியன போலத் துன்புறுத்துகின்றன என்றார். இத்துன்பங்கள் உலகியல் பற்றால் ஏற்பட்டனவாகக் கூறுதல் காணலாம்; துச்சாதனன் பாஞ்சாலியின் துகிலை களைந்து மானபங்கம் செய்தான். பாஞ்சாலியோ துகிலைப் பற்றிக் கவலைப் படாமல், பரந்தாமா நீதான் பக்கத் துணை இருத்தல் வேண்டும் என்று அலறியபோது மீளாத்துகிலையளித்து மானத்தைக் காத்தான் மாயன்;

இங்கே ஆய்ச்சியர்கள் பாஞ்சாலியைப் போல் மாயபிரானிடம் சரணாகதியடையாமல், அவன் எடுத்துச் சென்ற ஆடையைக் கோரியதால் அவன் ஆடைகளைத் தாராமல் இவர்கள் வருந்திடவே வேடிக்கைச் செய்து கொண்டிருந்தான். இப்பாசுரத்தில் குடக்கூத்தைப் பற்றிக் கூறியதால் பண்டு ஆயர்கள் மகிழ்ச்சிக் கொண்டிடவே அவன் ஆடியதைச் சுட்டினார். குடத்திற்கு மேலே குடங்களை அடுக்கிக் கொண்டு தலைமேல் வைத்துக் கொள்வதோடு, இருதோள்களிலும் இருகுடங்களை வைத்துக் கொண்டு இருகைகளிலும் இருகுடங்களை ஏந்திக் கொண்டும், ஏந்திய குடங்களை மேலே வீசி வீசி எறிந்தும், பிடித்தும் ஆட வேண்டும்.

இப்படி ஆடும்போது எந்தக் குடமும் கீழேவிழாமல், பிறர்வியக்கத்தக்க வகையில் ஆடுவதே குடக்கூத்தாகும். இக்குடக்கூத்தை ஆடுவதில் ஈடும் எடுப்பும் இல்லாமல் திகழ்ந்தவன் தாமரைக்கண்ணன் என்பது தேற்றம். இக்கூடக்கூத்தை ஆறுவகைக் கூத்தில் ஒன்றாகப் பதினொரு வகை ஆடலில் ஒன்றாகக் கூறுவர். ஆனால் இக்கூத்தைச் சிறப்புக்குரியதாகவே பேசுவர். இக்கூத்தைப் பற்றிச் சிலப்பதிகார உரையாசிரியரான. அடியாருக்கு நல்லார் குடக்கூத்தாடல்; குன்றெடுத்தோன் ஆடல் அதன் அடைக்கு ஐந்துறுப்பு ஆய்ந்து என்று மேற்கோளும் காட்டினர்.

## மாயனே மரத்தில் வைத்த ஆடையைத் தருவாயாக !

பிரளயமெனும் ஊழிக் காலத்தில் உயிர்களை உன் வயிற்றிலே வைத்துக்காத்த கண்ணபெருமானே இன்று நாங்கள் இத்தடாகத்தில் உள்ள நீரில் நின்று தவிக் கின்றோம், இதற்குக் காரணம் நீயன்றோ? நியாயமற்ற செயல்களைச் செய்து எங்களைத் துன்புறுத்துகின்றாய்! இப்போக்கால் வேதனை படும்யாங்கள் உன் முன் நில்லாமல் ஆயர்பாடிக்கு ஓடிவிடக் கருதுகிறோம்.

ஆயர்பாடியோ வெகுதூரத்தில் இருப்பதால் ஆடையின்றிப் போவதற்கு இயலாமல் தவிக்கின்றோம். நாங்கள் உன்பால் அன்புடையவர்களாகவே இருக் கின்றோம், அப்படி இருக்கும் எங்களை வருத்துவது உனக்கு ஏய்புடையதாகுமா? எங்களைச் சங்கடப்படுத்தும் உன் போக்கை எம் பெற்றோர்கள் கண்டால் என்ன செய்வார்கள் தெரியுமா? பூத்திருக்கும் குருந்த மரத்தில் ஏறிக்கொண்டு செய்யும் தீமையை விட்டு, மரத்தில் எடுத்து வைத்திருக்கும் எங்கள் பட்டாடைகளைக் கொடுத்தருள வேண்டும் என்று ஆய்ச்சியர்கள் கோரும் கருத்தை அருமைப் பாட்டோவியமாகக் கோதை

"நீரிலே நின்றயர்க் கின்றோம்
நீதி யல்லாதன செய்தாய்
ஊரகம் சாலவும் சேய்த்தால்
ஊழி யெல்லாம் உணர்வானே
ஆர்வம் உனக்கே உடையோம்
அம்மனைமார் காணில் ஒட்டார்
போர விடாய் எங்கள் பட்டைப்
பூங்குருக் தேறி யிராதே!" (27)

என்று வரைந்து இசைத்தார். பெருமானே! நீ அறிந்து கொள்ளவியலாதவாறு, கோழி கூவுவதற்கு முன்பே, இத்தடாகத்திற்கு வந்தோம். ஆனால் நீயோ நாங்கள் வருவதற்கு முன்பே வந்தது எப்படி? வந்த நீ அமைதியாக இல்லாமல் எங்களைத் தொல்லைபடுத்துதல் நன்றாமோ? நீ கொடுக்கும் தொல்லையோ பொறுக்கவியலவில்லை' அதனால் நாங்கள் எங்களிருப்பிடத்தை நோக்கி ஓட. பார்த்தாலும், இயலவில்லை. எங்கள் ஊரும் எங்களின் உறவின் முறையார் வாழும் இடமும் அருகிலில்லை. இருந்தால் கூவியழைத்து உதவி பெறவிலும். அப்படி அவர்கள் இந்த நேரத்தில் வந்தால், எங்கள் நிலையைக் கண்டால் சகிக்கமாட்டார்கள்; வெறுப்படைவார்கள். எப்படியேனும் அறிந்து எம்பெற்றோர்கள் இங்கு வந்து விடுவார்களானால் உன்னைத் துன்பப்படுத்தி விடுவார்கள். எனவே, அவர்கள் வருவதற்குள் எங்கள் ஆடையை எடுத்துக் கொடுத்து விடுவாயாக! நீ ஊழிக்காலத்தில் அனைத்துயிர்களையும் அகத்தில் வைத்துக் காத்தவன்; பின்னர் பிரளயம் முடிந்ததும் அந்த உயிர்களையெல்லாம் தோன்றிட, வாழவைத்தப் பேரருளாளன் ஆவாய்!

ஆதலால் அப்படிக் காப்பாற்றிய உன்னையே அன்புடன் இரங்கிக் கேட்கின்றோம்; எம்முடைய சேலையைக் கொடுத்து விடுதல் நல்லதாகும் என்கிறோம்; எங்கள் மானத்தைக் காப்பதாகும் என்றும் வேண்டு கின்றோம். இச் செய்தியை,

"ஊழியெல்லாம் உணர்வானே"

என்ற தொடரால் உணர்த்துகின்றார். இவாற்றலால் அனைத்துயிரையும் காத்த நீ! எங்களின் துன்பத்தைப் போக்கி உதவி செய்வாயாக என்றார்கள். திருவாணக் கோலத்தில் பற்றற்றவர்களாக நின்றே, அவன்பற்றை வேண்டிய அவர்கள் ஆடையைக் கேட்பதின் வாயலாக உணர்த்துவதைப் "போரவிடாய் எங்கள் பட்டை" என்றதால் தெரிவித்தார். சேலையை எங்கள் கைக்குக் கிட்டுவதைப் போலச் செய்து அதைக் கிட்டாமல் எட்டாதவாறு அருளாளன் செய்து விட்டான் என்பதால் இன்னும் அவனின் அருள்தன்மை கிடைக்கவில்லை என்பதைத் தெரிவிக்கின்றார். இப்பாசுரத்தால் உலகியல் பற்றுத் தம்மை விட்டு நீங்காமையாலே அருளியல் பற்று இன்னும் கிட்டவில்லை என்பதைத் தெரிவித்தார். அடியார்கள் எல்லாம் படியளந்தானைப் பற்றுவதற்குப் பிடிப்பாக நம்மை விடாமல் பிடித்துக் கொண்டிருக்கும் உலகியல் பற்றோ கழன்று விடுபட்டே ஓடவேண்டுமென்று இப்பாசுரத்தில் தெளிவுபடுத்தினார்.

உலகியலில் எந்த இனிய வாழ்வும் சிந்தைக்கினியதாக விருந்தாலும், அவை செந்தாமரைக் கண்ணனைப் பற்றுதற்குரிய வாழ்வாக அமையாது. எனவே பேரானந்த வாழ்வு என்பது எம்பெருமானின் திருவடியே யாகும் என்று உள்ளுறையாக இப்பாட்டோவியத்தில் அமைத்துக் காட்டினார் கோதை.

## ஆயர்கொழுந்தே ஆடையைத் தாராய்!

கண்ணபெருமானே முன்பு இரவு நேரங்களில் உறங்கும் போது உன் அழகிய கண்கள் வாசமுள்ள தூயமலர்களைப் போல இருந்து பரவச மூட்டுவனவாயிலங்கும். இத்தகைய கண்களைப் பெற்றே எழிலுடன் திகழும் இனியனே! இப் பொய்கைக் கரைக்கு நாங்கள் மட்டும் வரவில்லை எங்களின்

அன்னை மார்களும் வந்திருக்கின்றார்கள் என்பதையும் அறிவாயாக!

அவர்கள் வந்திருப்பதையே நீ அறிந்து கொள்ள வில்லை போலும்; அதனாலேதான் எங்களிடம் தவறான செய்கைகளை, வெறுக்கின்ற செயல்களைப் புரிகின்றாயா? நீ செய்யும் தீமை உனக்குப் புரியவில்லையென்றே கருது கின்றோம். எனவே, நீ தெரிந்து கொண்டிட நாங்கள் சொல்வதைக் கேட்பாயாக!

தகுதியில்லாத செயலைப்புரியும் உனக்குத் தெளிவாகக் கூறுகின்றோம் அறிவாயாக! ஆயர்களெல்லாம் தம் வாயாரப் புகழுகின்ற இளங்கொழுந்தைப் போன்றவனே! எங்களுடைய ஆடைகளை எல்லாம் மறைத்துச் சங்கடப் படுத்துமளவில், குருந்த மரத்தில் கொண்டு வைத்திருக் கின்றாய்! இது பெரிய தவறாகும். எனவே அந்த ஆடை களை உடனே எங்களிடம் கொடுத்து விடுவது நல்லது! தடங்கலின்றிக் கொடுத்து விடுக! என்று ஆய்ச்சியர்கள் கோரும் கருத்தையே சிறந்த பாட்டோவியமாக வரைந்த கோதை.

"மாமிமார் மக்களே யல்லோம்
மற்றுமிங் கெல்லாரும் போந்தார்
தூமலர்க் கண்கள் வளரத்
தொல்லை இராத்துயில் வானே
சேமமேல் அன்றிது சாலச்
சிக்கென நாமிது சொன்னோம்
கோமள ஆயர் கொழுந்தே
குருந்திடைக் கூறை பணியாய்!" (28)

என்று பாடி இசைக்கின்றார்; மதுசூதனனே! நீ ஊரில் உத்தமனைப் போல் அமைதி தோன்ற நடிக்கின்றாய்! எத்தவிதத் தீமையும் செய்யாத இனியனைப் போன்று இருப்பதாய்க் காட்டுகின்றாய்! ஆனால் இந்தத் தனிமை

யான இடத்தில் எங்களிடம் நீ செய்யும் சங்கடமான செயல் மிகத் தவறானதாகும். இஃது ஊரில் உள்ளவர்களுக்குத் தெரியாது என்று கருதுகின்றாயா? அப்படி நீ கருதியிருப்பாயேயானால் அது உன் தவறாகும். நீ செய்யும் தவறு எப்படியும் ஊரிலுள்ளவர்களுக்குத் தெரிந்தேவிடும். அப்படித் தெரிந்தால் உனக்குக் கண்டிப்பாகப் பழியேற்படும் என்பது திண்ணம். நீ நினைப்பதைப் போன்று உன் விருப்பத்திற்குரிய நாங்கள் மட்டும் இங்கு வந்திருக்கவில்லை. எங்களின் அன்னை மார்களும் வந்துள்ளார்கள் என்பதை நீ அறிந்து கொள்ளவில்லை போலும். வந்திருக்கும் அவர்கள் உன்னைப் பழிப்பார்கள் என்பதை உணர்வாயாக! என்று மாயனிடம் ஆய்ச்சியர்கள் பேசியதை

''மாமிமார் மக்களே யல்லோம்
மற்றுமிங் கெல்லாரும் போந்தார்''

என்று பாடுவதில் உனுக்குத் துணைவியர்களாக அமைவதற்கு உறவு முறைக்குரியவர்களான நாங்கள் மட்டும் இவ்வாற்றுக்கு வரவில்லை; எங்களின் தாய்மார்களும் இங்கே வந்துள்ளார்கள் என்பதை மாயனிடம் கூறினார்கள். இப்பாசுரம் ஆயச்சியர்களுக்கு இன்னும் உலகியல் பற்றிருத்தலைக்காட்டுகிறது. இதை, மாமிமார்" என்னும் சொல்லைக் குறித்ததாலே அறியலாம். ஆய்ச்சியர்களோடு ஒருவராக, தலைமை சான்றவராகக் கோதை திகழ்ந்தாலும் அவர் அருளியலில் ஆழங்கால்பட்டிருந்தாலும் உலகியல் பற்றோடு இருப்பதாகக் காட்டியது எதனால் என்றால், உலக மக்களுக்கு எடுத்துக்காட்டவே எனத் தெளிதல் நல்லது. இக்காதல் ஓவியத்தில் மாதவனைப் பற்றவியலாததற்கு உலகியல் பற்றே என்று விதந்தோதினார். பின்னர் கோமள வண்ணனான ஆயர் கொழுந்தைப் பற்றிடவும் பற்றியே அவனோடு ஒன்றி நிற்கவும் விடா முயற்சியில் தலைப்பட்டதை இப்பாசுரத்தில் எடுத்துக்காட்டியுள்ளார்.

## அசோதையின் மகனே ஆடையை அளிப்பாயாக !

கண்ணபெருமானே ! உன்னை அழிக்க நினைத்த கம்சன் நெருங்கவும் துன்பம் தரவும்முடியாமல் இருந்ததற்கு நீயோ இரவில் இம்மண்ணுலகில் பிறந்ததே யாகும். இவ்வாறு பிறந்த நீ! அப்போதே அந்த இடத்தைவிட்டே மற்றோரிடத்திற்குக் காப்பாகவிருந்திட எடுத்துச்செல்லப் பட்டாய் ! சென்ற இடத்தில் அன்பாக வளர்க்கப்பெற் றாய் ! உன் மாயத்திறத்தால் இப்படி உவப்பூட்டும் வகையில் வளர்ந்திட்ட நல்லோன் நீ ! இந்த இருள்சூழ்ந்த நேரத்தில் இங்கே எப்படி ஏன்? வந்தாய்! என்பதைப் பற்றிக்கூட யாங்கள் கேட்கவில்லை; ஆனால் எங்கள் ஆடையினைக் களவாடிக்கொண்டு ஏன் மரத்தில் வைத்துக் கொண்டு வேதனை படுத்துகின்றாய் என்றுதான் கேட்கின் றோம்.

இளம் பெண்களாகிய நாங்கள் ஆடையின்றி நிருவாண மாக இருக்குமாறு செய்கது உனக்கு ஏற்புடையதாகுமா ? எங்கள் மானத்தை வாங்கவே நீ இங்கு வந்தாய்போலும் ! உன் தாயாரி அசோதைப் பிராட்டியார் கண்டித்துத் திட்டஞ் செய்யாததால் இன்று எங்களுக்குப் பெரிய அவமானத்தை ஏற்படுத்தியிருக்கின்றாய் ! முன்பு ஆய்ச்சி யர்கள் வீட்டில் வெண்ணெய் முதலானவற்றைத் திருடித் தொல்லை தந்ததை அவர்கள் உன் தாயிடம் முறையிட்ட போது உன்னை அவர் செல்லமாகக் கண்டித்தாரே அன்றிக் கடுமையாகத் தண்டித்தாரில்லை: இப்படியே உன்னை வளர்த்ததால் இன்று நீ இந்த நேரத்தில் இக்குளத்திற்கு வந்து எம் சேலைகளைக் களவாடிக்கொண்டு மரத்தில் மறைத்து வைத்துக்கொண்டு எம்மை ஏளனம் செய்கின் றாய் ! இப்படி எங்களை ஏளனம் செய்வது உனக்குத்

தப்பென்று புரியவில்லையா ! நீ ஆசையால் உன் அறிவை இழந்து இருப்பதாலே இப்படிச் செய்தாய்போலும்.

வஞ்சனையாக உன்னை மாய்ப்பதற்காக வந்த பூதனை அப்படியே பிடித்துக்கொண்டு அவளின் பாலைக் குடித்ததோடு உயிரையும் குடித்தாய். இப்படித் தப்பிதம் செய்யவந்த பூதனை வேதனைப்பட ஒழித்தாய். இஃது னக்குப் பெருமையை ஏற்படுத்தியதாகும். இத்தகைய பெருமையுடைய நீயோ எங்கள் ஆடைகளைக் கவர்ந்து, நாங்கள் நிருவாணமாக நின்றிட வைத்தது இழிவை உடையதாகுமன்றோ ?

எங்கள் கோலத்தைக் கண்டு நீ வெட்கப்படாமல் இருப்பது உன் பெருமைக்குச் சிறுமையாகும். ஆடையின்றி இருக்கும் அலங்கோல நிலையோ எங்களை மிகவும் அவதிக் குள்ளாக்கியது. கருணையுடன் வந்துதவி செய்யும் கண்ண பெருமானே எம் ஆடையைத் தந்தருள வேண்டுகின்றோம். என்று கூறிய ஆய்ச்சியர்கள் கருத்தையே ஓவியமாக

"கஞ்சன் வலைவைத்த அன்று
காரிருள் எல்லிற் பிழைத்து
நெஞ்சுதுக்கம், செய்யப் போந்தாய்
நின்றஇக் கன்னிய ரோமை
அஞ்ச உரப்பாள் அசோதை
ஆணாட விட்டிட் டிருக்கும்
வஞ்சகப் பேய்ச்சி பாலுண்ட
மசிமையிலீ கூறை தாராய் ! (29)

என்று கோதை வரைந்து பாடுவார். இப்பாசுரத்தில் ஒரு வரலாற்றை நினைவு கூர்ந்தார். தங்கை தேவகிக்குப் பிறக்கப்போகும் எட்டாவது குழந்தையால் கம்சன் மாய்வான் என வானில் எழுந்த ஒலி விளித்ததால், தேவகியையும், தேவகியின் கணவனையும் சிறையில் வைத்ததோடு இவர்களுக்குப் பிறந்த ஏழு குழந்தைகளை யும் தன் உடைவாளால் வெட்டிக் கொன்றான் கம்சன்,

எட்டாவது குழந்தையான கண்ணன் சிறையில் பிறந் தான். இரவில் பிறந்ததால் கம்சனுக்குச் செய்தி தெரியாது. கண்ணன் பிறந்ததும் பெற்றோர்களை நோக்கி என்னை இந்த இரவுக்குள் ஆயர்பாடியில் அசோதையிடம் வைத்து விட்டு, அவர் பெற்ற பெண் குழந்தையான சத்தியை இங்கே கொண்டுவந்து விடுங்கள் என்றான். பிறந்த குழந்தை பேசியதைக் கேட்டு வியந்த பெற்றோர்கள், குழந்தை கூறியவாறே செய்தார்கள் என்பதைக் கோதை

"கஞ்சன் வலைவைத்த அன்று
காரிருள் எல்லிற் பிழைத்து"

என்ற அடிகளால் விளக்கினார். இங்கே ஆய்ச்சியர்கள், கண்ணனைப் பார்த்து, கம்சனிடம் தப்பிப் பிழைத்த நீயோ ஆயர்பாடியில் எங்களை வாழவைப்பாய் என்று நினைத்தோம்; ஆனால் இப்போது நீ செய்த செய்கையைப் பார்த்தால், எங்களை வருத்தித் துன்புறுத்தவே வந்தாய் போலும் என்றதை,

"நெஞ்சு துக்கஞ் செய்ய போந்தாய்'"

என்பதால் குறித்தார். கண்ணன் செய்யும் தீமைகளை ஆய்ச்சியர்கள் அசோதையிடம் கூறியும் அவர் கண்டிக் காமல் விட்டதை

"அஞ்ச உரப்பாள் அசோதை"

எனக் கூறுவதால் சுட்டினார். இதனால் கண்ணன்பால் யசோதை கொண்டிருந்த பெருவிருப்பினைக் காணலாம். கண்ணன் தன் விருப்பம்போல நடந்தும், குறும்புச்செயல் செய்தும் வந்ததை

"ஆணாட விட்டிட் டிருக்கும்"

என்பதால் குறித்தார். பிறவி எடுத்த துன்பத்தை நீக்கிப் பேரின்பம் நல்கவல்ல உன்னை நம்பிப் போற்றும் எங்க

ளுக்கு நன்மை தாராமல் துன்பம் செய்வதை ''மரிமை யிலீ" என்றதால் தெரிவித்தார். கடைசியாகக் ''கூறை தாராய்" என்றதில் உன் திருவருளைத் தருவாயாக என்று கூறி மாயபிரானின் மாணடியில் ஆய்ச்சியர் வீழ்ந்து சரணாகதியாயினர். அவனிடம் சரணடைதலே பெருவாழ் வென, எடுத்துக்காட்டவே இவ்வோவியத்தைச் செவ்வி விளங்க இசைத்தார்.

## மாதவனைப் பாடிடுக! வைகுந்தம் கிட்டிடுமே!

எமக்கு அமைதியை அருளவந்த அற்புதத் தெய்வமே! கார்நிற மேனியைப் பெற்ற கண்ண பெருமானே ! ஆயச் சிறுமியர்களான எம்முடன் நீ விளையாடிய நிலையைக் கூறிடின் இனிமை தருவனவாகும். பொன்னால் கட்டப்பட்ட மாடங்களைக்கொண்ட திருவில்லிபுத்தூரில் வாழ்கின்ற நன் மக்களின் உயர்ந்த தலைவரான பெரியாழ்வார் என்னும் பட்டர்பிரான் பெற்றெடுத்த திருமகள் கோதையாகியயான் இன்னிசையால் கண்ணபெருமானைப்பற்றி அருளிச் செய்த சொல்மாலைகளான இப்பத்துப் பாசுரங்களையும் கற்க வல்லவர்கள் விரும்பிப்பெறக் கருதும் பரமபத்தைப் பெற்றிடவியலும். அங்கே அச்செங்கண்மாலோடு இங்கித மாகச் சார்ந்து நிலைத்து வாழவியலும் என்ற செய்தியினை ஓர் பாட்டோவியமாக்கினார். அதை

''கன்னிய ரோடெங்கள் நம்பி
கரிய பிரான்விளை யாட்டைப்
பொன்னியல் மாடங்கள் சூழ்ந்த
புதுவையர் கோன்பட்டன் கோதை
இன்னிசையால் சொன்ன மாலை
ஈரைந்தும் வல்லவர் தாம்போய்
மன்னிய மாதவ னோடு
வைகுந்தம் புக்கிருப் பாரே ! (80)

என்று வரைந்த கோதை இனிமை தோன்ற பாடினார். கரியபிரானாகிய கண்ணபெருமானோடு கலந்து விளையாடிய செய்தியை உலகம் உய்ய உவந்து உரைசெய்தார். செம்பொருளான எம்பெருமானோடு கலந்து இன்புறப் பாடிய இப்பத்துப் பாசுரங்களைப் பாங்குற உணர்ந்து பாடுவோர்கள் யாவருமே வல்லவர்களாவார்கள். இந்த நல்லவர்கள் வைகுந்தத்தில் மைவண்ணக் கண்ணபெருமானோடு சார்ந்தே இன்பம் துய்ப்பார்கள்; பிறவாமைப் பேற்றை எய்தி நிலைத்து வாழ்வார்கள் என்று கூறினார். பாடுவோர்க்கு நன்மை ஏற்படுமென்று இப்பாசுரத்தால் பயனைக்கூறி முடிக்கின்றார்.

"தந்தை தாய் மறவேல்" என்று கூறியதற்கொப்ப தாயாகவும் தந்தையாகவும் இருந்து, அருமையாக நெறியோடு வளர்த்த பெரியாழ்வாரை நினைவுகூர்ந்திட எண்ணியவர்

"புதுவையர் கோன்பட்டன்"

என்ற தொடர்மொழியால் சுட்டினார். தந்தையை மறவாமல் போற்றும் கோதை தம் ஊரையும் மறவாமல் போற்றுவதைப் "புதுவை" எனக் குறித்ததால் தெரிவித்தார். நீராடல் குறித்துப் பாடிய பாசுரங்களான இவற்றில் செம்பொருளான எம்பெருமானைத் தம் மனமே உருகப் பாடித் தெரிவித்தார்.

முதல் பாசுரத்தில் "அரவணைமேல் பள்ளிகொண்டதைக் குறித்தார்". இரண்டாம் பாசுரத்தில் "மாலே மாயனே'" எனச் சுட்டினார். மூன்றாம் பாசுரத்தில் "ஆயன்" என அறிவித்தார். நான்காம் பாசுரத்தில் வில்லெடுத்து இலங்கையை அழித்தவனைக் காட்டினார். ஐந்தாம் பாசுரத்தில் அவனின் கரிய கோலத்தைத் தெரிய கூறினார். ஆறாம் பாசுரத்தில் குடம் எடுத்துக் கூத்தாடிய

கோவிந்தனைக் கூறினார். ஏழாம் பாசுரத்தில் ஊழியெல் லாம் உணர்ந்தவன் என உரைத்தார். எட்டாம் பாசுரத் தில் "அறிதுயில் கொண்டவன்" என்று அழகுறக் கூறினார். ஒன்பதாம் பாசுரத்தில் "பேய்ச்சியின்பால் உண்டனன்" எனப் படம்பிடித்தார். பத்தாம் பாசுரத்தில் "பரமபத நாதனைப்" பாங்குறக் குறித்துப் பயன்கோரினார்.

இவ்வாறு செவ்விதோன்றப் பாரளந்தானைப் பரக்கப் பேசிய அவர், சீராக வரைந்த காதல் ஓவியத்தில் அவனைக் களிநடம் புரியக் காட்டினார்: மாட்சிமையுடன் மன்பதையை ஆட்சி நடத்தும் ஆய பிரானைத் தம் வாய்மையால் இசைத்து மகிழ்ந்தார். தாயாகி உலகம் புரந்த தயாபரனை நேயத்தோடு அடைய முயன்றார். உலகம் அம்மாயனைப் போற்றிப் பெறவும் வழிகாட்டினார்.

(நேரிசை வெண்பா)

**சீரா டலைப்பற்றி நெஞ்சுவந்து பாடியதால்**
**ஆரா வமுதன் அரவணைத்துப்—பேரான**
**பேர் இன்பம் நல்கப் பெரிதுவந்த கோதையவன்**
**சீர் அடியில் நின்றார் சிறந்து!**

**நிருவாண மாகியே நின்றதனால் கண்ண**
**பெருமானின் பேரின்பம் பெற்ற—திருவருளைக்**
**காட்டிடவே கோதைசெய்த காதல்பாட் டோவியத்தை**
**மாட்சியுடன் தந்தார் வணங்கு!**

## நான்காம் திருமொழி
## கோவிந்தனை எண்ணி கூடல் இழைக்கின்றார் !

1. மண்மகள் போற்ற வானவர் ஏத்த
வசுதேவர் தேவகி பெற்ற
புண்ணியன் தோன்றி ஆயர்தம் குலத்தைப்
பொலிவுடன் செய்தனன் மாயக்
கண்ணனே திருமா லிருஞ்சோலை தன்னில்
களிப்புடன் திகழ்ந்தனன் வந்து
பண்புற என்னைக் கூடுவா னாகில்
பரிவுடன் கூடலே கூடு!

2. வேங்கடம் கண்ண புரம்வாழும் அண்ணல்
வேட்கையால் எனைவந்து பற்ற
ஏங்கியே நிற்கும் என்மனம் மகிழ்ந்தே
இணைந்திடக் கூடலே கூடிப்
பாங்குற என்னைச் சேர்ந்திட வைத்தல்
பயனெனக் கூறியே பாடிப்
பூங்குயில் போல இசைத்தவர் கோதை
பூபாலன் தனைப்போற்றி நின்றார்!

3. மாயமே புரிந்தான் வலிமையால் கடம்ப
மரத்தின்மேல் ஏறியே மடுவில்
ஆயர்கள் அஞ்ச காளிங்கன் என்னும்
அரவத்தின் மீதேறி அழித்த
காயம்பூ வண்ணன் எனைஏற்ப னாகில்
களிப்புறக் கூடலே கூடி
நேயமாய் இணைய நெஞ்சுவந் திசைத்து
நிமலனை வேண்டினார் கோதை!

## நான்காந் திருமொழி

இத்திருமொழியைக் கலிவிருத்தப் பாவால் தித்திக்கவே இயற்றியுள்ளார் கோதை.

நீராடலின் போது விளையாட்டாகச் சேலைகளை மறைத்து வைத்துத் துன்புறுத்திய மாயபிரானிடம் ஆய்ச்சியர்கள் கோபம் கொண்டார்கள்; என்றாலும், மறைத்து வைத்த சேலைகளை அவனிடமிருந்து பெற்று உடுத்திக் கொண்டிட அவர்கள் மனமிரங்கி வேண்டினார்கள்.

அவனும் அவர்கள் பால் இரக்கங் காட்டும் தாயைப் போன்று மனமிரங்கி மறைத்து வைத்திருந்த சேலைகளைக் கொடுத்தான்; அளித்தவன் அவர்களின் மனங்களைத் தன்வயமாக்கியப் பின்னரே பிரிந்தான், இனியவன் இதயத்தைக் கவர்ந்துமே பிரிந்ததால் ஆய்ச்சியர்கள் பிரிந்தவனை எண்ணி மனம் வருந்தினார்கள். அவனின் பிரிவாற்றாமையால் மிகவும் துன்பமெய்தினார்கள்; அவர்கள் அவனைச் சேர்ந்து இன்புறவே கூடலிழைக்கத் தலைப்பட்டார்கள்.

இவ்வாறு கூடல் இழைப்பதற்காக ஈடுபட்ட அவர்கள் எண்ணிய கருத்தையெல்லாம் இத்திருமொழியில் படமாக வரைந்து காட்டியுள்ளார் கோதை. கூடலிழைத்தலாவது வட்டமாகக் கோட்டைக் கிழித்து அக்கோட்டிற்குள் சுழித்துக் கொண்டே போய் முன்னர் தொடங்கிய கோட்டிலே முடிக்கும் கோட்டை இணைத்தலாகும். இவ்வாறு வரைந்த கோட்டை இணைத்த பின்னர் வரைந்த சுழிகளைக் கணக்கிட்டுப் பார்க்கும்போது இரட்டைப் படைக் கணக்கில் இருந்தால் எம்பெருமானோடு கூடுகின்ற நிலையைக் குறிப்பதாகும், இவ்வாறின்றி, ஒற்றைப் படைக் கணக்கிலிருந்தால் அவனோடு கூட இயலாமையைக் குறிப்பதாகும். இவ்வாறு

இழைத்தலே கூடலிழைத்தலாகும். இவற்றைக் குறி பார்த்தல் என்றும் சோதிடம் பார்த்தல் என்றும் இக் காலத்தவர் கூறுவர்.

தலைவன் பால் கொண்ட காதல் நிறைவேறுமா, நிறைவேறாதா என்று ஏங்கிய தலைவி இழைக்கின்ற கூடல் தன்னைச் சங்க இலக்கியமும் பேசுதல் காணலாம்.

இது சங்க இலக்கியத்திலே அகத்துறையில் வரும் செய்தியாகும், இக்கருத்தின்படி இறைவனைப் பற்றக் கருதிய அருளாளர்களும் பாடியுள்ளார்கள். இவர்கள் மெய்யுணர்வில் நின்று உய்வருளும் உத்தமனோடு கலக்கவே இத்துறையைப் பயன்படுத்தினார்கள். அந்த வகையில் திருமழிசை யாழ்வார் நான்முகன் திருவந்தாதியில் தலைவியாகிய அவர் தலைவனாகிய தயாபரனை அடைந்திடக் கூடல் இழைத்த செய்தியினைக் காணலாம். அதை,

''அழைப்பன் திருவேங் கடத்தானைக் காண
இழைப்பன் திருக் கூடல் கூட!''

என்றருளிச் செய்திருப்பதைக் கொண்டு அறியலாம். அருளாளனை அடைந்திடவே தலைவியாகிய திருமழிசைப் பிரான் பாடியதைப் போன்று கோதைப் பிராட்டியாரும் தலைவனாகிய தாமரைக் கண்ணனை அடையவே கூடல் இழைத்தார். ஆடவராகிய திருமழிசை யாழ்வாரோ பெண்மைத் தன்மையெய்திக் கூடல் இழைக்க நேர்ந்தது.

ஆனால், கோதைப் பிராட்டியாரோ, இயல்பாகவே பெண் தன்மையைப் பெற்றிருந்ததால், எளிதாக அவனைப் பற்றும் தகுதியில் கூடலிழைத்தார். கோவிந்தனைப் பாடினார்.

## வள்ளலைக் கூடக் கூடிடு

கூடலிழைத்துக் கோவிந்தனை அடைந்திடவே விழைந்தார் கோதை. பக்தர்கள் பல்லோர் கூடி இரு

கைகளைக் கூப்பி வணங்குகின்ற தெய்வம்தான் திருமாலிருஞ்சோலைப் பெருமான். அங்கே அடியார்க்கு அருளும் தன்மையில் விளங்கி நிற்பவனே அவன். அப்படித் திருமாலிருஞ் சோலையிலே எழுந்தருளி இருக்கின்ற மணவாளனாகிய அவனோ இனிதுபள்ளி கொண்டுள்ளான். அவ்விடத்திற்குச் சென்றும் அங்குப் பள்ளிகொண்டுள்ள அம்மாயனின் திருவடியைப் பிடிப்பதற்கு யான் பெரிதும் விரும்புகின்றேன் என்று கூறுகின்றார். இதற்கு அவன் திருவுள்ளங் கொண்டு அவ்வாய்ப்பினை எனக்கு அருளுவானேயானால் கூடலே நீ கூடிடு என்று கோதை கூறுகின்றார். இந்த இனிய செய்தியை,

"தெள்ளி யார் பலர் கை தொழும் தேவனார்
வள்ளல் மாலிருஞ் சோலை மணாளனார்!
பள்ளி கொள்ளும் இடத்தடி கொட்டிடக்
கொள்ளு மாகில் நீ கூடிடு கூடலே!" (31)

என்று பாடினார், இப்பாவினை ஒப்பரிய ஓவியமாக வரைந்தார். விநாடி கூட வீணாக்காமல் விண்ணமுதனே உன்னை எண்ணத்தில் வைத்துப் போற்றிய அடியார்கள் படிமிசையில் பெற்ற இன்பத்தை எளியவர்களான நாங்களும் பெறவே இங்கு வந்துள்ளோம். பெருமானே! நீ அருள் சொரியவே திருமாலிருஞ் சோலையில் கோயில் கொண்டிலங்குகின்றாய். இவ்வாறுள்ள நீயோ கீழ்த் திசையில் காலை நீட்டியும், வடதிசையில் பின்புறத்தைக் காட்டியும், தமிழகமாகிய தென்திசையை நோக்கியும் அறிதுயில் கொண்டு திருவரங்கத்தில் கோயில் கொண்டுள்ளாய்; அங்கு வந்து உன் அழகிய சிவந்த திருவடியைப் பிடிக்கும் பேறு கிட்டுமா? என்று ஏங்கிக் கொண்டிருக்கின்றேன்; அப்படி ஏங்கிக் கொண்டிருக்கும் எனக்கு அந்த இனிய பேறு கிட்டிடவே கூடலே கூடுக என்றார்.

இரக்கமுடன் வந்து அருள் சொரியும் அரங்கநாயக னுக்கே தொண்டு செய்து உய்கின்ற பேற்றினையே,

பெருமைக்குரிய அரிதான பேறாகக் கருதுகிறேன். எனவே, அப்பேற்றினை யான் பெற்றிட வேண்டும் என்றே கோதை கூடலை இழைக்கின்றார்.

மேற்குறித்த பாசுரத்தில் ''தெள்ளியார் பலர்'' என்ற தொடரை ஆண்டதில் தெளிந்த அறிவுடையவர்களான பலரைக் குறித்தார். இவர்கள் உவப்பு மேவிட உலகளந்த பெருமானை உணர்ந்து போற்றும் பண்புடையவர்களாக இருப்பதால் ''தெள்ளியார்'' எனத் தெரிவித்தார். இதில் ''தேவனார்'' என்றதில் வாழ்விக்கும் இப் பெருமானையே கூறினார்.

முத்தியை அடைவதற்கு நித்தமும், சத்தியம் தவறாமலே சால்புடன் இருக்க வேண்டும். அப்படி இருக்க விழைபவர்களுக்கு, விரைந்து வந்து அருள்பாலிக்கும், கருமாணிக்கமான கண்ணபெருமானின் அருமைப்பாட்டினை எடுத்துக்காட்டவே, கோதைப்பிராட்டியார் தம் வாயாரப் பாடியதைக் கையார ஓவியமாக வரைந்தார். அந்தக் காதல் ஓவியத்தில் தேவனார் என இயம்பித் தம் அவாவினைக் காட்டினார்.

''வள்ளல்'' என்றதில் வரையறையில்லாமல் வழங்கும் அண்ணலைக் குறித்தார். இல்லையென்று வந்தவர்க்கெல்லாம் வாரி வழங்கிய அவன் வள்ளல்; கொடியவரைக் கெடுத்துத் துடிப்பவர்க்கே கொடுத்து உதவுகின்ற அவனே வள்ளல் என்றார். அவனையே மாமாயன் என்றார்.

''மணாளனார்'' என்றதில் எம்பெருமான் மணக் கோலம் கொண்டே இருப்பவன். இணங்கி வணங்கும் தன் அடியார்களை அன்புடன் ஆதரித்து அவர்களை மகிழ்ச்சிக் கடலில் மூழ்க வைப்பவன் எனக் குறித்தார். மணவாளனார் என்றுரைக்க வேண்டியதை மணாளனார் எனச் சுருக்கியே விரும்பி இசைத்தார். ''பள்ளி கொள்ளுமிடம்'' என்றதால் அவன் படுத்துக்கொண்டு கோயில் கொண்டுள்ள திருவரங்கத்தினைக் குறித்தார்.

"அடிகொட்டிடக் கொள்ளுமாகில்" என்றதில் அன்று இவ்வுலகத்தை அளந்தத் திருவடிகள் நொந்தனவோ என்று அவனைக் குறித்து வருத்தம் தெரிவிக்கின்றார். அடியிட்டுச் சென்று அடியார்களின் துயரைத் தீர்த்து நலஞ்செய்த மாயனின் அந்தத் திருவடிகளைப் பற்றிப் பிடிப்பதற்கு எனக்கு அப்பெருமான் அருள் சுரப்பானா? எனக் கோதை எண்ணுகின்றார்.

அப்படிக் கருதியவர் "கூடிடு கூடலே" என்றதில் எம்பெருமான் தன்னுடைய திருவடியைப் பற்றிட எனக்கு அருள்வானேயானால் நான் இழைத்திடும் கூடல் கூடிடவே வேண்டுமெனத் தெரிவிக்கின்றார்.

## வாமனன் வரக் கூடிடு

காட்டிலுள்ள திருவேங்கட மலையிலும், நகரத்திலுள்ள திருக்கண்ண புரத்திலும் குறைவின்றி, நிறைவுடனும், அகமகிழ்ச்சியுடனும் நித்தம் நலம் சொரியும் தன்மையுடன் இருக்கும் மாமாயன் வாமன அவதாரம் எடுத்தவன் ஆவான்; அந்தகையவனே ஓடிவந்து என் கையினைப் பிடித்துத் தன்னோடு அணைத்துக் கொள்வானேயானால் கூடலே நீ கூடிடு என்று

"காட்டில் வேங்கடம் கண்ண புரநகர்
வாட்ட மின்றி மகிழ்ந்துறை வாமனன்
ஓட்டரா வந்தென் கைப்பற்றித் தன்னொடும்
கூட்டு மாகில்நீ கூடிடு கூடலே!" (32)

எனப் பாடிய கோதை அவனோடு சேர்ந்தின்புற வேண்டும் என்றே நினைக்கின்றார்.

திருவேங்கட மலையிலும் திருக்கண்ணபுரத்திலும் இருக்கும் எம்பெருமான் எனக்கு மகிழ்ச்சியைத் தரவே வருவான்; அப்படி வந்தருள்புவன் சடுதியில் உடனே ஓடி

வந்து என்னைத் தன்னோடு அணைத்துக் கொள்வானே யானால், அப்படி வருபவன் வந்தே தழுவுவது உண்மை யானால் கூடலே கூடிடு எனக் கூறுகின்றார்.

"காட்டில் வேங்கடம்" என்றதில் தண்ட காரண்யத்தில் முனிவர்களுடன் கூடியிருந்த அக்காட்டில் இராமபிரான் அனுபவித்திருந்த துன்ப நிலையை நினைவு கூர்ந்தார். இஃதல்லாமல் திருவேங்கடமுடையான் மரஞ் செடி, கொடிகளெல்லாம் இருக்கும் காட்டில் வதிக் கின்றான் என்பதையும் நினைவு கூர்ந்தார்.

"கண்ண புரநகர்" என்றதில் அயோத்தி மாநகரில் இராமபிரான் அனைவருடன் கூடியிருந்து அனுபவித்த இன்ப நிலையை நினைவு கூர்ந்தார். இஃதல்லாமல் கண்ண புரநகரில் பண்ணவமூர்த்தி பாங்குறவே விளங்கு கின்றான் என்பதையும் நினைவு கூர்ந்தார்.

திருவேங்கட மலையைக் கண்ணபிரான் கோபியரோடு விளையாடிய பிருந்தவனத்திற்கு ஒப்பாகவும் திருக் கண்ணபுரத்தை ஆய்ச்சியர்களுடன் ஆடிய ஆயர்பாடிக்கு ஒப்பாகவும் கோதை கருதிப் பாடியதாகக் கூறுவர் சான்றோர். இங்கே இவ்வாறு பாடியதால் கோதையின் மனமானது எம்பெருமானின் முந்தைய நிலையை எண்ணி யிருத்தல் வேண்டும்.

எண்ணியதாலே "குழுமித் தேவர் குழாங்கள் கைத் தொழச் சோதி. வெள்ளத்தினுள்ளே எழுவதோருரு" என்று இசைத்ததையும்

"வாட்டமின்றி மகிழ்ந்து உறை"

எனப் பாடியிருப்பதையும் கொண்டு அறியலாம், இதில் தேவர்கள் மத்தியில் தோன்றிய மாயபிரான் மண்ணுலகில் வாழ்வோர் மத்தியிலும் தோன்றி நலஞ் செய்ய வேண்டும் என விரும்பி வந்ததைக் குறித்தார். இருட்டறையில் உள்ள

விளக்கு ஒளியால் தன்னையும், பிறவற்றையும் காட்டுவதைப் போல நீயும் எங்கள் மத்தியில் தோன்றி உன்பேரொளியால் உன்னையும் காட்டி எங்கள் நிலையையும் அறிந்து உதவி செய்வாயாக என்று வேண்டுகின்றார்.

ஓட்டம்+தரா = வந்து என்கின்ற இரு சொற்களையும் சேர்த்து ஓட்டரா வந்து என்று பாடியதின் பொருள் ஓடிவந்து என்பதாகும். "வாமனன் ஓட்டரா வந்து" என்றதில் மாவலி மன்னனிடம் மூன்றடி மண் கேட்க ஓடிச் சென்றதைப் போன்று துன்பப்படும் எம்மிடமும் ஓடிவந்து நலஞ் செய்வாயாக என எம்பெருமானிடம் கோரி நின்றார். விரைந்து ஓடிவந்து எம்பெருமான் தம்மைக் கூட வேண்டும் என்ற வேகத்தோடும், விழைவோடும் அவர் கூட்விழைத்தார்.

## கோமகன் வரில் கூடிடு!

பூவில் பிறந்த பிரமனும், பற்றுடன் வந்து போற்றும் வானவர்களும் பாடித் துதிப்பதற்குத் தகுதிப் பாடுடைய பரம் பொருளே மிக எழில் பெற்று விளங்கித் திகழ்பவனாவான்; அவன் வாளைப் போன்ற புருவத்தையுடைய தேவகிக்கும் நற்குணங்களையுடைய வசுதேவருக்கும் புதல்வனாகப் பிறந்தவன். அத்தகைய கண்ணபெருமான் என்னை அணைக்க வருவானாகில் கூடவே கூடிடுக என்று

"பூமகன் புகழ் வானவர் போற்றுதற்கு
ஆமகன் அணி வாணுதல் தேவகி
மாமகன் மிகுசீர் வசுதேவர் தம்
கோமகன் வரில் கூடிடு கூடலே!" (33)

என்று இதை இனியதோர் பட்டோவியமாக வரைந்தார் கோதை.

பிரமனும், வானவர்களும் போற்றியதால் இம் மண்ணுலகத்திற்கு எழுந்தருளினான், தேவர்களின்

வேண்டுகோளுக்கிரங்கியே வடமதுரையில் வசு தேவகிக்கும், வசுதேவருக்கும் அருமை மகனாய்த் தோன்றினான் அருளாளன். இவ்வாறு வந்த அவன் என்பால் வருகை தரவேண்டும் என்கின்றார். ஆம், அவன் வேட்கையுடன் வந்து என்னைக் கூட வேண்டுமென்று சொல்லியே கூடலை இழைத்தார் கோதை.

பூமகனும், வானவரும் போற்றுதற்குரிய புகழ் மகன் என்று ஆராவமுதனை அழகுறக் குறித்தார். இறந்த காலம், நிகழ்காலம், எதிர்காலம் ஆகிய மூன்று காலங் களிலும் கீர்த்தியுடன் விளங்கும் கண்ணபெருமானைச் சிறப்பிக்க புகழ் என்னும் வினைத் தொகைச் சொல்லைப் பெய்து அந்த அழகனைப் போற்றிக் கூறினார்.

"அணிவாள் நுதல் தேவகி" என்றது அழகிய முகத்தில் விழைவூட்டும் புருவத்தையுடைய தேவகி எனக் குறித்ததில் கண்ணனைப் பெற்ற மகிழ்வாலே தேவகியின் முகம் ஒளியுடன் அழகு பெற்று விளங்கியதைத் தெரிவித்தார்.

"மிகுசீர் வசுதேவர்" என்று தெரிவித்ததில் கண்ண பெருமானைப் பெற்றதால் வசுதேவர் மிக்ககீர்த்தியைப் பெற்றவர் எனக்குறித்தார். கண்ணபிரானைத் தேவர் களின் தலைவன் என்பதைக் குறித்துக் காட்டிடவே "கோமகன்" என்று கூறினார். அந்தக் கோமகனை அடையவேயான் கூடலிழைக்கின்றேன் என்றார் கோதை.

அப்படி அடைய விரும்பும் அப்பெருமாயனே என்னிடம் வரவேண்டும் என்றும் என்னைக் கூட வேண்டுமென்றும் கூறுகின்றார். அந்த நிலை எனக்கு ஏற்படுமேயானால் கூடலே கூடிடு; என்றும் யான் அவனை அடைய கொடுத்து வைத்திருப்பேனேயாகில் கடிதில் கூடலே கூடிடு என்றும் தம் ஆதங்கத்தைத் தெரிவிக்கின்றார்.

"கோமகன் வரில் கூடிடு கூடலே" என்று பாடியதில் கூடலே நீ கூடுவதோடு அவனையும் என்னையும் கூட்டி வைப்பாயாக எனக் கூடல் இழைத்தார்.

## கூத்தனார் வரின் கூடிடு!

ஆயர்குலத்தைச் சேர்ந்த பெண்டிரும் ஆடவரும் அஞ்சத்தக்க வகையில் கண்ணபிரான் வேகமகாவே செயலில் தலைப்படுகின்றான். காட்டில் பூத்துக் குலுங்கும் கடம்ப மரத்திலேறி, அதன் உச்சியில் நின்று எம்பிக் கீழ் நோக்கிக் குதிக்கின்றான், ஆம் மடுவில் பாய்ந்து நீந்தி விரைகின்றான். அந்த மடுவிலே ஒரு பெரிய பாம்பு படம் எடுத்தாடிக் கொண்டிருக்கிறது. அப்பாம்பு மடுவையே நஞ்சாக்கியிருந்தது. இக்கொடுமையைக் கண்ட கண்ண பெருமான் ஆடிய பாம்பின் தலைமீது பாய்ந்து குதிக்கின்றான். குதித்த கண்ணபிரானுக்கு மடுவில் உள்ள பாம்பால் என்ன இன்னல் நேருமோ என்று அஞ்சியே ஆயர்குலப் பெண்டிரும் ஆடவரும் வருந்தி நின்றார்கள்,

அஞ்சாமல் குதித்த மாயபிரான் நஞ்சுடைய பாம்பினைத் தாக்கி அடக்கியதோடு அதன் தலைமீது நின்று நர்த்தனம் புரிந்தான். அப்படி ஆடியவன் நடனச் சாத்திர முறைப்படியே ஆடினான், அஞ்சிக் கொண் டிருந்தவர்கள், அஞ்சாமல் ஆடிய கண்ணனின் ஆற்றலைக் கண்டு மகிழ்வுற்றுப் போற்றினார்கள். இத்திறத்தால் மக்களாலும் தேவர்களாலும் போற்றுதலுக்குரிய ஆற்றல் சாற்றவனான எம்பெருமானைச் சேர்ந்து மகிழவே எண்ணு கின்றேன். அத்தகையனைச் சேர்ந்தின்புறக் கூடுமாயின் கூடலே கூடிடு எனப்பாடுகின்றார் கோதை.

''ஆய்ச்சி மார்களும் ஆயரும் அஞ்சிடப்
பூத்த நீள்கடம் பேறிப் புகப் பாய்ந்து
வாய்த்த காளியன் மேல்நட மாடிய
கூத்தனார் வரில் கூடிடு கூடலே (34)

என்னும் இவ்வோவியத்திலே கண்ணன் விளையாட்டைக் காட்சிப்படுத்திக் காட்டுகின்றார், மாயபிரான் ஒருநாள் யாரும்புகாத காட்டிற்குள் மாடுகளை ஓட்டிச் செல்கின் றான், செல்லும் அவனுடன் வந்த நண்பர்கள் இந்தக் காட்

டிற்குள் செல்லுதல் நல்லதல்ல என்றும் தொல்லை ஏற்படும் என்றும் தடுத்தார்கள். தடுத்தவர்களின் சொல்லைக் கேட்காமல் மீறிக் காட்டிற்குள் சென்றான். அங்குக் கடம்ப மரங்கள் பூத்துச் சுலுங்கி மணத்தைப் பரப்பி பிறரைக் கவரும் நிலையிலிருந்தன. அம்மரத்தின் மேலேறி உச்சிக்கே சென்றான்; சென்றவன் கீழே ஆழமாக இருந்த மடுவில் பாய்ந்தான். பிறரைச் சாகடிக்கின்ற நஞ்சை மடுவிலே கலந்திடச் செய்து ஆடித்திரிந்த காளியன் என்னும் நாகத்தின் மீது தாவிக்குதித்தும் அதைத் தாக்கியும் நர்த்தனம் செய்தான். கொடியநாகம் அவனைக் கடித்துச் சாகடிக்க தன் ஆற்றலைக் காட்டியபோது அதனை நையப் புடைத்துக் கொட்டத்தை அடக்கிய கோவிந்தன் சாவுலகத்திற்கே அனுப்ப முற்பட்டான்.

இந்த நிலையை அறிந்து மனம் நொந்த நாகக் கன்னி என்பவள் கொல்லாமல் நாகத்தை விடுவிக்கக் கோரி கண்ணனிடம் தஞ்சம் புகுந்து வேண்டினாள். இரங்கிக் கேட்ட நாகக் கன்னியின் வேண்டுகோளுக்கிணங்கி நாகத்தைக் கடலில் போய் வாழ உயிர் பிச்சையளித்தான் உலகளந்தான்.

எந்த இடத்திற்குமே அச்சமின்றிச் செல்பவன் மச்சவதார மூர்த்தி; அச்சுறுத்தி அழிப்பவரைத் துச்சமெனத் தூக்கியெறிந்து மாய்ப்பவன் அம்மாயன். எனவே அயர்கள் கண்ணனே புகக் கூடாத காட்டில் புகுகின்றானே; காளிங்கன் என்னும் பாம்பால் அவனுக்கு அங்கு என்ன நேருமோ என்று அன்றைய நாள் அஞ்சியிருந்தவர்களின் நிலையைக் கோதை இப்பாசுரத் தொடக்கத்திலேயே "ஆய்ச்சிமார்களும் ஆயரும் அஞ்சிட" என்று பாடுவதால் அறியலாம். இதனால் மக்களுக்கு எங்கு யாரால் துன்பம் நேர்ந்தாலும் அங்குச் சென்று அக்கொடியவரைச் சாய்த்து நன்மை செய்பவன் இன்னமுதன் என்று அவனைச் சிறப்பிக்கின்றார். அவன் பெற்றியினை அற்புதமாகக் கூறிய கோதை இவ்விடத்தில் கொடுமை செய்து வந்த நாகம்

பெற்ற பேறு கூடத் தாம் பெறவில்லையே என்று ஏங்கு கின்றார். ஆம் அந்தக் காளிங்க நாகன் என்ன பேறு பெற்றது? எனின் மாமாயன் அதன் தலைமேல் நின்று ஆடுகின்ற வகையிலே அதுபேறு பெற்றது; என்று கருதியே அவர் தமக்கு அந்த வாய்ப்புக் கூட கிட்டவில்லையே என்று ஏங்கி நின்றார், தீயவன் கூட கொடுமை செய்து சாகும்போது அருளாளன் கையாலே சாகும் நிலை ஏற்பட்டால் அதனையே பெரும் பேறாகக் கருதுவான். இந்த இடத்தில் கோதை, தீமை புரிந்த காளியன் என்னும் நாகத்திற்கே அவனால் பேறு கிட்டும் போது நன்மை செய்து நாளும் அவனையே பக்தி செய்யும் எனக்குப் பேறு கிட்டாதது ஏனோ? என்று வினவுகின்றார். இங்கே எம்பெருமானால் காளியன் பெற்ற பேற்றை

''வாய்த்த காளியன்''

என்று தம் பாட்டோவியத்தில் சித்திரித்தார். இவ்வாறு தெரிவித்ததால் நமக்கு இந்த அரிய வாய்ப்பும்கிட்ட வில்லையே என்ற ஆதங்கத்தை அறிவித்தல் காணலாம்' மேலும், நீல மேகக்கண்ணன் என்னை அணைக்க வருவானேயானால் காளியன் மேல் நர்த்தனம் ஆடிய கோலததோடு வந்து தான் அணைத்தல் வேண்டு மென்றே கூடவிழைத்தார்- இதைக்

''கூத்தனார் வரில் கூடலே கூடு''

என்ற தொடர் மொழியாலே கூறுதல் காணலாம்.

## மதயானை உதைத்தவன்பால் சேரக் கூடிடு

மதம் பிடித்த யானை ஒன்றுக்கு நெற்றியிலே பட்டயம் கட்டப்பட்டிருந்தது. அஃது அரசனுக்குரிய யானை என்பதை இப்பட்டயம் காட்டியது. அந்த யானையைக் குவலாய பீட யானை என்றே கூறப்பட்டது. இந்த யானையை முன்பு கம்சனால் செந்தாமரைக் கண்ணன்மேல் ஏவப் பட்டது. கம்சன் இந்த மதயானையைக் கொண்டு

கண்ணபிரானை அழிக்கவே திட்டமிட்டு வளர்த்தான். அதனால் ஆயர்பாடியிலிருந்த கண்ணனெம் பெருமானை வருமாறும் வில் விழா நிகழ்ச்சியில் கலந்து கொண்டு திறத்தைக் காட்டுமாறும் சூழ்ச்சிமனத்தோடு கம்சன் மதுரைக்கு அழைத்தான். அந்தக் கம்சனின் சூதை அறிந்த கண்ணன் அழைப்பை ஏற்று மதுரைக்குச் சென்றான். நிகழ்ச்சியில் கலந்துகொண்ட கண்ணனின்மீது குவாலய பீட யானையைக் கம்சன் ஏவினான். தாக்கவந்த மதயானையைக் கீழே உதைத்துத் தள்ளி, சிதைத்தொழித்தான் செங்கண்மால்; வேகம் காட்டிய மதயானையோ அலறித்துடித்து அப்புறம்போய் வீழ்ந்தது, கதறிக்கொண்டே மடிந்தது. மதயானையை மடித்த மாதவன் மதுரை நகர வீதியின் நடுவே சூரியனைப்போல் ஒளியுடன் நின்றான். மாதரார் விழையும் சோதிவாணவன். அந்தக் கொடிய யானையை வீழ்த்திய கொற்றவனாவான். அத்தகையவனே! என்னைக் கூடவேண்டுமென்று கருதி கோதைப் பிராட்டியார் கூடலே கூடுவாயாக என்று கூறவந்ததை

மாட மாளிகை சூழ் மதுரைப்பதி
நாடி நம்தெருவின் நடுவே வந்திட்டு
ஓடை மாமத யானை யுதைத்தவன்
கூடு மாகில் நீ கூடிடு கூடலே ! (3,5)

என்று பாடுகிறார். இப்பாட்டோவியத்தில் கோதை மதுரையம்பதியில் வாழ்ந்ததாகக் குறித்தார், இவர் வாழ்ந்து வந்த தெரு அனைவர்க்கும் தெரிந்ததாகவே இருந்திருக்க வேண்டும். ஆதலால், அந்தத் தெருவின் பெயரைக் குறிக்காமல் அத்தெருவின் நடுவில் ஒரு மாளிகையில் இவர் இருந்தார் என்பதைக் குறித்ததோடு அந்த மாளிகையின் எதிரிலே இன்னமுதன் வந்து நின்றிருந்தான் என்பதையும் குறித்தார்: அம்மாளிகையின் எதிரில் வந்து நின்றிருந்த மாமாயனோ அம்மாளிகையினுள் புகாமல், நாச்சியார் திருமாளிகை எது ? நாய்ச்சியர் திருமாளிகை

எது? என்று, தெருவெல்லாம் அக்கம் பக்கமெல்லாம் விசாரித்துக்கொண்டே கோதையின் மாளிகைக்குள் வருகின்றான். தான் வந்தது மற்றவர்கட்கெல்லாம் தெரிய வேண்டும் என்ற எண்ணத்தில்தான் இவ்வாறு விசாரித்துக் கொண்டே வந்தான் என்று உரையாசிரியர் உரைக்கின்ற வகையில் உட்பொருளாகக் கருத்தை அமைத்துப் பாடுகின்றார் கோதை, தாம் ஏற்றுக்கொள்ளப் போகின்றவன் சாதாரண மானவன் அல்லன். அவன் மாமத யானையை உதைத்தே கொன்றொழித்த ஆற்றல்மிக்க மாவீரன். அவனையே தாம் விரும்புவதாகக் கூறுகின்றார். இத்தகைய சாதனை படைத்த அந்த மாதவனையே மகிழ்ந்தேற்க விரும்புகின்றேன். எனவே என் சிந்தைக்கினிய வேதநாயகன் வந்து என்னை அடைவானேயானால் கூடலே நீ கூடிடு என்பதை இப்பாட்டோவியத்தில் சித்திரித்துக் காட்டுகின்றார் கோதை, இப்பாட்டோவியத்தில் இடர்செய்த கொடியோரைத் துடைத்தொழிக்கவே இப்பூமிக்கு வந்தவன் மாதவன் என்பதை அழகாகக் குறித்துள்ளார். எம்பெருமான் செருக்குடையாரை நொறுக்கி வீழ்த்தியழிப்பவன். ஆனால், அவன் தன்னையே உவந்தேத்துவோருக்கு உதவிட ஓடிவருவான் என்பதை நன்கு படம்பிடித்தார்.

இதில் கோதைப்பிராட்டி மதுரையம்பதியில் வாழ்ந்ததாகப் பாடினார். இதைப் பாவனையாகப் பாடினார் எனக் கொள்ளவும். கண்ணபெருமான் ஆயர்பாடியில் வாழ்ந்ததாகக் குறித்தது சரியாகும். கண்ணபிரான் வில்விழாவிற்கு வந்தபோது அந்த விழாவினை வெற்றியாக முடித்தபின்னர் மதுரையில் வந்து கோதை இருந்த வீதியின் நடுவே இருந்த மாளிகைக்கு எதிரே நின்றுகொண்டு தம்மை எதிர்பார்த்ததாகவும் பேசுகின்றார். தாமும் அவனை எதிர்பார்த்திருந்ததைச் சொல்லாமல் சொல்கின்றார். மாயபிரான் தம்மை நாடிவந்த செய்தியை இங்கே

**''மதுரைப்பதி நாடிநம் தெருவின்நடுவே வந்திட்டு''**

என்ற தொடரில் தெரிவிப்பதைக் காணலாம். இதில் ''நாடி'' என்னும் சொல்லைத் தேவையின்றிப் பெய்துள்

ளார் எனச் சிலர் நினைக்கக்கூடும். இவ்வாறு நினைப்பது தவறாகும். தேடிவந்த இடத்தைப் பிறரைக் கேட்டுத் தெரிந்துகொண்டு சென்றதை 'நாடி' என்னும் சொல்லால் உணர்த்தினார்.

"வந்திட்டு" என்னும் வினையெச்சத்தை "உதைத்தவன்" என்னும் தொடர்மொழியோடு கூட்டி உரைத்தல் கூடாது. வந்திட்டுக் கூடுமாகில் கூடிடு கூடலே என்று அந்வயப்படுத்தியே உரைக்க வேண்டும்.

## கொற்றவன் வரில் கூடிடு!

எனக்குரியவன் என்று ஏற்கனவே பேசப்பட்டவன் யார் என்று தெரிந்துகொண்டீரா? எனக்குரியவன் வீரமுடைய கொற்றவன்; ஆம்! அவன் கார்வண்ணனே எனக் கூறுகின்றார். அந்தப் பரம்பொருளாகிய வீரன்தான் நாரதரின் சாபத்தால் மரங்களாக நின்றவர்களைத் துன்பத்திலிருந்து விடுவித்தான். அவர்கள் குபேரனுடைய இரண்டு பிள்ளைகள் ஆவார்கள். இவர்கள் இருவரும் நாரதரின் சாபத்தால் மருத மரங்களாக நின்றவர்கள். அவர்களின் சாபம் நீங்கும் படி உரலை இழுத்துக்கொண்டு தவழ்நடை கற்றவன். ஆம் மரம் முறியச் செய்தவன்; குற்றமே புரிந்த கம்சனை இம்சித்துச் செற்றவன்; அவனே மதுராபுரிக்குக் கொற்றவன். அந்தச் சிந்தைக்கினிய அற்புதனே என்னை ஏற்க வருவானேயானால் கூடலே நீ கூடிடு, என்று

"அற்றவன் மருதம் முறிய நடை
கற்றவன் கஞ்சனை வஞ்சனையிற்
செற்றவன் திகழும் மதுரைப் பதிக்
கொற்றவன் வரில் கூடிடு கூடலே"! (36)

என இன்பப் பாட்டோவியமாக இசைக்கின்றார் கோதை. இந்த ஓவியத்தில் அடிதோறும் இனிமையுடைய எதுகையைப் பெய்து ஓசைநயம் தோன்ற இசைக்கும் வகையில் எழுதி

னார். அடிதோறும் வரும் இரண்டாம் எழுத்தையே எதுகை என்பர். இவ்வாறு அடிதோறும் முதற்சீரில் முதல் எழுத்துக்கு அடுத்துள்ள இரண்டாம் எழுத்தை ஓரினமாகப் பெய்தே பலர் எழுதக்கூடும். ஆனால் கோதைப் பிராட்டியாரைப் போன்று எழுதுதல் இயலாது. இப்பாட்டோவியத்தில் ஒவ்வோரடிகளிலும் முன்வரும் முதற்சீரில் ஓரேவிதமான நான்கெழுத்துகளைப் பெய்து விழுமிய நிலையில் இன்னோசை பயின்றுவர, அற்றவன் என்றும், கற்றவன் என்றும், செற்றவன் என்றும், கொற்றவன் என்றும் பாடியிருத்தல் அறியத்தக்கது. இவ்வாறு செவ்வி நலம் தோன்ற பவ்வியமாகப் பாடியிருக்கும் கோதை ஓர் சிறந்த வரகவியாவார்.

பெருமானின் இனிய வரலாற்றுச் செய்தியினை நன்கு சித்திரித்துள்ளார். மருதம் முறிய நடைகற்றவன் என்று கூறியதில் குபேரன் பிள்ளைகளான நளகூபரன், மணிக்கிரீவன் என்பவர்கள் பெண்ணாசை மிக்கவர்கள்; குக்கலைப்போல் வெறிகொண்ட காரணத்தால் தேவமாதர்கள் குளத்திலே நீராடிக்கொண்டிருக்கையில் அவர்களுடன் ஆடையின்றிச் சேர்ந்து ஆடிக்கொண்டிருந்தார்கள். அவ்வழியே நாரதர் வருவதை அறிந்தே தேவமாதர்கள் ஆடையினை உடுத்திக்கொண்டு மறைந்துவிட்டார்கள்.

குபேரனின் பிள்ளைகளிருவரும் நிர்வாணமாகவே இருத்தல் கண்டு வெறுத்தார். அவர்களை மருத மரங்களாகுமாறு நாரதர் சபித்தார். சபித்தவர் இச்சாபம் குழந்தைக் கண்ணன் தவழ்ந்து வரும்போது அவன் வயிற்றில் கட்டப்பட்ட உரலுடன் மருதமரங்களான உங்கள் மத்தியில் இழுத்து வருவான். அப்போது மரங்கள் முறிந்து சாய்ந்து விழும்போது உங்கள் சாபம் தீரும் என்றார் நாரதர். இவ்வாறு தவழ்ந்த கண்ணனால் மருத மரம் முறிய சாபம் நீங்கித் தம் இன்பபுரிக்குச் சேர வாய்ப்பளித்தவனைப் பற்றி, அவர்களின் துன்பத்தை நீக்கியவனைப் பற்றி

"அற்று மருதம் முறிய நடை கற்றவன்" என்று பாடினார் கோதை. இதில் மருதமரங்களை வீழ்த்தியபோது அருளாளன் நடை கற்றவன் என்று பேசுதல் அற்புதமாக வுள்ளது. இங்கே அசுரர்களே மருத மரங்களாக ஆகியவர்கள் என்றும் குன்றெடுத்த கோபாலனைக் கொல்லவே இவர்கள் கம்சனால் ஏவப்பட்டவர்களென்றும் இன்னொரு கருத்தும் நிலவுகின்றது. இதை "ஒருங்கொத்த இணை மருதம் உன்னி வந்தவரை" என்றும்,பொய் மாய மருதான அசுரரை என்றும் பெரியாழ்வார் பாடியவற்றால் அறியலாம். அற்றவன் என்று கூறியதில் இருபொருள் படுமாறு பாடியிருத்தல் காணலாம். மருத மரங்களாக நின்றவர்களை வீழச் செய்தவன் என்று ஒருபொருளும், கோதைப் பிராட்டிக்கு அற்றுத் தீர்த்துக் கொடுத்தவன் என்று இன்னொரு பொருளும் இருத்தல் காணலாம். தம்மை ஏற்றுக் கொள்வதாக முன்பு உறுதிபடுத்திக் கொடுத்தவன் என்பதை அற்றவன் என்பதால் குறித்தார்.

அடுத்து வஞ்சனையுடைய கஞ்சனை மதுரையம் பதிக்கே சென்று வீழ்த்தியவன்; ஆம் அவனைத் தரையிலே வீழ்த்தி மிதித்தே அழித்தவன் என்பதைச் செற்றான் என்று தெளிவாகக் கூறுகின்றார். கஞ்சனைச் செற்றபின் அம் மதுரையம் பதிக்குக் கண்ணனே கொற்றவனானான் என்று பகர்கின்றார். கொற்றவனான கோவிந்தன், தக்கவராகத் திகழ்ந்த உக்கிரசேனரை மன்னராகச் செய்தான். என்ற சரித்திரத்தையும் நாம் உணர்ந்திட "மதுரைப் பதிக் கொற்றவன்" என்றதால் இயம்புகின்றார். தாம் பிடித்த நாட்டைச் சார்புடையாரிடம் ஒப்புவித்துப் பற்றற்றவனாக உள்ள இப் பரம்பொருளின் நிலையைப் படம் பிடித்தார். இத்தகைய ஆற்றல் சான்றவனும் பற்றற்றவனுமான பரந்தாமனையே நான் விரும்புகின்றேன். அவனோ என்னை ஏற்க வருவானானால் கூடலே கூடிடு என்று பாடித் தம் ஓவியத்தை வரைந்தருளினார்.

## கொன்றவன்வரின் கூடிடு !

முன்னாளில் வெறுக்கத்தக்க தீய செயலைச் செய்து வந்த சிசுபாலனையும், வழியின் இடையிலே நின்று தொல்லை கொடுத்து வந்த இரண்டு மருத மரங்களையும் வலிமை பெற்ற ஏழு எருதுகளையும் தகாத செய்கை புரிவதற்கு வந்த பகாசுரனையும் வேலாயுதத்தைக் கொண்டு குத்தித் தாக்க வந்த வஞ்சனையுடை கஞ்சனையும் முன்சென்றே கண்ணன் எதிர்த்துக்கொன்றான்; தன்னேரில்லாத் தலைவனான, என் மனத்தைக் கவர்ந்தவனான இன்னமுதன் என்னை ஏற்க வருவானேயானால், கூடலே கூடிடு எனப் பாடியதை ஓவியமாக

அன்று இன்னா தனசெய் சிசுபாலனும்
நின்று நீள் மருதும் எருதும் புள்ளும்
வென்றி வேல் விறற் கஞ்சனும் வீழமுன்
கொன்றவன்வரில் கூடிடு கூடலே (37)

என்று வரைந்து உளம் உருக இசைத்தார், முன்பாசுரத்தில் இருவரைக் கொன்றவன் என்றவர் இப்பாசுரத்தில் ஐவரை அழித்துக் கொன்றதைக் குறித்தார். முன் கூறிய இருவருடன் இன்னும் மூவரைச் சேர்த்துக் கூறுகின்றார். கண்ணபெருமானின் அத்தையின் மகன் சிசுபாலன், இருள் மனம் கொண்ட கொடியவன். கண்ணனின் எண்ணிறந்த ஆற்றலைக் கண்டு எண்ணத்தில் பொறாமைத் தீயை வளர்த்து வந்தான். அளவில்லாவகையில் கண்ணனைத் திட்டினான். மாயனின் மனம் நோகுமாறு பேசினான். நீசனான சிசுபாலனை அடித்துவீழ்த்த அவனைப் பிடித்தபோது அத்தை வந்து அடிக்காதே! அவனை அழிக்காதே! என வேண்டிக் கேட்டுக் கொண்டதால் பொறுத்த புனிதன் அத்தையிடம் சித்தம் கனிந்து கூறினான். உன் மகன் வன்னெஞ்சன்; அவன் தொடர்ந்து என்னை ஏசுகின்றான்; அந்த மாசுடையவன் நூறு முறைக்கு மேல் திட்டிடத் தலைப் பட்டாலோ கொட்டத்தை வீழ்த்திக் கொன்றொழிப்பேன்.

என்று எல்லைக் கோடிட்டு வந்தான், கூறிய எல்லையை மீறினான் சிசுபாலன்; அந்த வசை மொழிக்காரனை அலறி விழக் கொன்றான் கோவிந்தன். இப்படி அழிந்த கொடியவனைப்பற்றி

''இன்னாதன செய் சிசுபாலன்''

என்று இயம்பினார் கோதை; மருத மரம் முறித்ததை முன்பு அறிந்தோம். பேரழகு வாய்ந்த நப்பின்னை கும்பன் மகள். ஆயர் குலத்தில் தோன்றிய இந்த அழகு நங்கையை மணப்பதற்கு அவாவி நின்றான் கண்ணன்; நப்பின்னை வளர்த்த ஏழு காளைகளை அடக்குபவர்களையே மணப்பதாகச் சபதம் செய்திருந்தாள் நப்பின்னை. அந்த ஆரணங்கை மணக்க ஏழு காளைகளை அடக்கினான் மாயன் என்று பலர் கூறுவர். வேறு சிலர் அரிட்டாசுரன் என்பவன் எருது வடிவம் கொண்டு ஆயர் பாடி மக்களையும், கண்ணபிரானையும் குத்திக் கொல்ல ஓடி வந்த போது அதன் கொம்புகளைப் பற்றிக் கீழே தள்ளி மணிவண்ணன் மடித்தான் என்று கூறுவர்.

எவையாயினும் அவற்றை அடக்கியும் அழித்தும் வெற்றி கண்டவன் கண்ணன் என்பதை அறிகின்றோம். அடுத்து, பகன் எனும் அசுரன் கொக்குவடிவம் தாங்கி மிக்க வேகமாகக் கண்ணனைத் தாக்க வந்தபோது, அதைப் பிடித்து அதன் வாயைப் பனங்கிழங்கு பிளப்பதைப்போலப் பிளந்து சாகடித்தவன் மேகவண்ணன்.

கம்சனை இம்சித்தழித்த செயலை முன்பாசுரத்தில் அறிந்தோம். ஆக ஐந்து கொடியவர்களைப் பிடித்தழித்த பெருமாயனைப் பற்றி இந்த ஓவியத்தில் உவப்புற வரைந்தார் கோதை. முன் பாசுரத்தில் கண்ணபிரானைப் பாராண்ட கொற்றவனாகக் காட்டினார். ஆம். அவன் தான் உலகம் யாவையும் படைத்தவன், வளர்த்தவன், காத்தவன். ஆதலாலே அந்த அற்புதனை அவாவியே கொற்றவன் என்றார். கோதை

இந்தப் பாட்டோவியத்தில் அவனைப் படைத்தவன், காத்தவன் அழித்தவன் என்றார். அழிவைத் தேடிக் கொள்பவர்கள் இழிந்த செயலில் இறங்கிவிடுகின்றதாலே அந்த இரக்கமற்ற அரக்கர்களையே விரைந்து சென்று அழிக்கின்றவன் விண்ணோர் தலைவன் என்றார். இந்தப் பாசுரத்தில் ஐயவரை, அதீந்து பரிந்த நியவரை மாயவன் வதைத்தான் என்று அவனின் வீர பிரதாபத்தை எடுத்துப் பேசிய கோதை

அந்த மாதவனையே ஏற்கவே விழைகின்றார்; அழகனைப் பெற எண்ணியே கூடலை இழைத்தார். கூடலிடம் தம் கருத்தைக்கூறி, அவனை நான் அடைவதாயின் கூடிடு கூடலே என்று இப்பாட்டோவியத்தினை வரைகின்றார்.

## கோவலன் வரில் கூடிடு !

அன்பும் ஆவலும் கொண்டுள்ள தூயவர்களின் மனத்தைத்தவிர, பிறஇடங்களில் அறத்தின் நாயகன் பொருந்தியிரான். அந்தச் செந்தாமரைக்கண்ணன் சொந்தமாக ஆளும் பதி எது? அது இன்ப வாசத்தை வீசி எவரையும் தன் பக்கம் ஈர்க்கும் எழில்மிகுந்த துவரா பதியாகும். அந்தச் சொந்தப்பதியான துவாரகைக்கு இன்னமுதன் அதிபதியாவான். அந்தப் பகுதியில் அழகுற வாழ்ந்து நித்தமும் காலையில் எழுந்து கன்றுகளை ஓட்டிச் சென்று காட்டில் மேய்ப்பவன். அகமகிழ்ந்தும் சுகமாய், சும்மாயிராமலும் நாள்தோறும் கன்றுகளை மேய்த்து வருவதே அவன் மனத்திற்கு மகிழ்ச்சி தருவதாகும். எனவே இச்செயலில் ஈடுபட்டான். உலகையெல்லாம் நலமாக இயங்க நடத்தும் அவன், கன்றுகளை மேய்ப்பதைக் கடனாகக் கொண்டிருந்தான். ஆவலோடு கன்றுகளுடன் விளையாடி மகிழ்ந்தான். மிக்க எழிலுடன் திகழும் அக்கோபாலனாகிய கோவலனே வந்து என்பால் கூடுவானேயாயின் கூடலே கூடிடு என வரைந்த பாவியத்தைக் கோதை

"ஆவல் அன்புடை யார்தம் மனத்தன்றி
மேவலன் விரைசூழ் துவராபதிக்
காவலன் கன்று மேய்த்து விளையாடும்
கோவலன் வரில் கூடிடு கூடலே!" (38)

என்று பாடித் தெரிவிக்கின்றார். இதில் கதியாய் இருக்கும் கண்ணபெருமான் அடியார்பால் ஆவல் உடையவன் என்றார். அவன் அன்பில்லாதவர்களான பொல்லாதவர்கள் மனத்தில் மேவலன் என்று கூறியதால் மேவி நிற்கமாட்டான் எனத் திட்பமாகத் தெரிவிக்கின்றார். இத்தகைய சத்தியசீலன் யார் தெரியுமா? எனக் கேட்டு அவன்தான் துவராபதிக் காவலன் என்று கூறுகின்றார்.

துவராபதிக்கு அதிபதியாகயிருந்தாலும் சும்மகயிராமல் உழைக்கும் பண்பாளனாக, கடமையாற்றுவதில் முனைந்து நிற்பவனாக இருக்கின்றான் இக்கடமை வீரன். கன்றுகளை ஓட்டிச்சென்று, வயிறார மேயவிட்டு அவற்றினோடு உவந்து விளையாடும் கோவலனாவான் என்று கூறுவதில் கோதைக்குப் பெருமகிழ்ச்சி போலும்.

அந்தக் கோவலனே என்வாழ்வின் காவலன் என்று விளம்புகின்றார். தமக்கு ஏற்பட்ட விருப்பினை எண்ணிக் கூடலிழைக்கின்றார் கோதை. தம் விருப்பம் நிறைவேறவே கூடலே கூடிடு எனக்கூறித் தம்மன ஆதங்கத்தைத் தெரிவிக்கின்றார். மேற்குறித்த பாசுரத்தின் முதலடியில் "ஆவல், அன்பு என்ற இரு சொற்களைப் பெய்துள்ளார். இவை இரண்டும் ஒரு பொருளையே குறிக்கும் என்றாலும், வெவ்வேறு பொருளை; உணர்த்தக் காணவாம். ஆவல் என்பது துவாரகைக் காவலனைப் பற்றுவதற்குச் செய்யும் கடமையை உணர்த்துகின்றது. அந்தக் கடமையாலே, காமனை வேண்டியும் சிற்றில் இழைத்தும் நீராடியும், கூடலிழைத்தும் போற்றி அவனைப்பற்ற முயன்ற கோதை, "அன்பு" என்பது ஆராவமுதனை நேரே பாடி அடைய

வழிகாட்டுவதாகும் எனக் கருதினார். தெரிந்தவனோ இடந்தேடி அலையாமல், வேறொருவரின் உதவியில்லாமல் செல்லவேண்டிய இடத்திற்கு எளிதாகச் சேல்லுதல் போன்று, ''அன்பு" இன்னமுதனிடம் எளிதாக, நேராகச் சேர்ப்பிக்கும் கருவி. இந்த அன்பு எந்தவிடத்திலும் கேட்டுப் பெறுவதன்று. ஒவ்வொருவர் உள்ளத்திலும் உருக்கொள் வது, உருக்கொள்ளும் வகையில் உறுதியுடன் ஒழுகவேண்டும் என்று கூறும் கோதை, ஆவல் என்று கடமையாலும், அன்பு என்று உள்ளத்தாலும் அந்தத் தண்ணளியானைப் பற்ற முயல்கின்றார்.

மதுராபதியில் வாழ்ந்தவர்கள் யாதவர்கள். அவர்கள் எவ்வித பயமுமின்றி வாழ்ந்தார்கள். காரணம் அந்தப் பகுதியைப் பாங்குற ஆள்பவன் கண்ணன் என்பதாலே பயமின்றி வாழ்ந்தார்கள் என்பதை

''விரைசூழ் துவராபதி காவலன்"

என்று பாடிக் காவல னான கோவலனைக் குறித்தார். இதற்கு எடுத்துக்காட்டாக!

''மட்டேறு கற்பகத்தை மாதர்க்காய்
வண்துவரை நாட்டானை''

என்று பாடியதால் அறியலாம், எம்பெருமான் நம்பிப் போற்றுபவர்களுக்குக் காவலனாக இருப்பான் என்பதை மேற்குறித்த தொடரால் அறியலாம். அந்த நம்பிக்கை நாயகனையே காவலன் என்று பேசுகின்றார். எல்லோர்க்கும் எளிவந்த பிரானாக இருப்பதைக் காட்ட அவன் ஆயர்குலத்தில் தோன்றினான். அந்த ஒளி போன்ற எளியவனைக் கோவலன் என்று குறித்தார்.

அவனே பரத்துவம்; அவனே அனைத்தும் என்று காட்டவே காவலன் என்றார்: அவனே எளியவன், களிப்புடன் அவனை வேறு எந்தப் பெரிய, சிறந்த, பொருளை வைத்துப் படைத்துப் போற்றாமல் எளிமையுடன் [illegible]

மனத்துடன் அன்பை மட்டும் படைத்துப் போற்றினாலே போதும், விரைந்து ஓடிவந்து உதவும் அந்தத் தண்ணளியானைக் கோவலன் என்று கூறிப் போற்றினார். இந்த எளிவந்த பிரானான கோவலன் தன்னையே நான் விரும்புகின்றேன். அவன் உவந்து வந்து என்னை ஏற்றிட கூடலே கூடிடு எனக் கோதை இழைத்த ஓவியத்தை ஒட்பமுடன் வரைந்தார்.

## கொண்டவன் வரில் கூடிடு!

முன்பொரு காலத்தில் மார்பில் முப்புரி நூலையணிந்தும், கைகளில் சமண்டலமும் முக்கோலும் தண்டும் கொண்டு எளிய கோலத்துடன் குள்ள வடிவம் தாங்கி ஏழைபிராமணன் போன்று மாயபிரான் வாமனன் எனப் பெயர் கொண்டு மாவலி மன்னனிடன் சென்றான். செருக்குடன் திமிர் கொண்டு தனக்கு யாரும் நிகரில்லை என்று ஆட்சி புரிந்தவன் மாவலி மன்னன்.

இவன் பெரிய யாகத்தை ஒன்று நடத்தி வந்தான் இக்காலத்தில் தான் இவனிடத்தில், எளியவனைப் போன்று குறள் வடிவம் தாங்கிய வாமனன் சென்றான். சென்றவனைக் கண்ட மாவலி மன்னன் என்ன வேண்டுமென்று கேட்டான். நீ! எதை வேண்டுமானாலும் எவ்வளவு தேவையானாலும் கேட்கலாம் யான் தடையின்றிக் கொடுப்பேன்; இல்லையென்று சொல்லவே மாட்டேன். நீ விரும்பிக் கேட்பதை எல்லாம் தேட்பாயாக என்று கூறினான்.

அதோடு, என்னைப் போன்று வாரிக் கொடுப்போர் எவருமிரார் என்று செருக்குடன் கூறினான். இத்தகையவனுடைய செருக்கை யடக்கவே குள்ள வடிவம் தாங்கிச் சென்றான் மாயன்.

கபட நாடகம் ஆடுவதில் கண்ணனோ ஈடும் எடுப்பும் இன்றி விளங்குபவன். மாவலியிடத்திலும் கபட நாடகம்

நடத்திக் காட்டவே மிக அடக்கமாக நின்று கேட்டான்: என்ன வேண்டுமென்று கேட்ட மாவலியிடம், இந்தச் சிறிய வடிவினையுள்ள என் கால்களால் அளந்து கொண்டிட மூன்றடி மண்ணே தேவையென்றான் மாதவன். இதைக் கேட்ட மாவலி "பூ" இவ்வளவு தானா? என்று அலட்சியமாக அளந்து கொள் என்று தாரை வார்த்துக் கொடுக்கும்போது வாமனன், சிறுகச்சிறுக ஓங்கி மண்ணுக்கும் விண்ணுக்குமாக வளர்ந்து, நின்றான். நின்றவன் மாவலியும் மற்றவர்களும் வியக்கும் வகையில் மண்ணுலகையும் விண்ணுலகையும் அளாவி நின்றான். அப்படி நின்றவன் இந்த மண்ணுலகை ஓரடியாலும், அந்த விண்ணுலகை ஓரடியாலும், அளந்தான். பின்னர் மூன்றாம் அடிக்கு இடமில்லமையாலே வேறு வழி யில்லாததால் செருக்குடைய மாவலியின் தலையின் மேலே காலை வைத்தழித்தான். இறுமாந்திருந்த, செருக்குற்ற மாவலி ஒரு நொடிக்குள் அழிந்தான். அப்படி அழித்த பெருமானோ எடுத்த அவதாரமே திரிவிக்கிரம அவதார மாகும். தேர்ந்தே இந்த அவதாரம் எடுத்த செந்தாமரைக் கண்ணனையே தாம் விரும்புவதாகக் கூறி, அத்தகை யவனைத்தாம் கூடிடவே கூடலே கூடிடு எனக் கூறி இழைத்த ஓவியத்தைக்

கொண்ட கோலக் குறளுரு வாய்ச்சென்று
பண்டு மாவலி தன்பெரு வேள்வியில்
அண்டமும் நிலனும் அடியொன்றினால்
கொண்டவன் வரில் கூடிடு கூடலே! (39)

என்று இசைக்கின்றார். இதில் குறளுருவம் என்றதால் வாமன அவதாரத்தையும் அண்டமும் நிலனும் அடி யொன்றினால் என்றதால் திரிவிக்கிரம அவதாரத்தையும் நினைவு கூர்ந்தார். இந்த வாமன திரிவிக்கிரம அவதாரங்களின் சிறப்புகளைத் திருப்பாவையிலும் அருமையாகப் பாடிக் காட்டியுள்ளார்,

இந்த இரு அவதாரங்களை அவன் எடுத்ததால் அம்மாயனின் ஈடற்ற தன்மைகளை விளக்கிக் காட்டவே கோதைப் பிராட்டியார் "கொண்ட கோலம்" என்ற தொடரால் சிறப்பாகப் பேசுகின்றார். ஞாலமுதலவனின் பேராற்றலை மாவலியோ தான் செய்த வேள்வியால் காணும் வாய்ப்பினைப் பெற்றான் என்பதைப்

"பண்டு மாவலி தன்பெரு வேள்வியால்"

என்று பாடியதில் குறித்தார். அவனைப் பெறயான் பல்வகையாலும் முயன்றேன். நற்பணிகளாற்றி அவனுக்காகவே வாழும் யான் பக்தியாலும், நோன்பாலும் காணமுயன்றும் அவன் வாய்ப்பைப் பெறவில்லை. எம்பெருமானைப் பற்றிய உணர்வில்லாத, பக்தியில்லாத மாவலியோ அவனைப் பார்த்து அகம் மகிழ்ந்தது எதனால்? என்று தம்முடைய மன ஆதங்கத்தை வெளிப் படுத்தினார். இங்கே மாவலியின் வேள்வியைப் "பெரிய" என்று அடைமொழி கொடுத்துச் சிறப்பிக்கின்றார்;

எம்பெருமான் அளக்கும்போது எடுத்து வைத்த ஒவ்வொரு அடியின் அழகைச் சிறப்பிக்கவே "அடியொன்றினால்" என்று விளக்குகின்றார். எம்பெருமான் நிலத்தை அளந்தான் என்றே குறிக்காமல் "கொண்டவன்" என்றதால் அனைத்தையுமே தன்பால் கொண்டதை அழகாகக் குறித்தார்; இவ்வாறு கொண்டவன் என்னைக் கூடிட வந்தல் கூடலே கூடிடு என்றார் கோதை,

## குழகனார் வரில் கூடிடு

மிகத் தொன்மையானவை வேதங்கள்; அவ்வேதங் களின் உட்பொருளாய் விளங்கி நிற்பவன் உலகளந்த பெருமாயன். கசேந்திரன் என்னும் யானை, ஒரு நாள் மிகத் தொல்லைக்குள்ளாகியது. அத்தொல்லையிலிருந்து விடுபட இயலாமல் மிகச் சிரமப்பட்டது. அதன் மேல் வியர்வை

பெருகி வருவதைப் போன்று மதநீர் வெளிப்பட்டுக் கீழ் நோக்கி வழிந்தது. துன்பத்தாலே இந்நீர் வெளிப்பட்டது. இத்துன்பத்தைப் போக்கவழியில்லாமல் இன்னமுதனை நோக்கி அது கோவிந்தா என்றலறியது

தன் பெயரைக் கூறிய யானையின் அலறல் ஒலியைக் கேட்டு அருளாளன் ஓடி வந்து கருணையுடன் காத்தான். மனித உயிர்களை மட்டுமல்லாமல் பிற எல்லா உயிர்களையும் காப்பவன் கண்ணன், தன்னை எண்ணுகின்ற உயிர்களின் துன்பத்தையன்றி வருந்துகின்ற எல்ல உயிர்களின் துன்பத்தையும் போக்குபவன் வேதநாயகன். எனவே, இத்தகைய இரக்கவுணர்வு பெற்ற அவனை யான் உவந்து போற்றி வருகின்றேன் என்று கோதை கூறுகின்றார்.

அவனோ பிறரைத் தன் வயப்படுத்துகின்ற அழகன். ஈடில்லாத இனியன், கோபியர்களின் மனக்கோயிலில் தங்கி வாழ்பவன்: இங்கிதமுடையவன்; அன்பர்கள் நெஞ்சத்தை அறிந்து உறையும் ஆராவமுதன்; அடியார்களின் தீராத் துயரங்களை ஒருநொடியில் எடுத்தெறிபவன். அந்தச் செந்தாமரைக் கண்ணனையே நான் விரும்புகின்றேன். எனவே, அத்தகையவன் வந்து என்னைச் சேரவருவானேயானால்கூடலே கூடிடு என்று கோதை இழைத்த ஓவியத்தில்

"பழகு நான்மறையின் பொருளாய் மதம்
ஒழுகு வாரணம் உய்யவளித்த எம்
அழகனார் அணி ஆய்ச்சியர் சிந்தையுள்
குழகனார் வரில கூடிடு கூடலே!" (40)

என்றிசைக்கின்றார்.

இதில் கதியற்றும் கவலையுற்றும் கதறிய கசேந்திர ஆழ்வானைக் காக்க இதோ வந்தேன் என்று ஓடி ஆதரவளித்தவன் கோவிந்தன். ஆம் முதலை வாயில் அகப்பட்டு மீள முடியாமல் ஓலமிட்ட யானைக்கு அருள்

பாலிக்கவே தன் சக்கராயுதத்தை விட்டு முதலையைக் கொன்று கஜேந்திராழ்வானை மீட்டவன் கார்வண்ணன். ஆதிமூலமே! என்று மூலாதார பொருளான கோபாலனைக் கூப்பிட்டதால் யானையை ஆபத்திலிருந்து காப்பாற்றியவன் என்பதை

''வாரண முய்ய அளித்த எம் அழகனார்''

எனப்பாடினார். யானையைக் காத்தவனை அழகனார் என்று குறித்தார் கோதை. அக்கினி, இந்திரன், வாயு முதலான தெய்வங்களைப் பற்றி வேதங்கள் பேசினாலும், இத்தெய்வங்களுக்கெல்லாம் மூலகாரணனாய், ஆதிமூலமாய் இருக்கும் நாராயணனையே அனைத்துமென்று தெரிவிக்கவே,

''பழகு நான் மறையின் பொருளாய்''

என்று பாடிப் போற்றித் தெரிவித்தார் கோதை. ஆய்ச்சியர்களின் சிந்தையைப் பெரிதும் விழைந்தவன் மாயன். ஆயச்சியர்கள் அவனைத் தவிர மற்ற எந்தப் பொருளை அறியாதவர்கள், ஆம் அவர்கள் தூயமனத்துடன் மாயனை நேயமுடன் போற்றுபவர்கள். இத்தகைய ஆய்ச்சிறுமியர்களின் கண்களிலே வாழ்பவன் காயாம்பூவண்ணன் என்பதை திருவாய் மொழியில்

''தொடுவே செய்து இளம் ஆய்ச்சியர் கண்ணினுள்''

என்று நம்மாழ்வார் பாடுவார், எனவே, ஆயர்கள் பால் மிக நேயம் கொண்டவன் கண்ணன் என்பதைக் கோதையும் மேற்குறித்த பாட்டோலியத்தில்

''அணி ஆய்ச்சியர் சிந்தையுள் குழகனார்'' என வரைந்து காட்டுகின்றார். மாமாயன் ஆய்ச்சியர்களை விரும்பியத்திற்கு அவர்கள் தூயச்சிந்தையைப் பெற்றவர்கள் ஆவார்கள். ஆம் அத்தூயச் சிந்தையாலே வந்தனை செய்து செந்தாமரைக் கண்ணனைத் தவிர பிறவற்றை நினையாதவர்கள் அவர்கள். ஆதலால் மாதவனும் அவர்கள்

மனக் கேளிக் வாழ்கின்றான் என்பதைக் கோதை அறிந்து தாமும் ஆய்ச்சியாகி, தூயச் சிந்தையாலே மாயனைப் போற்றி அடைந்திட முனைந்தார்.

எனவே, தம் மனத்திற்கு இனியவனாகிய அன்பனே வந்து என்னைக் கூடுவானேயானால் கூடலே கூடிடு, என்று இழைத்து, இசைத்த தம் ஓவியத்தில் அந்த அருளாளனான, அழகனை, விருப்பத்திற்குரிய குழகனை ஆடி நிற்கக் காட்டினார்.

## பத்தும் வல்லார்க் கில்லை பாவமே!

கோதைக் கூடலைப் பற்றிப் பாடிய பத்துப் பாசுரங் களான, ஓவியங்களை அனுபவித்துப் பாடுபவர்களுக்குப் பாவமில்லை என்கின்றார். பாவத்தைப் போக்குகின்ற மாமருந்தாக இப்பத்துப் பாசுரங்கள் உள்ளன என்கின்றார். பாவத்தைப் போக்கும் இப்பத்துப் பாசுரங்களின் வல்லமையை அறிந்து பாடவேண்டுமென்று கூறுகின்றார். இப்பாசுரங்களைப் பாடுவோர்களுக்கு வல்லமையிருக்க வேண்டுமென்கின்றார்.

வல்லமையில்லாமல் பொருளையறியும் ஆற்றலில்லா மல் இப்பாசுரங்களைப் பாடினால் பயன்காணவியலாது என்றுணர்த்துகின்றார். பயன் அளிக்கும் வகையில் பாட் டோவியங்களில் உள்ள பொருளை வல்லமையால் உய்த் துணர்ந்து பாடுகின்றவர்களே பாவங்களை நீக்குகின்ற தகுதிபெற்றவராவார்கள் என்று கூறுகின்றார். உள்ளம் விழைந்து இசைக்கும் வல்லமை பெற்றவர்களுக்கு எம்பெரு மானைப்பற்றி வாழுகின்ற நிலை ஏற்படும் என்கின்றார். இத்தகையவர்களைப் பற்றிய பாவங்களும் பரிதிகண்ட பனி போல் நீங்கும் என்கின்றார்.

ஊடல் உடையவர்கள் அப்பிணி கூடும்போதில் ஏற்படு கின்ற இன்பத்தாலே நீங்கும். எனவே "திருவள்ளுவர்" ஊடல் உவகை என்னும் அதிகாரத்தில் ஊடல் கொண்

டவர் அது நீங்க, கூடும்போது ஏற்படும் இன்பமே நீக்கும் என்று அற்புதமாக விவரித்துப் பேசினார்.

ஆய்ச்சியர்கள் மாயபிரானிடம் ஊடல் கொண்டு அது நீங்கி அவனோடு கூடி இன்பம் அனுபவித்த நிலையைக் கோதைப் பிராட்டியார் அழகுறக் காட்டுகின்றார். முன்பு ஆய்ச்சியர்கள் கண்ணபெருமானிடம் ஊடல் கொண்டிருந்தார்கள்; அப்படியிருந்தவர்கள் மீண்டும் அவனுடன் கூடிட எண்ணினார்கள்; அப்படி எண்ணியவர்கள் கூடலினை இழைத்தார்கள். அக்கூடலைப் பற்றி வரைந்திழைத்த ஓவியங்கள் பத்தாகும்; அவற்றை இசைத்துப் பாடுவோருக்குப் பயன் ஏற்படும் என்பதை

> **''ஊடல் கூடல் உணர்தல் புணர்தலை**
> **நீடு நின்ற நிறைபுகழ் ஆய்ச்சியர்**
> **கூடலைக் குழற்கோதை முன் கூறிய**
> **பாடல் பத்தும் வல்லார்க்கு இல்லை பாவமே !" (41)**

என்று இசைத்தார்.

இதில் ''ஊடல்" என்றது எம்பெருமான் பிரிவால் ஆய்ச்சியர்களுக்கு ஏற்பட்ட பிணக்கைக் குறித்தார். ''கூடல்" என்றது. பிரிந்தவன் மீண்டும் வந்து சேரும்போது ஏற்படும் இன்பத்தைக் குறித்தார்; முன்னாளில் கண்ணன் நேரிலும். தூதுபோனபோதும் கூறியதை மீண்டும் நினைத்துப் பார்ப்பதை ''உணர்தல்'' என்னும் சொல்லால் சுட்டினார்.

தம் நிலையை அவனுக்குக் கூறியதால் கேட்ட அவனும் முற்றம் புகுந்து முறுவல் செய்து நின்றான். நின்றவனையே நெருங்கி ஆசையால் கலந்து இன்புறுவதையே ''புணர்தல்'' என்றார். இங்கே ''புணர்தல்'' என்று சொல்லாமல் ''புணர்தலை'' என்று கூறியதில் ஐகாரம் சாரியையாக நின்றது.

''நீடுநின்ற" எனக் கூறியதில் ஆய்ச்சியர்கள் அநாதி காலமாகவே கண்ணபெருமானோடு பேசியும், மகிழ்ந்தும்,

பழகியிருந்த, இணைந்திருந்த நிலையைக் குறித்தார். ‘‘நிறைபுகழ் ஆய்ச்சியர்” என்றதில் ஆய்ச்சியர்கள் உண்டும், உடுத்தியும் காலத்தினை வீணே போக்கியவர்கள் அல்லர். எம்பெருமானைப் பற்றியே நாளும், பொழுதும், பேசுவ தோடல்லாமல், அவன் திருநாமங்களின் பெருமையையும், அவனின் ஆற்றல்சான்ற அருமைச் செயலினையும் எல்லோ ருக்கும் எடுத்து விளக்கியும் காலத்தைப் பயனுள்ளதாகவும் செய்தவர்கள் என்றார்.

அவனை நினைந்து போற்றுங் காலத்தில் பல்வேறான துன்பங்கள் இவர்களுக்கு ஏற்பட்டாலும், அத்துன்பங் களைக் கண்டு துவளாமல், கொண்ட கொள்கையில் நிலைத்தும் உறுதியுடனும் எடுத்த செயலைச் செய்து முடிப்பவர்கள் என்பனவற்றையெல்லாம் மேற்குறித்த தொடர் மொழியில் படம்பிடித்தார் கோதை.

‘‘நிறைபுகழ் ஆய்ச்சியர்’’ என்று அவர்கள் இருந்ததைப் போல, தாமும் ஆகி, தேவாதி, தேவனைப் போற்றி அடைய முயன்றார். இவர் பாடிய கூடல் ஓவியத்தை நாவாரப் பாடுவோர்க்குப் பாவம் பறந்துபோகும் என்றும், பயன் ஏற்படும் என்றும் கூறி முடிக்கின்றார்.

## நேரிசை வெண்பா

**கூடஅவ னோடு குலவி யிருந்தின்பம்**
**தேடவே கோதையார் தேர்ந்திழைத்த—கூடலில்**
**கோவிந்தன் ஓவியத்தைக் கொண்டெழுதி நாமிசைக்கப்**
**பாவியமாய்த் தந்தார் பரிந்து.**

## ஐந்தாம் திருமொழி

## குயிலே கோவிந்தனை என்பால் அழைப்பாயாக!

1. புகழ்மிகக் கொண்ட புருடோத்த மன்தான்
போந்திவண் என்னையே ஏற்கத்
தகவுடன் யானே போற்றினேன் பல்நாள்
தவமிருந் தேத்தினேன் அவனை
மகிழ்ந்துநீ குயிலே கூவியே என்பால்
வந்திடச் செய்யவே உனையான்
அகமகிழ்ந் தேத்திப் போற்றினேன் என்றே
ஆவலால் பாடினார் கோதை

2. மாதலி என்பான் திறம்படத் தேரை
வகையுறச் செலுத்திய தாலே
பாதகம் செய்த இராவணன் தலைகள்
பத்தினைப் பனங்காய்போல் கொய்த
மாதவன் என்னை ஏற்றிட வேண்டி
மகிழ்வுடன் நினைந்தஎன் கருத்தைச்
சாதக மாக்கிக் கூவிடக் குயில்பால்
சாற்றியே பாடினார் கோதை!

3. எத்திசை யோரும் ஏத்தியே போற்றும்
இருடிகே சன்தனை நாளும்
மெத்தவே போற்றும் என்னுடை மனமோ
விருப்பமே கொண்டதால் அந்த
அத்தனைப் பெறவே எண்ணினேன் அதனால்
அழகுடைக் குயிலேநீ கூவி
சத்திய மாகச் சேர்ப்பாயென் றெண்ணிச்
சால்புடன் இயம்பினர் கோதை!

கோதை இந்த ஐந்தாம் திருமொழியை எழுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தத்தில் எழுதியுள்ளார், யாப்பு மரபில் அனைவரும் மகிழ்ந்து பாடும் வகையில் பாப்புனைந்தருளினார். பிரபந்த நெறியில் முறையாக வரைந்த இக்குயிற்பத்தை மிக்க வனப்போடு பாடியருளி னார். தாம் கூறவந்த செய்தியைச் சால்புறவே தெளிவாக விளக்கமாக, பாடுவோர் உள்ளத்தில் பதிவாகுமாறு இயற்றியருளினார்.

## பவளவாயன் வரக்கூவுவாய்!

முன் திருமொழியில் கூடிடு கூடலே என்று இழைத்த கூடலால் கோதைப் பிராட்டிக்கு நன்மை ஏற்படவில்லை. எனவே, கோதை இத்திருமொழியைக் குயிலிடம் முறையீடு செய்யும் வகையில் பாடினார். அம்மாயன் என்னை அணுகி வந்து இன்பம் தரும் வகையில் நன்மைசெய்ய நீயே அவனிடம் சென்று உன் இனிய குரலெடுத்துக் கூவி, அழைத்து வருவாயாக! என்று இரக்கத்தோடு இயம்புகின் றார்.

புன்னை மரங்களும், குருக்கத்தி மரங்களும், கோங்கு மரங்களும், செருந்தி மரங்களும் நிறைந்திருக்கும் சோலை யிலே வாழுகின்ற கோகிலமே, கேட்பாயாக! நித்தியனாய், அளவிறந்த புகழ்வாய்ந்தவனாய், மாதவனாய், நீலநிற மணி போன்ற நிறத்தனாய் இருக்கும் அவன்தான் நவமணிகளால் பதித்துச் செய்த மணிமுடியினை, அணிந்திருக்கின்றான். அந்த எழில்மிக்கவனான எம்பெருமானை அடைய ஆவல் கொண்ட காரணத்தாலே, என்னுடைய கைவளையல்கள் இயல்பாகவே கழன்று விழுந்தன. இஃது அவனாலே ஏற்பட் டது. இவ்வாறு செய்வது அவனுக்கு ஏற்றதாகுமா? உலகத்தில் இப்படி ஏற்படுவது சரியா? இந்நிலை எங்கே னும் நடந்ததுண்டா? இப்படிச் செய்தது மிக அநீதியாகும். இந்த அநீதியிலிருந்து யான் விடுபடுவதற்கோ எண்ணுகின் றேன். ஆதலால், அருமைக் குயிலே இதற்கு நீதான்

செய்ய வேண்டும்? என்றே உன்னிடம் கூறுகின்றேன். கேட்பாயாக !

பவளம் போன்ற அழகிய வாயையுடைய என் துணைவன் என்னிடம் வருவதற்கு நீ! இரவும், பகலும் எந்நேரமும் அவனின் திருநாமங்களைச் சொல்லிக் கூவிட வேண்டும். அதுவும் அவன் என்னை நோக்கிச் சீக்கிரமாக வரவே நீ! கூவிடவேண்டும் என்று கோதை கூறிய இக்கருத்தின் பாவினை இனிய ஓவியமாக

''மன்னு பெரும்புகழ் மாதவன் மாமணி
வண்ணன் மணிமுடி மைந்தன்
தன்னை உகந்தது காரண மாகஎன்
சங்கிழக்கும் வழக்குண்டே
புன்னை குருக்கத்தி நாழல் செருந்திப்
பொதும்பினில் வாழும் குயிலே
பன்னி யெப்போதும் இருந்து விரைந்தென்
பவளவாயன் வரக் கூவாய்! (42)

என்று வரைந்தருளினார்.

இதில் கோதை தாம் காதலித்த நாயகன் மேம்பாடு உடையவன் என்கின்றார். அவன் நான்கு திக்குகளிலும் கொண்ட கீர்த்தி, தெரிகின்ற வகையிலே மிக்க திறத்தோடு மிளிர்கின்றது என்கின்றார்.

காண்பவர்கள் அனைவரையும் கவரத்தக்க வகையில் கவின்மிகுந்த நீலமேனியை யுடைய அவனோ, அனைவரையும் காக்கின்ற வல்லமை படைத்தவனாவான். தன் சிரசின் மேல் பரவசமூட்டும் அழகிய மணிகளால் செய்யப்பெற்றும் பொலிந்தும் ஒளியுடனும் இருக்கின்ற திருமுடியை அணிந்திருப்பவன் அவன். அல்லலை அகற்றியும், நல்லதை ஏற்படுத்தியும் வைக்கின்ற அவனோ, நினைந்தவாறு அனைத்தையும் முடிக்கும் வல்லமை பெற்றவன் ஆவான்.

இத்தகைய உத்தமனையே நான் காதலிக்கின்றேன். அப்படிக் காதலிக்கின்றவன் என்பால் வாராத காரணத் தால், மெத்தவும் நான் மெலிவடைந்துள்ளேன். அடியார் கள் எண்ணியவுடனே இதோ வந்தேன் என்று விரைந்து சென்று துயர்தீர்க்கும் அவன், என்னைக் காண வாராமல் போனதற்குக் காரணம் என்னவோ? இவ்வாறு அவன் வாராமல் இருப்பது நீதியா? அவனைப் பிரிந்திருத்தலால் எனக்கு வருத்தம் மிகுந்துள்ளது. முன்னே நன்றாக இருந்த உடல் இன்றோ இளைத்து மெலிந்து விட்டது. அதனால் மிக அழகாக என் கைகளில் பொருந்தியிருந்த வளையல்கள் கழன்று விழுந்தன. என்னுடைய தேகம் இளைக்கவும், பருக்கவும் காரணமாய் இருப்பவன் ஒருவன்; அவன் நாகத் தின்மீது நர்த்தனம் புரிந்தவன்; அவன்மேல் ஏற்பட்ட காத லால் நான் இளைத்தேன். அவன் என்னைச் சார்ந்திருக்கும் போது என் மேனி பூரித்துப் பொலிந்திலங்கும்.

பிரியும் போது குச்சி போல் மெலிந்து இளைக்கும்: நான் மெச்சிப் பேசும். அந்த அச்சுதன் வாராமையால், வந்து பாராமையால் நான் குச்சிப் போல் ஆனேன் என்பதைக் கோதையார்

"சங்கிழக்கும் வழக்குண்டே!"

என்று கூறுகின்றார். இந்த நிலை எனக்கு ஏற்பட்டாலும் அவனை மறவாமல் இனியவன் என்றே கூறி உறுதியாகப் போற்றியே வருவேன். என்பதைக் காட்ட "வழக் குண்டே" என்று குறித்துக் காட்டித் தெரிவித்துள்ளதைக் காணலாம்.

அடியார் படுந்துயரைத் தன் துயராகக் கருதும் இறைவன் என்துயரை அறிந்தும் பாராமுகமாய் இருப்பதேனோ? தெரியவில்லை. பாரதப் போரில் அர்ச்சுனனைத் தாக்க வந்த அம்பை ஏற்றுக் கொண்டவன் கண்ணபெருமான். அத்தகையவன் என்னைப் பற்றி மட்டும்

நினையாமலும் வந்து நன்மை செய்யாமலும் இருப்பது எதனால் என்று விளங்கவில்லை? தம்மை நினையாத அம்மாயனைப் பற்றி

''அறிவினால் குறைவில்லாத
அகன் ஞாலத்தவர் அறிய
நெறியெல்லாம் எடுத்துரைத்த
நிறைஞானத் தொருமூர்த்தி!''

என்னும் பேரினை உடையவன் என்று சிறப்பித்தார்.

நியாயங்களை யெல்லாம் எடுத்தோதும் அவனே இப்படி அநியாயம் செய்யத் தலைப்படுவது தகுதியாமோ? என்ற கருத்தை வழக்குண்டே? என்னும் சொல்லால் தெரிவித்தார்; மேலும்

"வைகுந்தனடி பணிந்தார் வளையிழந்து வருந்துவாரே"

எனும் கூற்றைக் கேட்டதில்லையே என்றார்!

குயிலைப் பார்த்து நான் படும் துன்பத்தை அறிந்தும் நீ புன்னை, குருக்கத்தி, நாழல், செருந்தி ஆகிய மலர்களை யுடைய படுக்கையில் இன்புறுதல் நன்றோ? என்று கோதை கேட்கின்றார். குயிலே என் நிலமையை மணி வண்ணனிடம் ஒருமுறையன்று பலமுறை உரைப்பாயாக! ஆணைக்குக் கட்டுப்பட்டவர்கள் விரைந்தோடி அவன் கூறியவாறு செய்தல் போன்று நீ எனக்கு உதவி செய்ய அவனிடம் சென்று கூவ வேண்டும்; அப்படி

நீ கூவும் போது அவன் திருநாமங்களில் எவற்றையும் கூறாமல் ''பவளவாயன்'' என்கின்ற பெயரை மட்டும் சொல்லிக் கூவ வேண்டும்! ஆம் அவன், என்னைத் தேடி வருமாறு கூவ வேண்டுமென்று அவனின் பவளவாயின் மேல் வயப்பட்ட கோதை இவ்வாறு இப்பாட்டோவியத்தை வரைந்தார்.

## வேங்கடவன் வரக்கூவுவாய்

மிகுந்த தேனைப் பெற்றுள்ள செண்பகப் பூவிலே சென்று தேவையற்றதை விடுத்து வேண்டிய சத்தான வற்றையே அனுபவிப்பதனாலே மகிழ்வுடன் இருக்கின்றாய். அந்த மகிழ்ச்சிக்குரிய நிலையில் இனிய இன்பம் தோன்ற இசைக்கும் குயிலே! நான் கூறுவதைக் கேட்பாயாக! தொண்டு செய்வதில் சுவையுடையாரையே ஒலித்து அழைக்கின்ற சங்கைத் தன் இடக்கையில் ஏந்தி இருக்கும் அருளாளன் என்பவன் பெற்றிருக்கும், அந்தப் பெருமை சான்ற உருவத்தை எனக்குக் காட்ட மறுக்கின்றான். அப்படிப்பட்டவன். எதனால், என்னுடைய மனத்தில் வந்து புகுந்து பெரிதும் வருத்துகின்றான்? இஃதல்லாமல் நாள்தோறும் என் உயிரையும் வாட்டி வதைக்கின்றான். நான் தவிக்கவே அவன் மறைவிலிருந்து கொண்டு என்னை ஏளனம் செய்யும் வகையில் வேடிக்கை பார்த்து நிற்கின்றான். எனவே குயிலே! இந்த நேரத்தில் நீ செய்ய வேண்டியது என்னவென்றால், என்னருகில் இருந்து கொண்டு இசைப்பதை விடுத்து, திருவேங்கட மலைமேல் உள்ள அவனிடத்திற்குச் சென்று என்னை நோக்கி வரும்படியும் வந்து இன்பம் தரும்படியும் கூவி அனுப்ப வேண்டும் என்று கோருகின்றார் இதை

"வெள்ளை விளிசங் கிடங்கையிற் கொண்ட
விமலன் எனக்குருக் காட்டான்
உள்ளம் புகுந்தென்னை நைவித்து நாளும்
உயிர்ப்பெய்து கூத்தாட்டுக் காணும்
கள்ளவிழ் செண்பகப் பூமலர் கோதிக்
களித்திசை பாடும் குயிலே
மெள்ள விருந்து மிழற்றி மிழற்றாதென்
வேங்கடவன் வரக்கூவாய்!" (43)

என்று இன்பப் பாட்டோவியமாக வரைந்தருளினார். இதில் எம்பெருமானின் இடக்கையில் உள்ள சங்கைப்

பற்றிக் குறித்துள்ளார்; அதோடு அச்சங்கு அவனுக்குத் தொண்டாற்றுவதைப் போன்றே இடையறாமல் நாமும் தொண்டாற்ற வேண்டும் என்பதைக் குறிப்பிட்டார்.

சங்கைக் காட்டும் அம்மாயன் தன் உருவ எழிலினை காட்ட மறுக்கின்றான் என்கின்றார். அப்படிக் காட்டா தவனையான் மறந்து விடும் நிலையிலிருந்தாலும் என் உள்ளத்தில் புகுந்து இருக்கும் அவனோ எண்ணிப்பார்க்கு மாறு என்னைத் தூண்டுகின்றான் என்ற கருத்தை

"நினைக்கும் தொறும் சொல்லுந்தொறும்
நெஞ்சிடிந்து உகும்!"

என்று பாடுவார்; இதில் என்னுயிரை வாட்டி வதைக் கின்றான்; என்று அவன் செய்யும் இன்னலைக் குறித்தார். இன்னல் செய்வோனை மறந்து வெறுத்து விடாமல் அவனையே அடைய குயிலிடம் முறையீடு செய்கிறார். மணம் பொருந்திய மலர்களையுடைய படுக்கையில் களிப் புடன் கிடக்கும் குயிலே நீ! கூவுவதை மறந்தாயா? ஏன்? இப்போது அவனை எண்ணியே ஏங்கித் தவிக்கும் என்னிலை யினை நீ அறிந்து, கொள்ள வில்லை போலும். நீ உதவி செய்வதாயின் துன்பப்படும் என்னிடம் அவன் வரச் செய்ய வேண்டும். என்பால் நீ அன்பு காட்டும் வகையில் நடந்து கொள்வது நல்லது. நான் விரும்பும் நாராயணன் வேங்கடத் தில் இருக்கின்றான்.

அவன் பால் என்னுடைய நிலையைக் கூறி மகிழ்ந்து வரவே இனிதாகக் கூவி அழைப்பாயாக! அன்று மிதிலை யின் புறத்தே உள்ள சோலையில் தங்கியிருந்த அந்நாயகன் பால் சென்று கூவிய நீ! பிராட்டியைக் கைபிடிக்கச் செய்ததைப் போன்று, வேங்கடத்திலுள்ளவன் என் நாயகன் அவன்பால் சென்று, கூவி என்பால் வர இனிய உதவியினைப் புரிவாயாக எனக் குயிலிடம் முறையீடு செய்தார். கோதை

"விமலன்" என்றதால் அடியார்களுக்காகவே ஆயுதங்களை ஏந்தி நலஞ் செய்யும் மனத்தையுடையவன் என்பதை குறித்தார்.

வாடிய பயிருக்கு மழையைப் பொழிவித்து உதவி செய்கின்ற அவனே, மற்றவுயிர்களுக்கும் உதவி செய்து வருபவன் என்பதை "உருக்காட்டான்" என்றதால் உடன் பாட்டு முறையில் இயம்பினார். குற்றவாளியைக் காவலர்கள் கடுமையாக அடிப்பார்கள். அப்படி அடிப்பவர்கள் அடி வாங்குவோனுக்கு உயிர்போகும் நிலைமை ஏற்படின் நீர் கொடுத்துச் சிறிது நேரம் தேற்றிய பின்னர் மீண்டும் அடிப்பார்கள்.

அவர்களைப் போலவே கண்ணபிரானோ வருத்திச் சாகப் போகிற என் உயிரைத் தேற்றி மீண்டும் வருத்துகின்றான்; என்பதை "நாளும் உயிர் பெய்து" என்ற தொடரால் கூறினார். இவ்வாறு கூறிய எடுத்துக்காட்டால் நம்மை வியப்புறச் செய்கின்றார்; உலகியலில் ஈடுபாடு கொண்ட காரணத்தால் இவ்வாறு கோதைப் பிராட்டியால் கூற நேர்ந்தது.

"செண்பகப் பூ மலர் கோதை"

என்றதில் வந்த "பூ" என்னும் சொல் இன்பமும், துன்பமும் உடைய சமுதாயத்தைக் குறித்தாகும்.

"மலர்" என்னும் சொல்லால் நன்மை மிகுந்த சமுதாயத்தை உணர்த்தினார். "கோதை" என்பது கோதுதல் கொந்துதல் ஆகும். இச்சொல்லால் எனக்கு நன்மையைச் செய்வாய் எனக் கோதை குயிலிடம் உணர்த்தினார்.

## கருமாணிக்கம் வரக்கூவுவாய்!

சிறந்த பூக்கள் அலர்கின்ற சோலையிலே புதிய வாசனை வீசும், அங்கே அழகிய வண்டினங்கள் சாமரஞ்

என்கின்ற பண்ணை இசைச்சின்றன. இதைக் கேட்டுக் கொண்டு பேடையோடு கூடிவாழ்கின்ற குயிலைப் பார்த்து, மாதலி என்பவன், இராவணனுடைய தேரின் முன்னே இராமபிரானின் தேரை நடத்தி, அம்பு மழையைப் பொழியச் செய்தவண்ணம் அரக்கனின் முதன்மையான தலையே அற்றுவிழச் செய்த எம்பெருமானுடைய வரவை ஒரு திக்கிலும்கூட காண்கின்றேனில்லை.

எனவே, என்னுடைய மனத்திற்கு உகந்தவனாகிற நீல நிற மாணிக்கத்தைப் போன்ற திருமேனி உடையவனுமான அப்பரம்பொருளை இங்கே வருமாறு கூவியழைக்க வேண்டுமென்று கோருகின்றேன் என்று கோதை கோகிலத்திடம் முறையீடு செய்கின்றார்.

இந்த இனிய செய்தியைத் தம் செந்தமிழ்ப் பனுவலாகிய ஓவியத்தில் வரைந்து காட்டினார். அதை

''மாதலி தேர்முன்பு கோல்கொள்ள மாயன்
இராவணன்மேல் சரமாரி
தாய்தலை அற்றற்று விழத்தொடுத்த
தலைவன் வரவெங்கும் காணேன்
போதலர் காவில் புதுமணம் நாறப்
பொறிவண்டின் காமரங் கேட்டுன்
காதலியோடுடன் வாழ்குயிலே யென்
கருமாணிக்கம் வரக்கூவாய்'' ! (44)

என்றிசைத்தார்.

இதில் மாதலி என்ற சொல்லால் தேவேந்திரனின் தேர்ப்பாகனைக் குறித்தார். போர்முனையில் தேவேந்திரன் எப்போதும் புறமுதுகு காட்டி யோடியவன் ஒரு நாளும் பகைவரை எதிர்த்தவன் அல்லன். ஆதலால் இவனுக்குத் தேர்செலுத்திய மாதலிக்கு வேலையில்லாமல் போய்விட்டது. இந்த மாதலி என்பவன் இராமபிரானுக்குத்

தேர்ஓட்டும் வாய்ப்பைப் பெற்றான். எதிர்த்துப் பகைவரை அழிக்கும் வல்லமை பெற்ற இராமபிரானுக்குத் தேர் செலுத்தும் வாய்ப்பைப் பெற்றதால் தன் வல்லமையைக் காட்ட முடிந்தது.

அம்புகளைப் பொழிந்து இராமபிரானும் தன் வல்லமையால் இராவணன் தலைகள் அற்றுவிழச் செய்தான். இவ்வாறு இராமனுக்குப் பேருதவி செய்யுமளவில் மாதலி தேரைத் திறமையாக ஓட்டினான் என்பதை ''மாதலி தேர் முன் கோல் கொள்ள மாயன் இராவணன்மேல் சரமாரி" என்ற தொடர்மொழியில் சுட்டினார். தேர்ப்பாகனைக் குறிக்கும் வடச்சொல்லை மாதலி என்று தமிழ்ப்படுத்தி கூறினார் கோதை.

கோல் என்றது, தேரில்பூட்டிய குதிரையை வழிநடத்த பாகன் கையில் கொண்ட கோலைக் குறித்ததாகும். மாயன் இராவணன் என்றதில் மாரிசனை மானாக அனுப்பிக் கபட சந்நியாசியாக வேடங்கொண்டு பிராட்டியைக் கவர எண்ணிய இராவணனின் இழிச்செயலை உணர்த்தக் குறித்ததேயாகும்.

''தாய்தலை" என்றதில் இராவணனின் முதன்மை வாய்ந்த தலையைக் குறித்தார் ''தாய்த்தலை'' என்று இயற்றவேண்டியதைத் தாய்தலை என்று குறித்தது எதுகை பற்றிக் குறித்ததாகும். ''அற்று அற்று வீழ்" என்றது அறுக்க, அறுக்கத் தலை தோன்றிக்கொண்டு இருந்ததைக் குறித்ததாகும். வரவெங்கும் என்றதை வரக்காணேன் எனப் பிரித்துக்கூற வேண்டும். இப்பாட்டோவியத்தில் இராமபிரானின் பெயரைச் சுட்டாமலே இராவணன்மேல் சரமாரி பொழிந்ததைக் குறித்ததனால் அப்பிரானின் திறனை அழகுறத் தெரிவித்தார். இத்தகைய திறன் வாய்ந்தவன் கருமைநிற மணியைப் போன்று விளங்குபவன்,

அவனே என் உகப்புக்கு உரியவன்; எனவே, அக்கரு மாணிக்கத்தை வரக்கூவுவாய் எனத் தம் பாட்டோவி யத்தை இசைத்தார்;

## புண்ணியனை வரக்கூவுவாய் !

ஒயிலாக இசைகூட்டிக் கூவும் குயிலே! என் எலும்புகள் உருகிப் போகுகின்றன. வேல் போன்ற சிறந்த கண்கள் மூடாமல் திறந்தவாரே இருக்கின்றன. நெடுங்காலமாகப் பெருந்துயரைத் தருகின்ற கடலிலே இறங்கிவிட்டேன். இறங்கிய யான் மூழ்காமலிருக்க வைகுந்தவாசன் என்கின்ற படகினைப் பற்றிக் கரை ஏற இயலாமல் அக்கடலினுள் தடுமாறிக்கொண்டு இடர்ப்படுகின்றேன்.

அன்பர்களாகிய அடியார்களைப் பிரிந்து இருப்பதனால் எம்பெருமான் மிகத்துயரம் அடைவான் எனக் கேள்விப் பட்டுள்ளேன். அத்தகையவன் என்னைக் குறித்து ஏன் அறிந்து வாராமலிருக்கின்றான். பொன்மேனியும், கருடக் கொடியும் உடையவன், அறமே வடிவாக உள்ளான். அவனை அடைய விரும்புகின்றேன். ஆதலால் அவனை வரக் கூவுவாய் என்று

"என்புருகி இனவேல் நெடுங்கண்கள்
இமைபொருந்தா பலநாளும்
துன்பக் கடற்புக்கு வைகுந்தன் என்பதோர்
தோணிபெறா துழல்கின்றேன்
அன்புடை யாரைப் பிரிவுறு நோய்து
நீயும் அறிதி குயிலே
பொன்புரை மேனிக் கருளக் கொடியுடைப்
புண்ணியனை வரக்கூவாய்" ! (45)

எனக் கோதை பாடிய ஓவியமாகும்.

இதில் எம்பெருமானைப் பிரிந்ததனால் ஏற்பட்ட துன்பத்தின் மிகுதியைக் கோதை குயிலிடம் கூறுகின்றார்.

பிரிவின் ஏக்கம், எலும்பை உருக்கி விடுகிறது. ஒரு நொடிப் பொழுதும் கண் உறக்கம்கொள்ளச் செய்வதில்லை. என்னைப்பிரிந்த நிலையில் அவன் படவேண்டிய துன்பத்தை நான் படுகின்றேன். இத்துன்பம் பல நாளாக இருந்து என்னை வருத்துகின்றது.

இந்தத் துன்பக் கடலிலிருந்து கரையேற எம்பெருமானாகிய தோணியை எதிர்பார்க்கின்றேன். முன்பு அன்பர்களாகிய உன் அடியார்களை நீ பிரிந்திருந்ததால் வருந்தியிருந்ததை நான் அறிவேன். அப்படியிருக்க உன் அடிமையாகிய என்பால் கருணைகாட்டாமல் மறந்திருத்தல் எதனால்? என் துன்பம் நீங்க நீ வழிகாட்ட வேண்டும் என்று இனிய குயிலிடம் அவனை வரக்கூவுவாய் என்கின்றார்.

"பொன்புரை மேனி" என்றதில் பொன்நிற மேனியுடைய அன்னை அலர்மேல் மங்கை, அவன் மார்பில் உறைவதால் கருநிறமேனியன், பொன்னிறமேனியன் ஆனான் என்று குறித்தார். எம்பெருமானைப் பிரிந்திருப்பதைப் பெருநோயாகக் கூறுகின்றார். நோய் உடலை வருத்தும். காதல்நோய் உடலை வருத்துவதோடு உள்ளத்தையும் வருத்தும்.

காதல் நோயால் ஏற்பட்டத் துன்பத்தைக் கடல் போன்றது என்கின்றார். இப்பிரிவுத்துயர் அன்புடையாருக்கு நிகழ்தல் இல்லை. ஆனால் அன்புடைய எனக்கு அம்மாயன் தருதல் ஏனென்று புரியவில்லை ? அவன் தந்த இந்நோயைக் குயிலே நீயும் அறிவாய். ஆதலால் அவனிடம் சென்று வரக்கூவுவாயாக ! என்கின்றார்.

எம்பெருமான் தன் அடியாரைப் பாவத்திலிருந்து நீக்கிப் புண்ணியச்சீலராக ஆக்குவதால் அவனை அனந்தன்மேல் கிடந்த புண்ணியா என்று அருளாளர் ஒருவர் கூறியதைப்

போன்று, கருளக் கொடியுடைய புண்ணியனை வரக்கூவு வாய் என்று கோதைப் பாடுகின்றார்;

## உலகளந்தான் வரக் கூவுவாய் !

மிருதுவான பாதங்களையுடைய அன்னப் பறவைகள் எவ்விடத்தும் பரவலாகச் சென்று விளையாடுவதற்குரிய இருப்பிடமான திருவல்லி புத்தூரிலே இனிது வாழ்கின்றன. நான் எம்பெருமானுடைய அழகிய திருவடிகளைக் காண வேண்டுமென்ற ஆசையாலே துடிக்கின்றேன். தண்ணீரில் உகளும் கெண்டைகள் பெற்ற கண்களைப் போல என் கண்கள் உள்ளன; அந்த இரு கண்கள் உறங்க மறுக்கின்றன:

எனவே குயிலே! திரிவிக்கிரமனாகி உலகங்களை அளந்த பெருமான் இங்கே என்பால் வரும்படி கூவுவாயாக! அப்படிக் கூவுவாயே யானால் இனிய கன்னலையும், பாலையும், அமுதையும் ஊட்டி வளர்க்கும் என் அழகுடைய கிளியினை உன்னோடு நட்புறவு கொள்ளச் செய்வேன் என்று தீட்டிய பாட்டோவியத்தில்

"மென்னடை யன்னம் பரந்து விளையாடும்
வில்லிபுத்தூர் உறைவான்தன்
பொன்னடி காண்பதோர் ஆசையினால்என்
பொருகயற் கண்ணிணை துஞ்சா
இன்னடி சிலொடு பாலமுதூட்டி
யெடுத்தஎன் கோலக்கிளியை
உன்னொடு தோழமைக்கொள்ளுவன் குயிலே
உலகளந்தான் வரக்கூவாய்!" (46)

என இசைத்தார்.

பரமபத நாயகனான பரந்தாமன் அங்குத் தேவர் களோடு இனிதிருக்கும் நிலையை விட்டு என்னைப் போன்ற அடியார்களுக்கு அருள் செய்யவே திருவல்லி புத்தூரில்

கோயில் கொண்டான். என் நடையைப் போன்று நடக்கும் அன்னப்பறவைகள் எங்கும் விளையாடுதலைக் கண்ட அவன் என்னைப் பார்ப்பதைப் போல அவற்றைப் பார்த்து அமைதியுற்றான்.

நான் அவனைக் கண்டால் தானே அமைதியுறுவேன்; அப்படி அனுபவிக்க எண்ணும் எனக்கு அவன் வந்து மகிழ்வைத் தருவது எந்நாள்? அவன் திருவடியைக் காணாமல் என் கண்கள் துயில் கொள்ளுவதில்லை; என்பதைப்

"பொன்னடி காண்பதோராசையினால் என்
பொரு கயற் கண்ணிணை, துஞ்சா!"

என்று பாடுவார் கோதை.

முன் பாசுரத்தில் வைகுந்தன் என்பதோர் தோணி பெறாதுழல்கின்றேன், என்று பாடியதில் வருத்தம் கொள்ளவில்லை, காரணம் வைகுந்தமாகிய பரமபதம் தூரத்தேயிருப்பதேயாகும். ஆனால் அருகில் உள்ள திருவல்லி புத்தூரில் கோயில் கொண்டவனின் திருவடியைக் காணப் பெறாமையாலேயே என் கண்கள் துஞ்சவில்லை என வருந்துகின்றார்.

தம்மூரில் உள்ள செம்பொருளை அடிக்கடி போய் கோதையால் பார்க்கவியலும் அத்தகைய இடத்திற்குப் போய் பார்க்க இயலாமைக்கு உறவினர்கள் தடுத்து நிறுத்தி இல்லத்திலேயே பூட்டி வைத்ததே ஆகும். என்று உரையாசிரியர் கூறுவர். இதற்கு

"குழையும் வாண்முகத் தேழையைத்
துலைவில்லி மங்கலம்
கொண்டு புக்கு இழைகொள் சோதிச்
செந்தாமரைக் கண்ணபிரானிருந்தமை
காட்டினீர்!"

என்னும் பாசுரத்தை எடுத்துக் காட்டுவர்.

விடாய் மேலிட்டவர்களுக்கெல்லாம் தண்ணீர் எளிதாகக் கிட்டி வேட்கையைத் தணித்துக் கொள்வதைப் போன்று வில்லிபுத்தூரிலுள்ள பெருமாயன் அடியார்க்கெல்லாம் எளிவந்த பிரானாகி அருளை வழங்க வல்லவன். அத்தகைய சத்திய மூர்த்தியை யான் பாராமையால் என் கண்கள் உறக்கம் கொள்ளவில்லை என்று வருந்துகின்றார். இப்படி வருந்துபவர் குயிலிடம் அம்மாயன் வருமாறு கூவுதல் வேண்டும் என்றார். அதற்கு மறுமொழி கூறுவதாக உரையாசிரியர்

''பெண்ணுலாஞ் சடையினானும் பிரமனும்
உனைக் காண்பான் எண்ணிலா ஊழியூழித்
தவஞ் செய்தார் வெள்கிநிற்ப''

என்னும் கருத்தை எடுத்துக் காட்டுவர்.

இதில் சிவபிரானும், பிரமனும் தவஞ் செய்த ஞானியர்களும் காண்பதற்கு அரியவனாய் இருக்கும் எம்பெருமானை நான் கண்டு அவனிடம் உன் செய்தியினைச் சொல்லுதல் அரிது என்று குயில் கூறுவதாக இயம்புவர். அதற்கு மறுமொழியாக கோதை கூறுவது இனிய உணவினை இராமபிரானுக்குக் குகன் தந்தமைக்குக் கைமாறாக இலக்குமணனைக் குகனுக்குத் தோழனாக ஆக்கியதைப் போன்று குயிலே உனக்கு நான் அன்புடன் வளர்த்த கிளியைத் தோழமையாக்கி வைப்பேன். ஆதலால் உளகளந்தான் என்பால் வரக் கூவுவாயாக எனப் பேசுவர். இவ்வாறு குயிலிடம் எம்பெருமான் மீது தாம் கொண்ட ஆராக்காதலினை வெளிபடுத்தி அவனை இவ்விடம் கொணர வேண்டுகின்றார்.

அருளாளனே தாம் விரும்பும் பொருளாளன் என்று அக்குணாளனின் பொன்னடியை விழைந்தார்.

## என்தத்துவனை வரக் கூவுவாய் !

பூங்கொத்துகளானவை மலர்கின்ற சோலையிலே அழகுடைய அந்த இடத்திலே இனிது உறங்குகின்ற சிறு குயிலே எல்லா திசைகளிலும் நின்று தேவர்கள் வணங்கித் துதிக்கும் நிலையும் காண்பவர்கள் எல்லாம் வியக்கும் தன்மையிலும் எழிலுடன் இலங்கும் எம்பெருமான் தன்னை எனக்குக் காட்டாமல் தடுக்கின்றார்கள். அவர்கள் செய்யும் இன்னலாலே என்னுடைய முத்தைப் போன்ற வெளுத்த முறுவலும், சிவந்த உதடும், மார்பகமும் அழகை இழந்தன. இவ்வாறு இருத்தலால் நான் விசாரப்பட நேர்ந்தது. நான் உயிர் வாழ்வதற்கு மூல காரணமாயிருக்கின்ற எம்பெருமான் என்னிடம் வரக் கூவுவாயாகில் என் வாழ்நாள் முழுவதும் உன் காலிலே என் தலையை வைத்து வணங்குவேன்.

இந்த நிலையைச் செய்வதைத் தவிர வேறொரு கைமாறும் உனக்குச் செய்யத் தெரியாதவளாயிருக்கிறேன் எனக் குயிலிடம் இறைஞ்சு நிற்கும் கோதை

''எத்திசையும் அமரர் பணிந்தேத்தும்
இருடீகேசன் வலிசெய்ய
முத்தன்ன வெண்முறுவல் செய்ய வாயும்
முலையும் அழகழிந் தேன்நான்
கொத்தலர் காவில் மணித்தடங் கண்படை
கொள்ளும் இளங்குயிலே! என்
தத்துவனை வரக்கூகிற் றியாகில்
தலையல்லால் கைம்மா றிலேனே!" (47)

என்ற பாட்டோவியத்தைக் கேட்போர் நெஞ்சைப் பிணிக்கும் வண்ணம் இசைத்தார்.

இதில் எல்லாத் திசைகளிலும் உள்ள இந்திரன் முதலான தேவர்களெல்லாம் தம் செருக்கொழிய துதிக்

கின்ற செங்கண்மால், புலன்கள் வழி சென்று தவறு செய்பவர்களை அடக்கும் பேராற்றல் உடைய உத்தமனாவன்! இவனைப் பற்றிக் கோதை ''இருடீகேசன் வலிசெய்ய'' எனக் குறித்தார்.

துன்மார்க்கர்களைத் திருத்தி நெறிப்படுத்தி நன் மார்க்கர்களாக ஆக்கும் தகுதி பெற்றவன் எம்பெருமான் எனவே, அவனையே நித்தம் ஏத்தித் துதிக்கும் எனக்கு மட்டும் ஏன்? அவன் நலம் பாலிக்கவில்லை என்று கேட்கின்றார்.

அவன் அருள் செய்யாததால் என் முறுவலும் நிற மாறியது, உதடும் அழகிழந்தது, மார்பகமும் சீர் குலைந்தது, என்று தமக்கு ஏற்பட்ட துன்பத்தை வெளிப் படுத்தினார். எதிரிகளிடம் காட்ட வேண்டிய மிடுக்கினை உன்னையே போற்றும் என்னிடமா காட்டுவது? என்று ''வலி செய்ய'' என்னும் தொடரைப் பெய்து கேட்பதைக் காணலாம்.

சின மிகுதியால் தினமும் நீர் அருந்தும் குவளையை வீசி எறிந்து விட்டால் மீண்டும் நீர் வேட்கை ஏற்படும் போது குவளைக்கு எங்கே போவது? அதுபோல என் மார்பகம் தன் இன்பநிலையை இழந்து விட்டால் இன்னமுதன் வந்து அனுபவிக்க இயலாமல் எங்கே போவான்? அப்போது என்ன பாடுபடுவான்?

எனவே, குயிலே எம்பெருமான் விழையும் செல்வம் அழியுமுன்னரே அவனை இவண் வரக் கூவாமலிருத்தல் நன்றோ? நான் துன்பப்படும் போது நீ மட்டும் மலர் படுக்கையில் சுகமாக உறங்குதல் தகுமோ? கண்ணுறங்கா மல் இருக்கும் என் நிலையை நீ! உணரவில்லையா? எனவே, என்னிதயத்தில் இருக்கும் வில்லிபுத்தூர் நாயகனை வரக் கூவுவாயாக என்று கோதை கூறுகின்றார்.

குயிலே நீ கூவி மைவண்ணனை வரவைப்பாயே யானால் உனக்குத் தோழமையாக இருக்க நான் வளர்க்கும் கிளியை உடன்படச் செய்வேன். என்று கூறிய கோதை, அருளாளன் பொன்னடியையே உபாயம் எனக்கருதி இருக்கின்றேன். எல்லா உயிர்களிலும் நின்று இயக்கும் அவனைச் சத்துப் பொருள் என்று சாற்றுவர் சான்றோர். அனைத்துயிர்களையும் ஒத்து நடத்தும் உத்தமனான எம்பெருமானைத் தத்துவன் என்றார் கோதை.

இவ்வாறு கூவக்கடவை என்று இயற்ற வேண்டியதைக் கூகிற்றி என்று பாட்டின் ஓசை கருதி இயற்றியருளினார். இது கூவகிற்றி என இருத்தல் வேண்டும். கிற்றி என்பது இல் என்னும் வினைப் பகுதியடியாய்ப் பிறந்த நிகழ்கால முன்னிலையொருமை வினைமுற்றாக வந்தது.

பெருமாயனை என்னருகில் சேர்க்கும் குயிலே நான் என்றும் உன் காலில் என் தலையை வைத்துப் பணிவேன் என்பதை "தலையல்லால் கை மாறிலேன்" என்று பாடிய தில் தம் மனத்தின் ஆதங்கத்தைக் கூறியது. குயில் சாதாரண அஃறிணை உயிராயினும் அது செய்யும் நன்மை பெரிதாக விருத்தலால் சாதாரண உயிரென்பதை மறந்து பெரிதாக அதன் உதவியை மதித்ததால் இவ்வாறு கூறினார்.

## ஆழிசங்குடையானை வரக் கூவுவாய் !

வீசுகின்ற அலையையுடைய பாற்கடலில் பள்ளி கொண்டுள்ள பரந்தாமனோடு சேர்ந்து இன்பமுறும் ஆவலி னால் எனது மார்பகங்கள் பருத்து மிக்க மகிழ்ச்சியைக் கொண்டு என்னுயிரை உருக்கி வருத்தமுறச் செய்கின்றன.

அழகிய குயிலே ! என் கண்களுக்குத் தெரியாதவாறு நீ மறைந்திருப்பதனால் உனக்கு என்ன நன்மை ஏற்படும். அழகியதாகிய சக்கரம், சங்கு, கதை ஆகிய ஆயுதங்களைத்

திருக்கரங்கவிலே வைத்துள்ள பெருமாயனை இங்கே வருமாறு நீ கூவுவாயாகில் மிகவும் அறம் புரிந்ததற்கு ஒப்பாகும் என்று கூறியதை ஓவியமாக

"பொங்கிய பாற்கடற் பள்ளி கொள்வானைப்
புணர்வதோராசை யினால் என்
கொங்கை கிளர்ந்து குமைத்துக் குதுகலித்
தாவியை ஆகுலம் செய்யும்
அங்குயிலே உனக்கென்ன மறைந்துறைவு
ஆழியுஞ் சங்கும் ஒண்தண்டும்
தங்கிய கையவனை வரக் கூவில் நீ
சாலத் தருமம் பெறுதி!" (48)

என்று இன்பமுற வரைகின்றார். கோதைத் தாயார்

இப்பாசுரத்தினைப் பரமபதத்திலிருந்து பாற்கடலில் வந்து பள்ளி கொண்டுள்ள பரமனைத் தாம் சார்ந்திலங்கப் பாடினார். அவர் கருத்துக் கிசைந்து கமலக் கண்ணன் அணைக்காமையால் மார்பகங்கள் எழுந்து ஆவியைப் போக்கிவிடும் தன்மையிலுள்ளன. எனவே வேதனை எய்தியவருக்கு உய்வினை உண்டாக்கும் நிலையில் உதவிட வாராமல், குயிலோ கரைந்து உறைகின்றது. அது என் துயரை மாற்றாமல் யான் சொல்வதையும் கேளாமல் அமைதியாக இருக்கின்றதே என ஏங்குகின்றார்.

"என் செய்ய தாமரைக் கண்
பெருமானார்க் கென் தூதாய்"
"என் செய்யும் உரைத்தக் கால்
இனக் குயில் காள்"

என்று

திருவாய் மொழியில் நம்மாழ்வார் கூறுவதைப் போன்று கோதை அங்குயிலே ஆழிசங்கு ஒண்தண்டு தங்கியு கையனை வரக்கூவில் என்றிசைத்தார்.

உதவி செய்கின்ற குயிலை அழகிய குயிலே என்று அடை கொடுத்துப் பெருமை செய்தார். எனக்கு நீ உதவி செய்வதால் எனக்கு நன்மையும் உனக்கு அதனால் அறத்தின் மாட்சியும் ஏற்படும் என்பதை

''சாலத் தருமம் பெறுதி" என்ற தொடரால் உணர்த்து கின்றார். உதவி பெறுபவர்க்கு நன்மையும் உதவி செய்ப வர்க்கு அறத்தின் மேன்மையும் உண்டாதலை அழகாகத் தெரிவித்தார்.

''பொங்கிய பாற்கடல்" என்றதில் சந்திரனைக் கண்டு கடல் பொங்கும். ஆதலால் இங்கே சந்திரனைப் பற்றிக் கூறாமலேயே அக்கடலில் பள்ளி கொண்டுள்ள பெருமானைக் குறித்தார்! சந்திரனைத் தோற்றுவித்தும் அச்சந்திரனுக்கும் காரணனாயிருந்தும் . சந்திரனைக் காட்டிலும் அதிகக் குளிர்ச்சியைப் பெற்றிருந்து நன்மை செய்யும் அப்பெருமானைக் கண்டு கடல் பொங்கியது என்பதைக் காட்டவே மேற்குறித்த சொற்றொடரால் விளக்கினார்.

காதல் மீதூர்ந்த நிலையில் எம்பெருமான் வருகை குறித்து ஏங்கியிருந்தும் அந்த ஏக்கம் பக்கத்திலிருப்பவர் களுக்குத் தெரிய கூடாது என்று நான் அமைதியாக யிருந்தும், பிறர் கேலி செய்யும் அளவில் என் மார்பகங்கள் குதுகலிப்பால் எழுச்சியுற்று அம்மாயனை வரவேற்கும் நிலையிலிருந்தன என்பதை ''என் கொங்கை கிளர்ந்து" என்ற தொடரால் சுட்டினார்.

களங்கம் படுத்தும் வகைகயில் என்னை என் மார்பகங்கள் துன்புறுத்தின என்பதை ''ஆகுலம்" என்று குறித்தார். இவ்வாறு நோவு பட வருந்தும் என் துன்பத்தைப் பற்றி அறியாமல் இருக்கும் அருமை குயிலே உன்னிருப்பு ஏற்புடையதா? என்று கேட்கும் கோதை

அம்குயிலே என்று கூறியதில் குயிலைப் பாராட்டும் வகையில் "அழகிய" என்னும் அடைக் கொடுத்துப் பேசுவார்.

தமக்கு இணங்கி வந்து குயில் உதவி செய்தால் அஃது அறத்தின் வழியாகும் என்று கருதிய கோதை

"சாலத் தருமம் பெறுதி!"

என்று குறித்தார்.

எம்பெருமானை ஏற்றுக்கொண்டபாற்கடல் மகிழ்ச்சியால் பொங்கியது. அதைப் போன்று அந்தப் பரம் பொருளைப் புணர்வதோர் ஆசையினால் கோதையின் மனமும் பொங்கியது, அவனை அணையவே மார்பகமும் கிளர்ந்து பொங்கியது எனக் கூறுதல் அருமைப்பாடுடையதாகவுள்ளது.

## திருமாலை வரக் கூவுவாய்

இனிமையான மாம்பழங்கள் கொத்துக் கொத்தாகத் தொங்கும் மாந்தோப்பில் சிவந்த துளிர்வையுடைய தளிர்களை வாயால் கொத்துகிற இளங்குயிலே கேட்பாயாக! வலிமையுடைய ஆற்றலினால் வில்லை வளைக்கும் பெரிய கைகளையுடையவனாய் பலரும் போற்றும் திறமையினைப் பெற்றவனாய் உள்ள அம்மாயனும் நானும் சேர்ந்தின்புறுவதற்கு எங்களுக்குள் அந்தரங்கமாகச் செய்து கொண்ட உடன்பாட்டினை நாங்களிருவருமே அறிவோமேயன்றிப் பிறர் எவரும் அறியமாட்டார்கள்.

எனவே வெகு தூரத்தில் இருக்கும் பேரருளாளனான அந்த ஆராவமுதனை அடைய விரும்புகின்றேன். அவனைத் துரிதமாக என்னிடம் வரக் கூவுவாயாக! அப்படிக் கூவாமல் போவாயேயானால் பின்னர் அவன் இங்கு வந்த

பிறகேனும், அவனுக்காக நான் செய்யும் பணிகளையேனும் வந்து காண்பாயாக என்று கோதைப் பிராட்டியார் கூறும் இந்தச் சிந்தைக்கினிய செய்திகளை மெய்யுணர்வோடு வியப்பு மேலிட

"சார்ங்கம் வளைய வலிக்குந் தடக்கைச்
சதுரன் பொருத்த முடையன்
நாங்கள் எம்மில் இருந்தொட்டிய கச்சங்கம்
நானும் அவனும் அறிதும்
தேங்கனி மாம்பொழிற் செந்தளிர் கோதும்
சிறுகுயிலே திருமாலை
ஆங்கு விரைந்தொல்லைக் கூகிற்றியாகில்
அவனை நான் செய்வன காணே!" (49)

என்று இதைப் பாட்டோவியமாகப் படைத்தார்.

இப்பாசுரத்தில் எம்பெருமானின் ஈடும் எடுப்பு மற்ற வீரத் தன்மையை எடுத்துக் காட்டுவதோடு தம்பாலும் அன்புடையார் மாட்டும் இன்பம் நல்குபவன் என்பதையும் சேர்த்து இரு செய்திகளையும் இயம்பக் காணலாம். எதிரிகள் அஞ்சி ஓடும்படி பேராற்றலுடன் வில்லை வளைத்து நிற்பவன் அவன். இத்தகையவன் தன்னை நத்திவரும் அன்பர்கள் பால் மெத்த மகிழ்ச்சியுடன் சித்தத்தைப் பறி கொடுத்தே உதவி செய்பவன் அவன்; என்று இப்பாசுர முதலடியில் குறித்தார்.

என் உள்ளத்தை அவனும், அவன் உள்ளத்தை நானும் அறிபவர்கள். இவ்வாறு நாங்கள் இருவரும் சேர்ந்து இரகசியமாகப் பேசியது வேறெவருக்கும் தெரியாது. நான் உன்னைப் பிரிந்தால் நீயும் வாழ மாட்டாய், நீ என்னைப் பிரிந்தால் நானும் வாழ மாட்டேன் என்ற நிலையினைப் பாசுரத்தின் இரண்டாம் அடியில்

"நாங்கள் எம்மில் இருந்தொட்டிய கச்சங்கம் நானுமவனும் அறிதும்" என்று பாடியிருத்தலால்

அறியலாம். அடுத்துத் தித்திக்கும் மாம்பழங்கள் இருக்கின்ற தோப்பிலே மகிழ்ச்சியாகச் செந்தளிர்களைக் கோதிக் கொண்டு இருக்கின்ற குயிலைப் பார்த்து என்னிலையை அறிந்திருக்கின்ற நீ எனக்குதவி புரியாது இருத்தல் நன்றா?

அவனும் நானும் சேர்ந்தின்புற நீ! கூவி அவனை என்பால் வர வகைசெய்வாயாக என்றார் கோதை. நீ சொல்கின்றபடி அவனைக் கூவி இங்கு அழைத்து வருவதால் எனக்கு என்ன பயன் என்று குயில் கோதையைக் கேட்டது. கோதை மறுமொழியாக நான் அப்போது செய்வதை நீ காண்பாயாக என்றதை

''நான் செய்வன காணே"

என்ற தொடர் மொழியால் சொன்னார்.

அப்படி உன்பால் வரும் அவனை நீ என்ன செய்வாய் என்றது குயில். நான் வேறேதும் செய்யேன். வந்து நிற்கும் அவனிடம் முகம் கொடுத்துப் பேசமாட்டேன் என்றார் கோதை. பலநாளாகப் பட்டினி கிடப்பவனுக்குச் சோறிட்டுப் புசிக்க வரும்போது அச்சோற்றைத் தின்னாமல் செய்வதைப் போல, பல நாள் பிரிந்திருக்கும் மாயன் ஆவலுடன் என்னைக் காண வந்தால் நான்முகம் கொடுத்துப் பேசமாட்டேன் என்பதைக் குயிலே அப்போது நீ காண்பாயாக! என்றார்.

''பொய் அச்சங் காட்டி நீ போதியேலும்
இன்னம் என் கையகத்து ஈங்கொருநாள்
வருதியேல் என்சினம் தீர்வேன் நான்!"

என்று பெருமாள் திருமொழியில் பேசுதல் போன்று கோதையும் தம் ஊடலாகிய சினம் தீர்ந்திட, கோகிலத்தை வேண்டி, கூவி, தாவி உள்களந்தானிடம் யேவி வரவழைத்து மகிழ்வைத் தந்திடக் கோருகின்றார்.

தலைவிக்கும், தலைவனுக்கும் ஏற்பட்ட பிரிவாற்றாமை நிலையைத் தோழி தீர்த்து, ஒன்றாகச் சேர்த்து வைப்பதைப் போல குயிலே நீ! சேர்த்துக் குதுகலிப்பைத் தருவாயாக என வேண்டும் கோதையின் பாசுரம் மணம் வீசும் இன்பம் நல்கும் ஓவியமாகும்.

## சிரீதரன் வரக் கூவுவாய் !

மிக்க ஒளியுடைய வண்டுகளானவை தேனைக் குடித்து மயக்கத்திலுள்ள இச்சோலையிலே இசைப்பாடிக் கொண்டு களித்து மகிழ்கின்ற குயிலே ஏதோ சொல்கின்றேன் என்று பாராமுகமாய் இல்லாமல் கவனமாய்க் கேட்பாயாக!

பசுமை நிறக் கிளியைப் போன்ற நிறத்தையுடைய அதிபதியான எம்பெருமானுடைய வலையில் சிக்கிக் கொண்டு தவிக்கின்றேன். இச்சோலையிலே வாழ்கின்ற நீ இங்கே திருச்சக்கரத்தை, சங்கை ஏந்தியிலங்கும் எம்பெருமானை வரக் கூவ வேண்டும் என்பது ஒன்று; நானிழந்த கைவளையல்களைக் கொண்டு வந்து தர வேண்டும் என்பது மற்றொன்று. இவ்விரண்டு செயல்களைக் கட்டாயம் செய்து தர வேண்டும் என்று குயிலிடம் கூறும் கோதைப்பிராட்டி

**"பைங்கிளி வண்ணன் சிரீதரன் என்பதோர்**
**பாசத் தகப்பட் டிருந்தேன்**
**பொங்கொளி வண்டிரைக்கும் பொழில் வாழ்**
**குயிலே குறிக் கொண்டிது நீ கேள்**
**சங்கொடு சக்கரத் தான்வரக் கூவுதல்**
**பொன்வளை கொண்டு தருதல்**
**இங்குள்ள காவினில் வாழக் கருதில்**
**இரண்டத் தொன்றேல் திண்ணம் வேண்டும்!"** (50)

என்று தம் காதல் ஓவியத்தை வரைந்தார்.

இதில் குயிலிடம் பேசும் கோதை, வண்டுகள் இசைமழை பொழிவதைக் கேட்டு மயக்கமுற்றே இச் சோலையிலே வாழும் குயிலே! உன்னை நான் விடாமல் தொடர்ந்தே இங்கு வருகின்றேன். வண்டுகள் இசையைக் கேட்கும் நீ! என் கருத்தையும் கேட்பாயாக! ஏதோ சொல்வதாகப் பாராமுகமா யிராதே! என்னைப் பற்றி யுள்ள நோய் நடையாடச் செய்யவில்லை.

பச்சை நிறக்கிளி போல் ஒளிரும் பாரளந்தான் வலையிலே சிக்கித் தவிக்கின்றேன் என்பதை

''முன்னை அமரர் முதல்வன் வண்துவராபதி
மன்னன் மணிவண்ணன் வாசுதேவன்
வலையுளே அகப்பட்டேன்'' என்றும்
''கற்கின்ற நூல்வலையிற் பட்டிருந்த நூலாட்டி
கேள்வனார் கால்வலையில் பட்டிருந்தேன் காண்''

என்றும் கூறியவாறு நான் அவன் வலையில் சிக்கியுள்ளேன் என்னை மீட்க குயிலே உதவி செய்வாயாக! என்று கூறியும் குயில் பேசாமலிருந்தது. நான் சொல்வதைக் கேளாம லிருந்தால் நீ இந்தச் சோலையில் வாழ்தல் முடியாது? பின்னர் இருக்க இடமின்றித் தவிப்பாய், என்பதை அறிவாயாக! அறிந்து எனக்காக இரண்டு வேலைகளை நீ செய்ய வேண்டும். ஒன்று வலக்கையில் சக்கரத்தினையும், இடக்கையில் சங்கினையும் உடைய கடல் வண்ணனை இங்கு வரக் கூவ வேண்டும்.

மற்றொன்று முன்பு என் கையிலிருந்த வளையலை இழந்தேன். அவற்றை மீண்டும் அவன் கொண்டு வந்து தர வேண்டும். இந்த இரண்டு பணிகளையும் அவன் செய்ய நீ! உதவ வேண்டும் என்றார். இக்கருத்தை மூன்றாம் அடியில்

''சங்கொடு சக்கரத்தான் வரக் கூவுதல்
பொன்வளையல் கொண்டு தருதல்''

எனப் பாடி தெரிவித்தார் கோதை. இதில் பொன் வளையல் என்றதை இத்திருமொழியில் முதற்பாசுரத்திலும் குறித்துள்ளார் தலைவனாகிய தயாபரன் வாராமையால் தலைவியாகிய யான் மெலிந்ததால் கைவளையல்கள் கழன்றுபோயின. மீண்டும் கைவளையல்கள் கையில் ஒலித்து நிற்கவேண்டுமானால் பிரிந்த தலைவன் என்பால் வர வேண்டும் என்பதை ''சங்கொடு சக்கரத்தான் வரக் கூவு வாய்" என்று குயிலிடம் கூறினார். இதில் ஓர் உள்ளுறைப் பொருளைக் காணலாம். அஃதாவது சத்தியவான் என்ப வனின் உயிரைக் கவர்ந்த எமனிடம் சாவித்திரி பிள்ளை வரம் வேண்டிப்பெற்று, சத்தியவான் உயிரை மீட்டதைப் போன்று இங்கே சோதை இழந்தவளையல்கள் மீண்டும் கையில் அழகுடன் இலங்க எம்பெருமான் வந்தாலே போதும் என்று கூறியதில் அந்த உள்ளுறைப் பொருளைக் காணலாம்.

காய்ந்து உலர்ந்த மரம், செடி, கொடிகள் மழைபெய்வ தால் நலம்பெறுதல் போல மழைக் கண்ணன் வந்தாலே என் வாழ்வாகிய பயிர் செழிக்கும் என்று இந்த அழ கோவியத்தில் நயம் படச் சித்திரித்தார். முதலடியில் பாசம் என்னும் சொல்லைப் பயன்படுத்தி கயிறு என்னும் பொருளைத் தெரிவித்து, அக்கயிற்றால் ஆகிய வலையைக் குறித்தார். இதைப் பாசவலை என்றும் வழங்குவர்.

''கார்த்தண் கமலக் கண்ணென்னும் நெடுங்கயிறு'' என்று வலையைக் கயிறாகக் கூறியிருப்பதையும் அறியலாம். இக்காதல் ஓவியத்தில் அவன் பாசவலையில் நேசங்கொண்டதால் கோதை சிக்கியதைக் குறித்தார். இதனால் அவனுடன் தாம் ஐக்கியம் ஆதல் வேண்டும் எனக் கூறினார்

## நாரயணனை வரக் கூவுவாய்!

கண்ணபிரான் மூவுலகங்களையும் அளக்க முற் பட்டான். செருக்குற்ற மாவலியை உருதெரியாமல்

அழிக்கவே திரிவிக்கிரம அவதாரம் எடுத்தான், அந்த அவதாரத்தால் மண்ணுக்கும் விண்ணுக்குமாக அளாவி நின்றான். மாந்தனிடம் பிச்சைக் கேட்டுப் பெற எண்ணிய மாமாயன் சிறந்த பண்பாட்டில் நின்றான். அறஞ்செய்த மாவலியைக் கொன்றது அருளாளனுக்கு அழகாகுமா? என்று சிலர் கேட்கக் கூடும். அறஞ்செய்யும் பண்பு பெற்றிருந்தாலும், பிறர் நாட்டைப் பிடித்தாள எண்ணினான், அதற்காக அறநெறி வழுவிய அவாவால் பல்லோருக்குத் துன்பஞ் செய்தான். அதனால், அவனை அழிக்க முற்பட்டான் ஆழியுடையான். இவ்வாறு அறங் காத்த அருளாளனை அடையவே கோதை விழைந்தார். அவனை அடைய வேண்டிப் பல்வேறான செயற்பாட்டில் தலைப்பட்டார்.

இவ்வாறு அவனையே எண்ணி ஏங்கியிருந்தபோது தென்றற் காற்றும், முழுநிலவும் தோன்றி, என் மனத்தினுள் புகுந்து தொல்லைபடுத்தின, இப்போது அவை என்னைத் துன்புறுத்துதல் எதனால்? என்னால் அறிய முடியவில்லை. அவனை அடைந்திடவே துயருறும் எனக்குக் குயிலே நீ வந்து உதவி செய்வாயாக! என்னுடைய நலத்தில் அக்கறையுடைய நீ! எப்போதும் இந்தச் சோலையில் வந்து தங்குகின்றாய். இதில் நீண்ட நாளாகவே இருந்து வருகின்றாய். முன்பு என்னைப் பார்த்த நீயோ இன்றும் பார்க்கின்றாய்: நான் இப்போது மெலிந்து விட்டதை நீ அறியவில்லையா? அப்படி மெலிந்துள்ள என்னை வருத்தாமல் உதவுகின்ற வகையில் என்பால் நாராயணனை வரக் கூவுவாய்! அப்படி ஒப்பாமல், கூவாமல் போனால் உன்னை இச்சோலையி லிருந்து துரத்திவிடுவேன் என்று கூற வந்ததை

''அன்று உலகமளந்தானை யுகந்து
அடிமைக் கண் அவன் வலி செய்யத்
தென்றலும் திங்களும் ஊடறுத்து
என்னை நலியுமுறைமை அறியேன்

என்றும் இக்காவில் இருந்திருந்து என்னைத்
　　தகைத் தாதே நீயும் குயிலே
இன்று நாராயணனை வரக்கூவாயேல்
　　இங்குத்தை நின்றும் துரப்பேன்! (51)

என்று இனிய பாட்டோவியமாகப் புனைந்து பாடினார் கோதை. இதில் அறங்கொன்ற மாவலியின் தலைமேலே தன் திருவடியை வைத்துப் பரமதம் அளித்தான். அப்படி நல்லவனல்லாதானுக்கும் அருள் கொடுத்த அவனோ, நாளும் பொழுதும் அவனையே நம்பி போற்றியிருக்கும் எனக்கு அருள்புரியாதது ஏனோ? என்று கேட்கின்றார். இப்படி அவனால் மெலிந்தும் நலிந்தும் இருக்கும்போது இந்த நேரத்தில் மேலும் வருத்துகின்ற வகையிச் தென்றலும் நிலவும் தோன்றித் துன்புறுத்துதல் எதனால்? எனவே, துயரம் எய்தி இருக்கும்போது, அவரை வயப்படுத்துகின்ற நயமான குரலுடைய குயில்கூவத் தொடங்கிற்று. பாடுங்குயிலின் மெல்லோசையோ நாயகனைப் பிரிந்து தவிக்கும் கோதைக்கு வல்லோசை யாகிப் பெரிதும் வேதனையையே செய்தது.

காதலன் பிரிவாற்றாமையால் தவிக்கும் காதலிக்கு எத்தகைய இனிமை வாய்ந்த பொருளும் கசப்பாகவே யிருக்கும். கோதைக்கும் தென்றலும், மேல் காற்றாகி அனல் வீசியது, குளிர்ந்த நிலவும் சூரியனாகச் சுட்டெரித்தது; வயப்படுத்தும் குயிலின் ஓசையோ, துக்கத் தின் துயர ஓசையாகியது.

அதனால் வெந்தமனத்தோடு இருந்த கோதை குயிலிடம் நான் சொல்லுவதைச் செய்யவில்லையென்றால் இச்சோலையிலிருந்து உன்னைத் துரத்திவிடுவேன் என்றார். குயிலே என் நாயகன் இவ்விடத்திற்கு வர கூவவில்லை யானால், நீ இந்தச் சோலையில் வாழமுடியாது என்றார். மேற்குறித்த பாட்டோவியத்தில் வரும் முதலடியில்

"அன்றுலகம் அளந்தானை உகந்து"

என்றதால், உறங்குகின்ற குழந்தையின் பசியறிந்து தாய் பாலூட்டுதல் போல, எம்பெருமானே சென்று மாவலியின் தலையில் தன் திருவடியை வைத்து அருள் தந்ததைக் குறித்தார். இதில் உகக்க என்று கூறாமல் உகந்து" என்றது எச்சத்திரிபு; மழைபெய்து நெல் விளைந்தது என்பதைப் போன்றதேயிது.

"அடிமைக்கண்" என்றதில் கண் ஏழன் உருபு. "வலி செய்ய" என்றதில் மெலிந்தவரிடம் வலித்தவர் காட்டும் திறமையைக் குறித்தார். இங்கே எம்பெருமான் மாவலியிடம் காட்டியது இத்தகைய தாகாது "வல்லமையால் நல்லோரையெல்லாம் கொள்ளை கொடுத்து நாட்டைப் பறித்த கேடுடைய மாவலியிடத்தில்தான் மாயபிரான் வலி செய்தான் எனக்கொள்ள வேண்டும்.

காதலர்கள் பிரிந்து துன்பப்படும் போது தென்றலும் நிலவும் அவர்களைச் சேர்த்து வைத்து மகிழ்விக்கின்ற செயற்பாடுடையன வாயிருத்தல் வேண்டும். பிரிந்திருப்ப வரை வருத்துவது நெறியாகாது என்பதை,

"தென்றலும் திங்களும் ஊடறுத்தென்னை" என்ற தொடர் மொழியால் விவரித்தார். சோலையில் குயில் கூவுவது, பிறரைத் தன்வயப்படுத்த வேண்டும். ஆனால் இங்கே கூவியகுயில் கோதையின் உயிரை வாங்கும் தன்மை யிலிருந்ததால் "இங்குத்தை நின்றும் துரப்பேன்" என்ற தொடரால் விவரித்தார். நாராயணனை இங்குக் கூவியழைக்க வில்லையென்றால் என்னுயிரை இழப்பேன். என்னும் கருத்தும் மேற்குறித்த தொடரிலுள்ளதை அறியலாம். செம்பொருளான அம்மாயன் வந்து எனக்கு அருள் செய்யவில்லையெனில் நான் வாழ மாட்டேன். நீயும் இந்தச் சோலையிலிருக்கவே முடியாது என்பதைத்

'துரப்பன்' என்றதால் குறித்தார். இச்செய்திகளை அழகுற இவ்வோயத்தில் காட்டினார். அவன்தான், நான் உவந்து போற்றும் பொருள் என்றார். அப்பொருளின் திருவருளுக்காகவே வாழுகின்றேன் என்றார். பிறிதொரு பொருளை அறிகிலேன், எனக் கூறினார். அந்த ஒரு பொருளே பிற அனைத்துப் பொருளையும் வாழ்விப்பது என்று உலக மக்களுக்கு நாராயணனான அப்பரம்பொரு ளைப் பற்றி உய்ய இவ்வோவியத்தில் இனிது விளக்கினார்.

## கடல்வண்ணனை வரக் கூவுவாய்!

வேல் போன்ற கண்களையும் பெண்மைக்குரிய குண நலன்களையும் பெற்றிருந்தவர் கோதை. இசையாக அமைந்துள்ள நான்கு வேதங்களையும் ஓதும் திறன் வைணவர்கள் பெற்றிருந்தார்கள். அவர்கள் வாழும் ஊரே திருவில்லிபுத்தூராகும். இத்திருவில்லிபுத்தூருக்குத் தலைவ ராய் இருந்தவர் பெரியாழ்வார். இவருடைய மகளாகத் தோன்றியவரே கோதைப்பிராட்டியார். விண்ணில் போய் திருவடி பொருந்துமாறு நெடுக வளர்ந்து உலகையெல்லாம் அளந்து மிக ஆற்றலுடன் நின்ற எம்பெருமானை இவர் அடைய விரும்பினார். கோதை, கடல் போன்ற நிறத்தை யுடையவனைக் காதலனாகப் போற்றுகின்றார். என் காத லனைப் போன்ற கரிய நிறத்தைப் பெற்றிருக்கும் குயிலே அவனைக்கூவி இங்கே வரவழைப்பாயாக! என்று கோரும் நிலையில் இசைந்து அருளிச் செய்த இப்பாசுரம் மிகப் பெருமை வாய்ந்தது.

இந்த ஓவியமாகிய பாமாலையைப் பாடவல்லவர்கள் கண்ணனின் பாத்திரராய்ப் பயன் காண்பார்கள் என்று பொதுநோக்குடனும் பிறரும் எம்பெருமானை அனுப விக்க நினைக்குமாறும் இனிமைபயக்கும் வகையிலே

"விண்ணுற நீண்டடி தாவிய மைந்தனை
வேற்கண் மடந்தை விரும்பிக்
கண்ணுற என்கடல் வண்ணனைக் கூவு
கருங்குயிலே என்ற மாற்றம்
பண்ணுற நான் மறையோர் புதுவை மன்னன்
பட்டர் பிரான் கோதை சொன்ன
நண்ணுறு வாசக மாலை வல்லார் நமோ
நாராயணாய என்பாரே!" (52)

என்று பாடி இசைக்கின்றார்.

இதைப் பாடுவோர்க்கு அருளாளனின் திருவடிப் பேறு கிட்டும் என்று பலனைக்கூறி முடிக்கின்றார். முன்பு வேங்கடவனை, சங்கொடு, சக்கரத்தானை, பவள வாயனைப் பாடியவர் இதில் விண்ணுற நீண்டு தாவிய மைந்தனை விரும்பி இசைத்தார்.

ஒன்றைக் கொள்வதற்கு ஒருவனிடம் செல்லும் அம்மா மாயன் அந்த ஒருவன் மேலும் ஏதும் தரவே இல்லாதவாறு அவனிடத்திலுள்ள அனைத்தையும் அளந்தவன் அவன். அப்படி அளந்த தாமரை அடியுடையானை நான் போற்று கின்றேன். ஏன் என்றால் உலகப்பற்றே இல்லாதவாறு செய்பவன். ஆதலாலே அவனுடைய அருளியல் பற்றில் ஒன்றிடவே அவனை இசைத்தேன் என்று கூறுகின்றார்.

பிறருக்குப் பற்றை அறுத்து நிறைவான வாழ்வை வழங்கும் திருமாலை நெஞ்சுவந்து பாடினார். வேற்கண் மடந்தை பட்டர்பிரான் கோதை, விண்ணுற நீட்டித்தாவிய மைந்தனை விரும்பினார். விரும்பியவர் கருங்குயிலைப் பார்த்து என் கடல் வண்ணனைக் கூவி வரவழைப்பாயாக என்று கூறினார்.

"வேற்கண்" என்றதால் ஆற்றல் பெற்றிருக்கும் மாயபிரான் மாற்றமடைய மயக்கும் அந்த வேற்கண்

ணிற்குப் பலியாவானே என்பதை உணர்த்திய திறன் போற்றத்தக்கது. "நண்ணுறு" என்றதால் எம்பெருமானைக் காண்பவர்கள் அனைவரும் அன்பினை ஆவலினைக் கொள்ளாமலிருக்க வியலாது. இப்படி ஈர்க்கவல்ல ஒப்பில்லா அப்பனைப் பற்றி அவனின் வயப்பட ஓவியமாக இசைத்தார்.

இவ்வாறு இனிதருளிய அந்த வாசக மாலையைப் பாடுகின்ற அனைவரும் "நமோ நாராயணாயவென்று இசைப்பார்கள் என்றும் அப்படி அவனைப் பாடுவோர்க்குப் பலன் ஏற்படும் என்றும் கூறினார். பட்டர் பிரானாகிய தம் தந்தை பெரியாழ்வாரைக் கூறி அவர் பாடிய பல்லாண்டைப் பாடுமாறும் உணர்த்துகின்றார். பல்லாண்டும் பரமாத்மனைச் சூழ்ந்திருந்து பல்லாண்டு பாடிடக் கூறுகின்றார்.

(நேரிசைவெண்பா)

மாதவனைப் பாடி வணங்கு !

**மழைமேகம் போன்றவனோ வந்தினிமை நல்கும்**
**அழகன் திறனறிந்தே அன்பாய்—விழைந்தேத்தி**
**கோதையார் போற்றிநிதம் கும்பிட்டே சீருரைத்த**
**மாதவனைப் பாடி வணங்கு !**

**மனத்திற்கோ ஏற்றவனாம் மன்னனந்தான் மிக்க**
**வனப்புடையன் தன்னை மகிழ்ந்தே—நினைந்தேத்திப்**
**பாடினார் கோவிந்தன் பண்புரைத்தார் கோதையே**
**கோடித்த ஆயனையே கூறு !**

## ஆறாம் திருமொழி

### கனவில் கரம் பிடித்த கண்ணன்!

1. மாயிலை யாலே தோரணம் நாட்டி
வனப்புறச் செய்தவீ தியிலே
ஆயிரம் யானை வலம்வரப் பின்னர்
ஆயனே வருவதைக் கண்டு
நேயமாய் எடுத்தார் பூரணக் கும்பம்
நிமலனே என்னுடைக் கனவில்
தூயனாய்ச் சுடர்ந்து நின்றனன்தோழி!
துணைவனே என்றனர் கோதை!

2. இந்திர னோடு தேவர்கள் எல்லாம்
இனியவன் கண்ணனுக் காக
வந்தெனை மணமே பேசினார் எனக்கு
மதிப்புடைப் பட்டினை உடுத்தி
அந்தமாய் மாலை சூட்டியே என்னை
அழகுற செய்ததைக் கனவில்
விந்தையாய்க் கண்டேன் தோழியே வியக்க
விளம்பியே இசைத்தனர் கோதை!

3. மத்தளம் கொட்ட வரிசங்கம் ஊத
வனப்புடை முத்துப்பந் தற்கீழ்
வித்தகன் கண்ணன் என்கரம் பற்றி
விருப்பினைக் காட்டினான் அவனை
நித்திரை தன்னில் கனவிலே கண்டேன்
நீயிதை அறிவையோ தோழி!
நத்தியே அவனை நயந்தனன் என்று
நவின்றுமே இசைத்தனர் கோதை!

## ஆறாந் திருமொழி !

ஆறாம் திருமொழியில் கலிதீர்க்க வந்த கண்ண பெருமானை, நலிவகற்றி நலம் பொழியவே கலிவிருத்த யாப்பில் ஒப்பமாக வரைந்தார். பாட்டிலக்கணப் பண்பில் நின்று பாடும் கோதை, மாட்சிமை தோன்றிடப் பாடினார். எடுத்துக் கொண்ட, ஒவ்வொரு தலைப்புக் கேற்ப பாடுபொருளைச் சிறப்புற நலம் விளங்கப் பாடியருளியுள்ளார்.

முன் திருமொழியாகிய ஐந்தாம் திருமொழியில் குயிலிடம் தமக்கு உதவிடவே வேண்டினார் கோதை. அனைத்தையும் காக்கும் கண்ணபிரானை வரவழைத்து அவனோடு தம்மைச் சேர்த்து வைக்கவே வேண்டினார். குயிலோ கோதைக்கு உதவி செய்யவில்லை. எனவே, கோதையின் மனம் கோவிந்தனைமே காண ஆவல் கொண்டிருந்தது. நம்பிக்கை நாயகனான எம்பெருமான் தன்னை விரும்பும் அடியார்கள். நினைத்தவுடனேயே ஓடி வந்து உதவுகின்றவனாவான். அப்படிப்பட்டவன் வந்து கோதைக்கு முகம் காட்ட வாராமலிருந்தான்.

ஏனெனில் கோதைக்கு மேலும் தன் வேட்கையை உண்டாக்கவே அவன் அமைதியாயிருந்தான். பின்னர், பிரியத்திற்குரிய கோதையின் கனவில் தோன்றியே தலைவன் கண்ணன் தலைவிக் கோதையை மணம் செய்து கொள்ளப் போகுகின்ற காட்சிகள் அனைத்தையும் உணர்த்தினான். இவ்வாறு அவன் உணர்த்திய நிலையை அனுபவித்த கோதை, தம் உயிர்த் தோழியின் பால் உவந்து கூறுகின்றார். இச்செய்தியைச் சான்றோர் போற்றுகின்ற வகையில் பாட்டோவியமாக்கி இசைக்கின்றார். மண்பதையில் வாழ்வோர் இதைப்பாடி இன்பங்காணும் வகையில் என்று முளத தீந்தமிழால் தீட்டியருளினார்.

## நாரணன் நம்பி என் எதிரில் வந்தனன் !

எல்லா நலன்களும் பெற்று அழகுடன் திகழும் முழு முதற் தெய்வம் கண்ணபெருமான். அவன் பாரோர் போற்றுகின்ற நாராயணன் ஆவான். அவன் இன்று, ஆயிரம் யானைகள் சூழ்ந்து வர, எல்லா இசைக் கருவிகளும் இசைத்திட என் முன்னே வந்து நின்றான். அவன் வரும் வீதியிலெங்கும் மாவிலைத் தோரண வாயில்கள் நாட்டப் பட்டிருந்தன. அவன் பூரணத்துவத்தை விளக்கும் தன்மையில், மங்கைகள் பொலிவுடைய பொற்குடங்களை ஏந்தி வந்ததைக் காட்டினார். இவ்வாறு கூறிய இனிய செய்தியையும் தம் காதல் நாயகனின கவின் மிகுந்த நிலையையும் அழகிய பாட்டோவியமாக வரைந்தார். அதை

''வாரண மாயிரம் சூழவலம் செய்து
நாரண நம்பி நடக்கின்றான் என்மறதிர்
பூரண பொற்குடம் வைத்துப் புரமெய்கும்
தோரணம் நாட்டக் கனாக கண்டேன தோழீநான்! (53)

என்றிசைத்தார்.

இதில் நாராயணன் என்னை மணம் செய்து கொள்ள வருகின்றான் என்பதை ஆயிரம் யானைகளின் ஆரவாரங் கள் தெரிவித்தன. ஆரவாரத்தைக் கேட்டவர் அனைவரும் அவரவர்கள் மனைகள் தோறும் பூரணப் பொற்குடம் வைத்தும், தோரணங்களை நாட்டியும் மங்கலத்தை வெளிப்படுத்துகின்ற வகையில் அலங்காரங்களைச் செய் திருந்தார்கள், இவ்வாறு செய்யப்பட்டிருந்ததைக் கனவில் கண்டதாக உயிர்த்தோழியிடம் கூறுகின்றார் கோதை. ஆயிரம் ஆனைகளின் மீது ஆயிரம் நபர்கள் அமர்ந்து வந்தார்கள் என்பதை

''தன்னே ராயிரம் பிள்ளைகளோடு தளர் நடையிட்டு
வருவான்''

என்று பெரியாழ்வார் தம் திருமொழியில் பாடுதல் காணலாம். இதனால் கண்ணபெருமானோடு எப்போதும் ஆயிரம் தோழர்கள் உடனிருப்பார்கள்என அறிகின்றோம். அவர்கள் கண்ணபெருமான் திருமணக் கோலத்தோடு யானையின்மீது, அமர்ந்து வரும்போது அவனுடன் அந்த ஆயிரம் தோழர்களும் ஒவ்வொரு யானையின் மீது அமர்ந்து வருகின்றார்கள் என்பதை உணர்ந்து கொள்ளும் வகையில் பெரியாழ்வார் விவரித்தார். இந்தச் செய்தியை ஒட்டினார் போன்று கோதைப் பிராட்டியும்

''வாரணம் ஆயிரம் சூழ வலம் செய்து" என்ற தொடர் மொழியால் சுட்டியிருத்தலைக் காணலாம்; இவ்வாறு இனிமை தோன்ற தம் கனவுக் காட்சியினை விளம்பும் கோதை; தம்மைத் திருமணம் செய்து கொள்ள வந்த பெருமானைப் பற்றி ''நாராணன் நம்பி நடக்கின்றான்'' என்று கூறினார். இத்தொடரில்.

நடக்கின்றான் என்று கூறியதை வருகின்றான் என்னும் கருத்தில் தெரிவித்தல் அறியலாம். புரம் எங்கும் என்றதில் இடையன ரகரத்தைப் பெய்துள்ளார். இது ஊரிலெல்லாம், உலகத்திலெல்லாம், இருபபவர்கள் பேராயிரம் கொண்ட பெருமான் விழாவில் கலந்து கொள்ள வந்ததைக் குறித்தார்.

வல்லின றகரத்தைக் கொண்டு சிலர் பொருள் கூறுவர். இப்படிக் கூறினால் எம்பெருமான் புறப்பட்டு வருகின்ற நகரத்தை மட்டும் குறிப்பதாகும். இது கோதை எடுத்துரைத்த கருத்துக்கு ஏற்புடையதாகாது.

செம்பொருளான எம்பெருமான் உலகமெல்லாம் நீக்க மற நிற்பவன். ஆதலால் அவனை உலகத்திலிருப் போரெல்லாம் போற்றிப் பூரண கும்பத்தை வைத்துத் தோரணத்தை நாட்டி, அலங்கரித்து, உளங்கொண்டு

ஏத்தியிருத்தல் திண்ணம். ஆகவே, இந்நிலையினை விவரித்துக் கூறவே கவிதை படைக்கும் திறத்தில் சிறந்த கோதை ''புரமெங்கும்'' என்னும் சொல்லைப் பெய்து கவிதை புனைந்ததை எண்ணி எண்ணிப் போற்றுதற்குரிய தாகும்.

ஊரும், உலகமும் போற்றும் அவனை ஒருபுறத்தில் அடக்கிக் காட்டாமல் நாற்புரத்திலும் தெரியக் காட்டிடவே மாயனைக் காதல் ஓவியமான இப்பாசுரத்தில் மகிழ்வுடன் புனைந்துரைத்தார்.

## காளைப் புகுதக் கனாக் கண்டேன் !

என்னைத் திருமணஞ் செய்து கொள்ள மணவிழா வினை ஏற்பாடு செய்தனர்; வீதியில பந்தல் அமைத் திருந்தனர். பந்தற்கால்களில் பாளைகளையுடைய பாக்கு மரங்களைக் கட்டியிருந்தார்கள். உள்ளே மணவறையை அழகாக அலங்கரித்திருந்தார்கள். அம்மணவறையில நரசிம் என்றும் மாதவன என்றும், கோவிந்தன் என்றும் பல்வேறான திருப்பெயர்களைக் கொண்டுள்ள அழகு வாய்ந்த காளை ஒருவன நின்றிருந்ததை யான்வியப்புடன பார்த்தேன. என்று கோதை தோழியிடம கூறிய ஆர்வ மொழியை

> ''நாளை வதுவை மணமென்று நாளிட்டுப்
> பாளை கமுகு பரிசுடைப் பந்தற்கீழ்
> கோளரி மாதவன் கோவிந்தன என்பானோர்
> காளை புகுதக் கனாக் கண்டேன் தோழீ நான்!'' (54)

என்று வரைந்தார்.

அந்த நிறைமொழியைச் சிறந்த ஓவியமாக்கினார். தம் வாயால் அந்த ப்பாவியத்தினால் மணவறையில் நின்றிருந்த காளையை அழகுற இசைத்தார். வரைந்ததைப் பிறர் வாயி

விக்கப்பாடிடத் தந்தார். மனித குல மேம்பாட்டுக் காகவே தம் பாட்டைத் தீம்பாட்டாக, தெவிட்டாத, சுவைப் பாட்டாக வரைந்தார். கோளரியான கோவிந்தனுக்கும் குறையாத அழகில் நிறைவெய்தி நிற்கின்ற கோதையாகிய எனக்கும் நாளைய தினம் பெரிய திருமண விழா நிகழப் போகின்றது.

அந்தத் சிந்தைக்கினிய திருமணவிழா நடப்பதற்கு முன்னால் மயர்வறுக்கும் மாயன் அலங்கரிக்கப்பட்ட கலை தலமுடைய பந்தலின் கீழ் எழுந்தருளியிருப்பதைக் கன விலே கண்டேன் என்று தம் உயிர்த் தோழியின் பால் உரைத்தார் கோதை.

பத்து நாள் கழித்துத் திருமணம் என்றால், வருந்தும் மனத்திற்கு அமைதியை ஏற்படுத்தி, மகிழ்ச்சியைத் தெரிவிக்கவே "நாளை வதுவை" என்றார். "வதுவை" என்று கூறியதால் மனத்தை ஈர்க்கும் தமிழின் இனிமையைக் காட்டவே குறித்தார். இன்று திருமண அழைப்பை விவாக சுப முகூர்த்தப் பத்திரிகை என எழுதுவோர்க்கு "வதுவை விழா மடல்" எனச் சிந்தித்து எழுதிடவே செந்தமிழில் எழுத உணர்த்தினார். பந்தல்காலில் பாளையொடு கூடிய பாக்கு மரங்களைக் கட்டி அழகுச் செய்ததை நினைவு கூர்ந்தார். இதனால் அன்று செய்திருந்த அலங்கார நிலையை உணர்ந்திடவே செய்தார்.

பந்தலைப் "பரிசுடைப் பந்தற்" என்றதால் பந்தலின் அலங்காரத்தைச் சுட்டியதோடு விருப்பூட்டும் பொருள்க ளைத் திருமணப் பந்தலின்கீழே தட்டுகளில் பரிசுப்பொருள் களை வரிசையாக வைக்கப்பட்டிருந்ததைக் குறித்தார்.

மணக்கோலம் பூண்டு வீறு நடை போட்டு வந்தவனைக் "கோளரி" என்றார் மணப்பந்தலின் அலங்காரத்தைக் கண்டு மகிழ்ந்த அவனை மாதவன் என்றார். எல்லோரும்

பாராட்டும் வகையில் எழிற் கோலம் கொண்டிருந்த அழகனைக் கோவிந்தன் என்றார்.

மணவிழாவிற்கு வந்தவர்கள் எளிவந்த பிரானாக இருக்கும் அவன் முகத்தைக் கண்டு போற்றினார்கள்; புகழ்ந்தார்கள்; அவன் களிப்பில் கோதைப் பிராட்டி ஒன்றி னார். அதனால் இனிது இசைத்த இன்கவி ஓவியத்தில் உலகளந்தானை ஒளியுடன் திகழச் செய்தார்.

## மணமாலை சூட்டக் கனாக் கண்டேன்

இந்திரன் முதலான தேவர்கள் எல்லோரும் என்னை மணப்பேச வந்திருந்தார்கள். என்னைச் சம்பந்தம்கொள்ள ஒருவருக்கொருவர் செய்ய வேண்டிய பணிகள் குறித்துப் பேசி ஏற்பாடு செய்ய திட்டமிட்டார்கள்.

அதன் பின்னர் நாத்தியான துர்க்கை என்பவர் திரும ணத்திற்குரிய பரிசுப்புடவையை எடுத்து வந்து எனக்கு உடுத்தி மிகுந்த மனமுள்ள மலர்மாலைகளைச் சூட்டினார். என்பதனையானோ கனவிலே தான் கண்டேன் என்று தோழியிடம் கூறிய கோதை

> "இந்திரன் உள்ளிட்ட தேவர் குழாமெல்லாம்
> வந்திருந்து என்னை மகட் பேசி மந்திரித்து
> மந்திரக் கோடி யுடுத்தி மணமாலை
> அந்தரி சூட்டக் கனாக் கண்டேன் தோழீ நான்!" (55)

என்று வரைந்த இப்பாட்டோவியத்தில் காட்டினார்.

இதில் இந்திரன் முதலான வானவர்கள், இன்னமுதனின் திருமண விழாவை நடத்திட இம்மண்ணுலகத்திற்கு வந்து குவிந்தார்கள். இப்பணியை முடித்தாலன்றி வேறு பணியில் ஈடுபட மாட்டோமென்று பெண்ணை மணம் பேசவே வந் தார்கள். திருமணத்திற்காக உறுதிபடுத்தும் விழாவை நடத்தினார்கள். உறுதிபடுத்த தாம்பூலம் மாற்றிக்

கொள்ளப்பட்டது. நாத்தியைக் கொண்டு பரிசாகக் கொணர்ந்த புதிய பட்டுப் புடவையினைக் கட்டியதோடு அணிகலன்களைப் பூட்டியும் என்னைச் சிறப்பித்தார்கள்.

இவ்வாறு மகிழ்ந்து செய்த செயல்கள் அனைத்தையுமே நான் கனவில் கண்டேன் என்று கோதை கூறுகிறார். சக்கர வர்த்தித் திருமகனான இராமபிரான் சாபங்க முனிவரு டைய ஆசிரமத்திலிருந்தபோது, அங்கு வந்த தேவேந்திரன் சேவிக்காமலேயே சென்று விட்டான். அவன் இப்படி நடந்து கொண்டதைப் பொருட்படுத்தாமல் இராமபிரான் இருந்தான்.

இன்றோ, கண்ணபிரானுக்காக முன் வந்து மணமுடிக்க தேவேந்திரன் வந்ததற்குக் காரணம், கண்ணன் தன் பரத்துவ நிலையை வெளிப் படுத்தியிருந்ததேயாகும். வேதனைப் படுவோரின் குறையைத் தவிர்த்தே நிறைவை செய்யும் அவனுக்குத் தொண்டாற்றவே தேவேந்திரன் மட்டுமல்லாமல் மற்றுமுள்ள தேவர்கள் குழாம்களும் சூழ உதவி செய்ய வந்தார்கள்.

"மகள் பேசுதல்" என்று கூறியதில் கோதையாகிய மகளைக் கொடுப்பதற்கு அவரின் பெற்றோரிடம் இவர்கள் பேசிக் கேட்பதைக் குறித்தார். மந்த்ரம் என்னும் வடச் சொல்லைக் கோதை மந்திரம் என்று தமிழ்ப் படுத்தினார். "மந்திரித்து" என்றதை ஆலோசித்து மணஞ் செய்வதற் குரிய நாளைக் குறித்ததை உணர்த்தினார்.

கோடி யுடுத்திட என்றதில் புத்தாடையை அணி வித்ததைக் குறித்தார். "கோடியுடுத்து" என்று சிலர் கூறுவார்கள். "உடுத்து" என்பது தான் அணிந்து கொள் வதைக் குறிக்கும், உடுத்தி என்றது பிறருக்கு அணிவிப்ப தைக் குறிக்கும். முன்னது தன் வினை, பின்னது பிறவினை யாகும். இங்கே "உடுத்தி" என்று கோதை பிறவினையைக் கையண்டார்.

அந்தரி என்று, கோதை துர்க்கையைக் குறித்து ஒரு வரலாற்றை நம் கவனத்திற்குக் கொண்டு வருகின்றார், வசுதேவரும், தேவகியும் பெறுகின்ற எட்டாவது பிள்ளையால் கம்சன் உயிருக்குத் துன்பம் நிகழும் என, வானிலிருந்து கூறிய செய்தியைக் கேட்ட கம்சன் அஞ்சி, அவர்களுக்குப் பிறந்த ஒன்று முதல் ஆறு குழந்தைகளைத் தன் உடைவாளால் வெட்டிச் சாகடித்தான். ஏழாவது குழந்தை பலராமன்; தேவகி வயிற்றில் ஆறுமாதம் உருவாகிய பின் ரோகினியின் வயிற்றுக்கு மாற்றப்பட்ட தால் கம்சனின் வாளுக்கிரையாகாமல் தப்பிப் பிழைத்தான்.

தேவகியின் எட்டாவது குழந்தை கண்ணபிரா னாவான். இவனை வசுதேவர் ஆயர்பாடியில் யசோதை யிடத்தில் வைத்துவிட்டு, யசோதை பெற்ற பெண் குழந்தையைத் தேவகியின் பால் கொணர்ந்து வைத்தார். இக்குழந்தை தேவகிக்குப் பிறந்ததென அப்பெண் குழந்தையை வெட்ட முனைந்தபோது கம்சன் கையி லிருந்து விடுபட்டு விண்ணில் சென்று மறைந்தது. அக் குழந்தையே அந்தரி என்னும் துர்க்கையாகும்.

இத்துர்க்கையைப் பற்றி அறிந்து கொள்ளவே கோதை "மந்திரக் கோடி யுடுத்தி மணமாலை அந்தரி சூட்டக் கனாக் கண்டேன் தோழி நான்" என்று கூறினார். எம்பெருமானால் மாயையின் அம்சமாகத் தோன்றியவள் அந்தரி. இவளே கண்ணபெருமானின் தங்கையாவாள். இந்த அந்தரி தான் கோதையின் நாத்தியாய், புத்தாடை யுடுத்தி மணமாலை அணிவித்தாள் என்று கூறுகின்றார். இந்தப் பாசுரத்தில் எம்பெருமானை அடைய தாம் கண்ட கனவின் நிலையைத் தெரிவித்தார்.

## புனிதன் காப்புக் கட்ட கனாக் கண்டேன் !

பார்ப்பன குலத்தைச் சார்ந்த சான்றோர் பலர், நான்கு திசைகளிலுமிருந்து தீர்த்தங்களைக் கொண்டு

வந்து நன்றாகத் தெளித்து ஏத்தி வாழ்த்தினர், பல வகையான மலர்களைக் கொண்டு புனைந்த மாலையை அணிந்தவனான கண்ணபெருமான் மணவறையில் வந்து நின்றான். வந்தவன் என்னோடு இணைந்து 'நின்றான் என் கையில் காப்புக் கட்டினான். இதைக் கனவில் யான் கண்டேன் என்று தோழியிடம் கூறும் கோதை

"நாற்றிசைத் தீர்த்தம் கொணர்ந்து நனிநல்கிப்
பாப்பனச் சிட்டர்கள் பல்லார் எடுத்தேத்திப்
பூப்புனை கண்ணிப் புனிதனோடு என்றன்னைக்
காப்புநாண் கட்டக்கனாக் கண்டேன்தோழீநான்!" (56)

என்று பாடி வரைந்த இவ்வோவியத்தால் விளக்கிக் காட்டினார்.

சக்கரவர்த்தித் திருமகனான இராமபிரானுக்குச் செய்த திருமண விழாவின் போது நீராடல் நிகழ்த்திய காலத்தில் வானர வீரர்கள் நான்கு கடலிலுள்ள தீர்த்தங்களைக் கொணர்ந்ததைப் போல என்னுடைய திருமண விழாவிற்காக அந்தணர்கள் நாற்றிசையும் சென்று நால்வகைத் தீர்த்தங்களைக் கொண்டு வந்து என்னையும் மாயபிரானையும் நீராடச் செய்தார்கள். ஆடை அணிகலன்களைக் கொண்டு அலங்காரம் செய்தார்கள்.

வருகை தந்த தேவர்கள் வாயார என்னைப் போற்றினார்கள். கையில் காப்புக் கட்டி மெய் யுணர்வோடு போற்றினார்கள். நான் கூறிய இவற்றை யெல்லாம் கனவிலே கண்டு மகிழ்வுற்றேன் என்று தோழியின்பால் கூறினார். நனி என்பது மிகுதியைக் குறிக்கும் உரிச்சொல். நல்குதல் என்பது கொடுத்தல் என்பதாகும். பிராமணர் என்னும் வடச்சொல்லைப் பார்ப்பனர் என்று தமிழில் கூறினார்.

"பார்ப்பனச் சிட்டர்" என்பது அந்தணர் குடியில் பிறந்தவர்கள் அந்நெறியில் மாறாமல் வேதம் ஓதுதல், ஓதுவித்தல் முதலானவற்றில் சிறந்தவர்கள் எனக் குறித்த தாகும். இரண்டாம் அடியில் மூன்றாம், நான்காம் சீரில் "பல்லார் எடுத்தேத்தி" என்று வரும் தொடர் மொழியைப் பல்லாண்டெடுத்தேத்தி என்றும் கொள்ளலாம். பல்லோர் வந்து வாயார வாழ்த்தினார்கள் என்றும் கொள்ளலாம்.

"பூப்புனை கண்ணி" என்றதில் மணமகனை உயர்ந்த ஆடைகளாலும், அணிகலன்களாலும் அலங்கரிக்கப் பட்டிருந்தும் மணமகனை அவ்வாறின்றி மலர்ச் சரங்களால் மட்டும் அலங்கரிப்பட்டிருந்த நிலையினை உணர்த்திய தாகும். புண்ணியன் என்று கூறியதைத் தூயன் என்று கூறப்பெற்றது. நீராடி ஆசாரமுடைய சீலனாய் அவன் இருந்த நிலையைக் குறிக்கவே புனிதன் என்னும் சொல்லால் சிறப்பித்தார்.

இத்தகைய புனிதனோடு என்றன்னை என்னும் சொல்லை இணைத்துத் தம்மை அவனோடு சேர்க்கக் காப்பு நாணை தம் கையில் கட்டுவதைக் கூறினார். இந்த விவரத்தைக் கனவில் கண்டேன் என்று தோழியின் பால் கூறுகின்றார். கோதை வாழ்ந்த காலத்திலிருந்த வழக்கத்தையே இப்பாசுரத்தில் குறித்துள்ளார். இப் பாசுரத்தில் புனிதனான, இனியனான கண்ணபிரானை ஓவியமாக வரைந்தார். அவன் பெருமையினை அருமை யாக விவரித்தார்.

## மதுரையார் மன்னன் வர கனவுக் கண்டேன்!

அருமைத் தோழியே! அழகிய இளமகளிர் பலர், சூரிய ஒளியைப் போன்று இருக்கின்ற மங்கல விளக்குகளை ஏந்திக் கொண்டும் மின்னுகின்ற பொன்னலான கலசங்களை எடுத்துக் கொண்டும் எதிர்நோக்கிச்

சென்றார்கள். அப்போது ஒப்பில்லா மதுரை மாநகரத்தினை ஆண்டு வருகின்ற மன்னனான கண்ணபெருமான் எதிர்நோக்கிப் பாதுகைகளை அணிந்து கொண்டு பூமி அதிர நடந்து வருவதை யான் கனவு கண்டேன் என்று கோதை கூறியதை

"கதிரொளி தீபம் கலசமுடன் ஏந்திச்
சதிரள மங்கையர் தாம்வந் ததிர் சொள்ள
மதுரையார் மன்னன் அடிநிலை தொட்டெங்கும்
அதிரப் புகுதக் கனாக் கண்டேன் தோழீ நான்!" (57)

என வரைந்து காட்டினார். இப்பாட்டோவியத்தில்; அழகுடைய மகளிர் பலர் விளக்குகளையும், பூரண கும்பங்களையும் ஏந்திக் கொண்டு வந்தார்கள். அவர்கள் அணி வகுத்து வந்தது பார்ப்பவர்கள் வியக்கும் தன்மையில் இருந்தது. இப்படி சீர் வரிசையை எடுத்துச் சென்றவர்கள் கண்ணபெருமானை எதிர் கொண்டழைக்கவே சென்றார்கள். இக்காட்சியினைக் கனவில் கண்டு மிக்க மகிழ்ச்சியுற்றேன் என்று தம் உயிர்த் தோழியிடம் விழைவுடன் கூறுகின்றார் கோதை.

இப்பாசுரத் தொடக்கத்தில் "கதிர்" எனக் குறித்தார்; கதிர் எனின் கிரணம் என்று வடமொழியில் கூறுவர். இங்குக் கதிர் என்றது இலக்கணையால் பரிதிக்கே பெயரானது. மங்கல விழாக் காலத்தில் எடுத்துச் செல்கின்ற விளக்குகள் அணையாமல் இருப்பதற்காக அவற்றைச் சுற்றித் தடுப்பமைத்துப் பாதுகாப்பாகச் சூரிய பிரபை போல வைத்து எடுத்துச் சென்றார்கள்.

மதுரையார் மன்னன் என்று பாடியது கண்ண பெருமானே இத்திருப்பெயரை விரும்புபவன் ஆதலால் இவ்வாறு பாடினார். இப்பெயரைச் சொல்லி எம்பெருமானை எவரும் பாடினாரில்லை. அவன் விரும்பு வதற்காகவே இவ்வாறு பாடினார் போலும். "அடிநிலை

கொட்டு" என்ற கருத்திற்கு, தன் திருவடிகளில் அணிந்து கொண்டிருந்த பாதுகைகளை அருகிலிருப்பவர்கள் கையில் கொடுத்து விட்டதாகச் சிலர் தவறாகப் பொருள் கூறுவர்.

அச்சிட்டோர் இவ்வாறு அச்சிட்டே இருப்பதால் தவறாகவே பொருளைக் கூற வேண்டியதாயிற்று. ஆனால் இதற்குக் "கண்ண பெருமான் பாதுகையை அணிந்து கொண்டு வந்தான்" என்பதே பொருத்தமுடையதாகும். ஆம் எம்பெருமான் பாதுகையை அணிந்து கொண்டு நடந்ததால் பூமி அதிர்ந்தது என்பதைத் தெரிவிக்கும் வகையில் கோதை பாடி இருத்தல் காணலாம்.

அதிரப் புகுத என்றகில் ஏன் பூமி அதிரும்படி கண்ணன் வர வேண்டுமா? அமைதியாக வரக்கூடாதா என்று சிலர் கேட்கக் கூடும். இதற்குக் காலத்தோடு மணஞ் செய்ய வேண்டும் என்ற விரைவாலே இவ்வாறு நடந்து வர வேண்டியதாயிற்று எனக் கொள்ளுதல் சிறப்பு. பெரியாழ்வார் திருமகளை ஏற்பதற்காகக் கண்ண பெருமானுக்கு உள்ளத்தில் எற்பட்ட விழைவே விரைவாகிப் பூமி அதிர நடந்து வர வேண்டியதாயிற்று, என்று சொல்வதே சிறப்பு.

இப்பாட்டோவியத்தில் கண்ணபெருமான் மகிழ்ச்சியின் பெருக்கால் மணம் செய்து கொள்ள வந்த விரைவை அப்படியே வரைந்தார் கோதை!

## மதுசூதன் கரம் பற்றக் கனாக் கண்டேன் !

தோழீ நான் சொல்லப் போகும் ஒரு செய்தியினைக் கேட்பாயாக! மத்தளம் கொட்டிடவும் இரேகைகளைப் போல் கோடுகளை உடைய சங்குகளை ஊதிடவும் உறவு முறையில் மைத்துனனாகிய, பரிபூரணன் என்னும் கண்ண

பெருமான் முத்துகளையுடைய மாலைகளைச் சரம், சரமாகத் தொங்க விடப்பட்ட பந்தலின் கீழே வந்து நின்றவன், என்னைத் திருமணம் செய்து கொள்வதற்காகவே விரும்பி வந்தான். அவ்வாறு வந்த இக்காட்சியினைக் கண்டேன்! கண்டு மகிழ்ந்தேன்! இக்காட்சியினை எங்கே எப்படிக் கண்டேன் தெரியுமா?

ஒருநாள் அருளாளன் நினைவாகவே படுத்தேன். அயர்ந்து தூங்கிவிட்டேன். அப்போது ஏற்பட்ட கனவில் கண்டேன், என்று தோழியிடம் கூறினார் கோதை.

''மத்தளம் கொட்ட வரிசங்கம் நின்றூத'
முத்துடைத் தாமம் நிரைதாழ்ந்த பத்தற்கீழ்
மைத்துனன் நம்பி மதுசூதன் வந்தென்னைக்
கைத்தலம் பற்றக் கனாக் கண்டேன் தோழீ நான்!" (58)

என்று இசைத்தார்.

இதில் மத்தளம் முதலான இசைக்கருவிகள் மங்கலப் பண்ணினை ஒலிக்கவும், எண்ணிறந்த கலை நலத்தோடு முத்துகளால் அலங்கரிக்கப்பட்ட பந்தலைக் கண்டேன். அந்தப் பந்தலின் கீழ் மணக் கோலத்தில் மாயபிரான் அழகாக நின்றிருந்தான். அந்தப் பந்தலில் என்னைத் தனக்குரியவளாக ஆக்கிக் கொள்ள என் கையைப் பற்றினான். அந்த அற்புதன் இனிது வந்து பற்றியதையே கண்டேன். இவ்வாறு பற்றியதைக் நான் கண்டதுவோ கனவில் தான் என்று தோழியிடம் கூறினார். கோதை,

''நின்றூத'' என்றதில் ''நின்று'' என்றது வார்த்தைப் பாடு என்பதாகும். ''மைத்துனன'' என்றதை அத்தை மகன் என்று குறித்தார். இது மாமன் மகளை மணக்கும் முறை பற்றிய தன்மையில கூறியதாகும். நப்பின்னைப் பிராட்டிக்குக் கண்ணபெருமான் மைத்துனன், ஆதலால் அந்த முறைமையைக் கோதையும் உள்ளத்தில்

கொண்டே ''மைத்துனன் நம்பி'' என்றார் போலும்; ''மது சூதன்'' என்றதில் கண்ணனின் உடைமையைப் பிறர் கவர எண்ணினால் உடனே வீறு கொண்டு அவர்களை அழிப்பவன், ஆதலால் அவனை இச்சொல்லால் சுட்டிக் கூறினார்;

அவன் உடைமையை அவனே வந்து எடுத்துக் கொள்வான் என்பதைக் கூறி, தம்மை அவனின் உடைமைப் பொருளாகக் குறித்தார். இவ்வாறு அவனை நினைந்து இனிது பாடி கனவிலே கலந்த கோதை அந்த நிலையைஇந்த ஓவியத்தில் வரைந்து காட்டினார்.

## மாகளிறு அன்னான் என்கைப் பற்றினான்

அருமைத் தோழியே! என் கருத்தினைக் கேட்பாயாக! நன்றாக மறை ஓதுகின்ற திறத்தினைப் பெற்ற அற நெறியாளர்கள், வேத வாக்கியங்களை நன்கு ஒலியெழுப்பிச் சொல்லுகின்றார்கள். அவர்கள் மந்திரங்கள் ஓதும் அந்த இடத்தில் இலைகளைக் கொண்ட நாணற்புல்லைத் தரையில் பரப்பி வைத்திருந்தார்கள். அதற்கு மேல் சமிது என்கின்ற சுள்ளிகளை, அடுக்கி எரியூட்டி வைத்தார்கள். இவ்வாறு ஓமம் வளர்க்கும் போது, சினத்தையுடைய போர் யானையைப் போன்று மிடுக்காக வந்த கண்ணபெருமான் என் கரத்தைப் பற்றினான். என் கரத்தைப் பற்றிய அவன் கொழுந்து விட்டு எரிகின்ற ஓமகுண்டத் தீயினைச் சுற்றி வரக் கண்டேன். இவ்வாறு யான்கண்ட காட்சி நனவல்ல கனவாகும் என்று தம் இனிய தோழியின் பால் கோதை இயம்பினார்: இதை

**''வாய்நல்லார் நல்ல மறையோதி மந்திரத்தால்**
**பாசிலை நாணல் படுத்துப் பரிதி வைத்துக்**
**காய்சின மாகளிறு அன்னான்என் கைப்பற்றித்**
**தீவலம் செய்யக் கனாக் கண்டேன் தோழீ நான்!'' (59)**

என்று அழகோவியமாக வரைந்திசைத்தார்.

இந்தப் பாசுரத்தில் வாயால் நான்கு வேதங்களை ஓதும் வேதியார்கள் உலகியல் செய்திகளைச் சொல்லுகின்றவர்களாக மட்டுமின்றி அருளியலுக்குரிய பரத்துவ விவரங்களைப் பற்றி யறிந்தவர்களாகவும் இருந்தார்கள். அவர்கள் இவ்வாறாகக் கருத்துகளை ஓதும் போது, கண்ண பெருமான் ஆற்றலோடு வீர நடைப்போட்டு வந்தான். அந்த வேளையில் அவ்வந்தணர்கள் திருமணக் காலத்தில் சொல்ல வேண்டிய மந்திரங்களை ஓதியே எரியூட்டினார்கள். அந்த எரியோம்பலைக் கண்ணபிரான் என் கையைப் பிடித்துக் கொண்டு சுற்றி வலம் வந்தான். என்று தாம் கனவில் கண்டதைக் கூறுகின்றார்.

முதலடியில் "ஓதி" என்றது எச்சத்திரிபு "ஓத" என்று கொள்ள வேண்டும். "வாய் நல்லார் நல்ல மறையோத காய்சின மாகளிறு அன்னான் மந்திரத்தால் பாசிலை நாணற்படுத்துப் பரிதி வைத்து என்கைப் பற்றித் தீவலம் செய்யக் கனாக் கண்டேன்" என்று வரிசைப் படுத்திப் பாட வேண்டும். திருமணக் காலத்தில் வேதங்களை ஓதினார்கள் என்று பாடாமல், கோதை நல்ல மறையோதி என்று அழகு தமிழில் பாடினார். மந்த்ரம் என்பது வடசொல் இதை மந்திரம் என்று தமிழ்ப் படுத்தினார்.

நாணற்படுத்துவதும் பரிதிவைப்பதும் எரியோம்பல் நிகழ்த்துதற்குரிய பொருளைக் குறித்தார். கோதையின் கையைப்பிடித்த காரணத்தால் உண்டான செருக்கினைக் காட்ட கண்ணபெருமான் காய்ச்சின மாகளிற்றினைப் போன்று நடந்து வந்தான் என்றும், தீவலஞ் செய்து வந்த போது ஏறு நடை போட்டு வந்தான் என்றும் கொள்ள வேண்டும். இவ்வோவியத்தை மணக்கோலத்தில் விளங்கியிருந்த கண்ணபிரானின் நிலையை வரைந்து காட்டினார்.

### நம்பி வரக் கனாக் கண்டேன்

தோழீ! இப்பிறவிக்கும் மற்றும் ஏழேழ் பிறவிக்கும். சரணாகதி அருள்வதற்குரிய தயாபரன், நம்மையெல்லாம்

உடைமைப் பொருளாகவே பெற்றிருந்தான் அம்மாயன் அனைத்து நலன்களை உடைய முதல்வனாயும் அழகனாயும் இருக்கின்ற நாராயணனாவான். அந்தக் கண்ணபெருமானே சிறப்புற்ற தன் இனியத் திருக்கைகளால் என் காலினைப் பற்றி அம்மி யின் மேல் எடுத்து வைத்தான். இஃது எனக்கு மிக்க மகிழ்வைத்தந்தது. இந்த மகிழ்ச்சியை எண்ணிப் புளகாகிதம் கொண்டு விழித்தபோதுதான் இது கனவு என்று தெரிந்தது. என்று தம் உயிர்த் தோழியின் பால் கூறியதை

**"இம்மைக்கும் ஏழேழ் பிறவிக்கும் பற்றாவான்**
**நம்மை யுடையவன் நாராயணன் நம்பி**
**செம்மை யுடைய திருக்கையால் தாள்பற்றி**
**அம்மி மிதிக்கக் கனாக கண்டேன் தோழீநான்!" (60)**

என்று நாராயணனின் சிறப்பினைத் தாம வரைந்த இந்தப் பாட்டோவியத்தில் தெரியக் காட்டினார்.

இப்பாசுரத்தில் உன்றனோடு, உற்றோமேயாவோம் உனக்கே யாம ஆட் செய்வோம் என்று திருப்பாவையில பாடிய படி நாம அவனின் உடைமைப் பொருளாவோம். அவனும் நம்மைக கொண்டுள்ள உடைமையாளன் ஆவான். இத்தகையவனான அந்தக் கண்ணபெருமானே தன் செந்தாமரை மலர் போனற திருக்கையாலே என் காலைப் பிடித்து அமமி மிதிக்கச் செயதான். எனறு தோழியின் பால கூறுகினறார்.

சிலர் பெண்ணின் காலை ஆடவர் பிடிக்கலாமா என்று வினவக் கூடும். அனபின மிகுதியால பிடிப்பதே எல அறிதல் நலலது. அன்பின் வயப்பட்டிருககும் ஒருவர், எதையுமே எணணிப பாரார், சீதையை மீட்கத் தனியனாய் இராமன கடலில் சென்றான் எனறு சொறபொழிவாளர் இராமாயணத்தைச் சொல்லிக் கொண்டிருககும போது, அதை மனமமான்றி அன்புடன வயப்பட்டுக் கேட்டுக கொணடிருந்த குலசேகராழ்வார் இதோ நானிருக்கின்றேன

என்று ஆழமான கடல் தம்மை மூழ்கடிக்கக் கூடும் என்பதை யும் கருதாமல் கடல் நீரில் இறங்கி, கழுத்தளவு வரைச் சென்று விட்டார். அவரை மீட்க, சொற்பொழிவாளர், இராமன் ஒருவனே சீதையை மீட்டு வந்து விட்டான் என்று கூறியதைக் கேட்டுக் குலசேகராழ்வார் கரைக்கு மீண்டதைக் கொண்டு அன்பாலே வயப்படுவோரின் நிலையை அறியலாம்.

இங்கே, கண்ணபெருமானும், அன்பிலே வயப்பட்ட தால் கோதையின் காலைப் பிடித்தான். எனவே, அன்புணர்ச்சியில் உள்ளவர்கள் யாரையும், எதையும், எப்படிப்பட்டதென்றும் நோக்காமல் செயலாற்றுவர் என்பதை உணர்வது நல்லது. அன்பன் செய்யும் எந்தப் பணியையும், சாத்திரம் குறுக்கிட்டுத் தடுக்க முடியாது என்பதை அறிதல் நல்லது. இங்கே அம்மி மிதிப்பிக்க என்று பிறவினையில் கூற வேண்டியதைத் தன் வினையாக ஆண்டதற்குப் பாசுரத்தின் இன்னோசை குன்றாதிருத்தற் காகவேயாகும்.

இங்கே அம்மி மிதித்தலை எடுத்துக் கூறியதற்கு, கற்பிழந்த அகலிகை போலிருக்காமல் கற்புக் கடம்பூண்ட மறைமகள் போன்று வாழ உணர்த்தியதேயாகும். இப்பாசுரத்தில் கற்பின் உயர்நிலையை அம்மி மிதிக்கும் நிகழ்ச்சியைக் காட்டித் தெரிவித்தார். இவ்வோவியத்தில் கற்பின் சிறப்பைப் போற்றிக்காக்க அருமையாக விளக்கினார்.

## அச்சுதன் வரகனாக் கண்டேன்

அருமைத் தோழீ! அழகிய வில் போன்ற புருவத்தினை யும், ஒளி பொருந்திய முகத்தினையும் உடைய என் தமையன்மார்கள் சேர்ந்து தீயை மிகஉயர கொழுந்து விட்டு எரியுமாறு செய்து, அந்த எரியின் முன்னே என்னை

நிறுத்தினார்கள். தனக்கு வேறு எவரும் நிகரிலர் எனச் செருக்குற்ற இரணியனை அரை நொடியில் வீழ்த்திய சிங்க முகத்தை உடைய அவன், அந்த முகத்துடன் தோன்றமால் அந்த ஆற்றலோடு மிடுக்குடன் வந்து தோன்றிய கண்ண பிரானுடைய திருக்கையின் மேலே என்னுடைய கையை வைத்துப் பொரிகளை அள்ளித் தூவிய அந்தக் காட்சியினைக் கனவிலே கண்டேன் என்று தோழியிடம் கூறிய கோதை:

"வரிசிலை வாண்முகத் தென்னைமார் தாம் வந்திட்டு
எரிமுகம் பாரித்து என்னை முன்னே நிறுத்தி
அரிமுகன் அச்சுதன் கைம்மேல் என்கை வைத்துப்
பொரிமுகம் தட்டக் கனாக்கண்டேன் தோழீநான்!" (61)

என்றிசைத்தார்.

இதில் ஓமம் வளர்த்துப் பொரியிடு தலைக் குறித்தார். அம்மி மிதித்தப் பின்னர் நிகழ்கின்ற செய்தியினைக் கூறினார். மணம் நிகழும் காலத்தில் எரியோம்பல் செய்து அதில் பொரியிடுதலை இன்றும் செய்து வருவதை அறியலாம். அன்றைய நாளின் மணப் பெண்ணின் உடன் பிறந்த தமையன் மார் எரியோம்பலில் பொரியிடுவார் என்பதை இங்கே "என்னைமார் தாம் வந்திட்டுப் பொரி முகம்தட்ட" என்று கோதை பாடுவதால் அறியலாம்.

என்னைமார் என்றதை என் ஐ மார் என்று பிரித்து என் தமையன் மார் என்று கொள்ள வேண்டும். இக் கருத்தினைத் திருவாய்மொழியில் "என்னைமார் தன்ம பாவம் என்னார் ஒரு நான்று தடிபிணக்கே" (6-2-7) எனப் பாடப் பட்டுள்ளதை அறிக. சிலை போனறு புருவம் என்று கூறாமல் சிலை என்றது முற்றுவமையாகும். தாவி வையம் கொண்ட தடந்தாமரைகட்கே என்று கூறியதைப் போலே தமையன்மார்களைச் சிறப்பித்துக் காட்ட வரிசிலை வாண்முகம் என்று பாடினார்.

திருமண காலத்தில் மணமகளைக் கேலி செய்வது வழக்கம்; அந்த வழக்கப்படி மணமகள் வீட்டார் கேலி

செய்ய இயலாதவாறு கண்ணபிரான் மிடுக்குடனிருந்ததை "அரிமுகன்" என்று கூறினார். அந்த அரிமுகனாகப் பரிவு கொண்டு கோதையை ஏற்க வந்த அவன் நிலையை மேற் குறித்த பாசுரத்தில் பாடிக் காட்டினார். இப்பாட்டோ வியத்தில் மாயபிரானின் மாட்சியைத் தெரிவித்தார்.

## அங்கவனோடு மஞ்சனம் ஆட்டக்கண்டேன்

தோழி! குங்குமக் குழம்பை உடம்பெல்லாம் பூசி; குளிர்ந்த சந்தனத்தைக் கனக்கத் தடவி வலிமை மிக்க யானையின் மீது என்னையும் பெருமானோடு சேர்த்து அமரவைத்து, திருமணத்திற்காக அலங்காரம் செய்யப் பட்ட தெருக்களிலே ஊர்வலமாக அழைத்துச் சென்றனர். பின்னர் திருமஞ்சனம் செய்வித்ததை நான் கண்டு உளம் பூரித்தேன். இதை நான் விழித்தபோது கனவு என்று தெரிந்தேன். என்று தம் தோழியின்பால் அகமகிழ்ந்து கூறினார் கோதை. இந்தச் செய்தியை

"குங்குமம் அப்பிக் குளிர்சாந்தம் மட்டித்து
மங்கல வீதி வலம்செய்து மணநீர்
அங்கவ னோடும் உடன்சென்று அங்கு யானைமேல்
மஞ்சனம் ஆட்டக் கனாக் கண்டேன் தோழீ நான்!"(62)

என்று இசைத்ததை மாட்சிமையுடைய பாட்டோவியமாக வரைந்தார்.

கண்ணபெருமானும், நானுமாகச் சேர்ந்து அந்த எரியோம்பலின் அருகில் சிறிது நேரம் இருக்க நேர்ந்தது. அப்போது ஏற்பட்ட வெப்பமானது என்னால் பொறுக்க முடியாமல் செய்தது; அதனால், அவ்வெப்பத்தை மாற்று வதற்காகக் குளிர்ந்த குங்குமக் குழம்பையும், சந்தனக் குழம்பையும் எம்மேனியிலே அப்பினார்கள். அந்தத் திருக் கோலத்தோடு என்னையும் கண்ணபெருமானோடு சேர்த்து யானையின் மீது அமர்த்தி, திருவீதி வலம் வந்தார்கள்.

பின்னர், மணமிகுந்த நீரைக்கொண்டு மஞ்சனம் ஆட்டி னார்கள் என்று நிகழ்ந்தவற்றைக் கூறினார்.

திருமணம் செய்வதற்கு முன்னாள் இரவில் மணமக்களை அழைத்துக் கொண்டு வீதிவலம் வருவதை இன்றும் காண்கின்றோம். வீதி வலம் வந்த பிறகு அதே இரவில் மணமகனுக்கும், மணமகளுக்கும் நீராட்டுவித்துப் புத்தாடை அணிவிப்பார்கள். இந்தப் பணி அன்று தொடங்கி இன்று வரையும் நடைபெற்று வருவதைக் கோதையின் இப்பாசுரத்தால் அறிய முடிகின்றது.

"அங்கவனோடு உடன் சென்று, அங்கு யானைமேல், ஏன்றதில் மணமகனும், மணமகளும், சேர்ந்து ஊர்வலம் வருவதை அறிகின்றோம், ஆனால் இன்றோ இருவரையும் சேர்த்து ஊர்வலமாக அழைத்து வருவதில்லை. இவ்விழா வினைத் தனித்தனியாகப் பிரிந்திருந்த மணமகனையும் மணமகளையும் ஒன்றுபடுத்தி வைத்து மகிழ்விக்கச் செய் கின்ற தொடக்க விழாவாகும். அன்று கோதைக்கும், கண்ணனுக்கும் நடந்த நிகழ்ச்சியை எல்லாம் இன்று இந்த மண்ணுலகில் நடக்கும் நிகழ்ச்சிக்கு ஒப்புக் காட்டுதற் கியலாது. கோதை கண்ணன் பால் கொண்ட உறவு உடலுறவாகக் கொள்ள இயலாது. உள்ளத்தால் கொண்ட உறவு. அவன் திருவடிப்பேற்றை எய்திடக் கொண்ட உறவாகும்.

தலைவி, தலைவனை அடைய இலக்கியத்தில் அகத் துறையில் பேசப்படுவதைப் போல அவனையடைய கோதை அந்த அகத்துறை இலக்கிய முறையைக் கையாண்டார். இந்தப் பாசுரத்தில் அவனுடன் அமர்ந்து சென்ற காட்சியை அவனுடன் உள்ளம் ஒன்றிய மாட்சியை அழகாகத் தெரிவித்தார். இந்த முறையில் அம்மாயனுடன் தாம் ஒன்றிய நிலையினை இவ் ஓவியத்தில் வரைந்து காட்டினார்.

## ஆயனைக் கனவில் அடைந்தவர்!

வேயர் குலத்திலே புகழைப் பெற்றவராய், திருவில்லி புத்தூருக்குத் தலைவராய் பெரியாழ்வார் விளங்கினார். அந்த அருளாளரின் திருமகளான கோதை, கோபாலனுக்கு வாழ்க்கைப்பட்டதாகக் கனவு கண்டதைக் குறித்து இந்த அருளிச் செயலில் தமிழ்த் தொடையலாகத் தந்தார். இப்படித் தந்த பத்துப் பாசுரங்களும் மிகச் சிறந்த ஓவிய மாகும். தம் காதலனுக்காக வரைந்த மிகச் சிறப்புடைய ஓவியங்களாக்கிய பாசுரங்களை இம்மண்ணுலக மக்கள் ஏற்றுப் பாடுவார்களானால் அவர்கள் உயர்ந்து வாழ்வ தோடு, நன்மக்களையும் பெற்று மகிழுவார் என்று கூறும் இக்கருத்தை

"ஆயனுக்காகத் தான்கண்ட கனாவினை
வேயர் புகழ் வில்லிபுத்தூர்க்கோன், கோதை சொல்
தூய தமிழ்மாலை யீரைந்தும் வல்லவர்
வாயுநன் மக்களைப் பெற்று மகிழ்வாரே!" (63)

என்று வேயர்புகழ் வில்லிபுத்தூர்க்கோன் கோதை விரும்பி அருளினார். ஆயர்குலத்து அணிவிளக்கான மாயக் கண்ணனை அடைந்து விட்டதாகக் கனவு கண்ட கோதை, அருளிய இப்பத்துப் பாசுரங்களை ஓதி உணர்ந்து பாட வல்லவர்கள் அவ்வருளாளனின் பற்றில் ஆழங்கால் படுவர். அவர்களுக்கு இனிய பயன் ஏற்படும் என்று கோதை கூறு கின்றார். இப்படி ஒப்பிலா வகையில் அருளிய இத்தமிழ் மாலையைத் தூய தமிழ் மாலை என்று கூறுகின்றார்; இப்பாசுரங்கள் எம்பெருமானைப் பற்றியனவாதலால் அஃது மிகத் தூய்மையுடையது எனக் கூறியது ஏற்புடையதே.

இத்தமிழ் மாலையைப் பெருமை செய்ய "தூய" என்று அடை கொடுத்துச் சிறப்பித்தார்; மாயனைப் பற்றிய தூய்மையான பாசுரங்கள் ஆனதால் இதைப்

பாடும் ஆவல் உடையவர்கள் சிறப்புடைய நன் மக்களைப் பெற்று மகிழ்வர் என்றார். இந்நாளில் திருமணம் நிகழும் காலத்தில் இந்தப் பாசுரத்தைப் பாடி மணமக்களை வாழ்த்துவர். இப்பாசுரங்களைச் சீர்ப் பாடல்கள் என்பர். கார்வண்ணனைப் பாடிய பாடல்கள் யாவும் சீர்ப் பாடல்களே! ஆதலால், இப்பாசுரங்களைப் பாடுபவர்களோ சீர்மையுறுவார்கள். சான்றோர்கள் இவற்றைச் சீர்ப் பாசுரங்கள் என்று ஏன் சொன்னார்கள்?

இவற்றுள் இறைவனைப் பற்றிய செய்தியுடன் பிறரை வாழ்விக்கும் பண்புகள் நிறைந்துள்ளதால் சீர்மைப் பாசுரங்கள் என்றார்கள்.

இவற்றுள் இறைவனை வாழ்த்திய செய்திகள் அமைந்துள்ளன; இவற்றைப் பாடுவோர்களும், இவற்றால் வாழ்வைப் பெறுவார்கள்! மேன்மையுறுவார்கள்! என்று மண்ணுலகம் சீர் மையுறவே பாடியருளினார் கோதை.

(நேரிசை வெண்பா)

கண்ணபிரான் சீர்மையையும் காட்டி அருளியலின்
பண்பினையும் காட்டிப் பயன்கண்டு—மண்ணகத்தார்
மாட்சியுறக் கோதை வரைந்திசைத்த ஓவியமாம்
பாட்டமுதம் துய்ப்போம் பரிந்து!

காதலனோ கண்ணனவன் கைப்பிடித்த செய்தியினைக்
கோதை எழிலாகக் கூறியதைப்—பூதலத்தோர்
உய்யவே ஒண்டமிழால் ஓவியமாய்த் தாம்வரைந்து
தெய்வமென நின்றாரைச் செப்பு!

## ஏழாம் திருமொழி

## கண்ணனின் வாய்ச்சுவையைச் சங்கிடம் கேட்டல்

1. கடிமணம் பெற்ற கருப்பூரம் தனையும்
கமலப்பூ தன்னையும் விஞ்சி
படிமிசைச் சிறந்த பரமன்வாய்ச் சுவையைப்
பங்குறச் சுவைத்தவெண் சங்கே
சடிதியில் எனக்கே சாற்றுக என்று !
தய்வுடன் இசைத்துமே கோதை
அடியளந் தானின் அதரத்தின் சுவையை
அனுபவித் திடவேதாம் கேட்டார் !

2. அழகுற வானின் நிலவினைப் போன்றே
அந்தரமாய் அழகன்உ டட்டில்
விழைந்துமே நீயோ ஒட்டியே இருத்தல்
விளம்பிடும் மந்திரத் தாலோ
பிழையிலா உனக்கே இந்திரனைச் சமமாய்ப்
பேசுதல் சரியிலை சங்கே
குழகன்வாய்ச் சுவையைக் கூறுக என்றே
கோரியே இசைத்தனர் கோதை

3. அவனின்வாய்ச் சுவையை அனுபவித் திடவே
அளவிலா மனைவிமார் இருக்கக்
கவலையே யின்றிக் கண்ணன்வாய்ச் சுவையைக்
களிப்புடன் துய்த்திடும் உனக்கே
அவலமே நேரும் அடித்துனை வதைப்பார்
ஆதலால் விலகிநீ சங்கே
உவந்தெனக் கினிப்பாய் மாயன்வாய்ச் சுவையை
உரைத்திட இசைத்தனர் கோதை !

## ஏழாம் திருமொழி !

இத்திருமொழியைத் தரவு கொச்சகக் கலிப்பா யாப்பில் பாடியருளினார் கோதை; எம்பெருமானோடு சேர்ந்து இணைபிரியாமலிருக்கும் சங்கைப் பார்த்துக் கோதைப்பிராட்டியார் அவன் வாய்ச் சுவையைப் பற்றி அறியவே, கேட்கின்றார். மாயபிரான் வாய்வைத்து ஊதும் சங்கு, அவன் உதட்டில் வெளிப்படும் அமுதமாகிய எச்சிலைச் சுவைத்ததாகக் கருதியே கேட்கின்றார். அதன் தன்மையை அனுபவிக்கவே கேட்கின்றார் கோதை. அறிந்து சொல்லும் திறனில்லாத அதனிடம் அவன் வாய்ச் சுவை யைக்கேட்டது, கண்ணபெருமானை அனுபவிக்க வேண்டும் என்கின்ற வேட்கையாலேயாகும். பரந்தாமனின் பற்றில் ஒன்றிய பக்தர்கள்; அவன் மேனியின் நிறத்தையுடைய பச்சிலையைப் பார்த்ததும் அவன்தான் எனக்கருதிப் போற்றுதல் போல, கண்ணபெருமான் சங்கைத் தன் வாய் உதட்டில் வைத்து ஊதினான் என்பதை அறிந்த கோதை சங்கினிடத்தில் அவன் வாய்ச் சுவையைப் பற்றித் தாம் யறியவே கேட்டார்.

பிறப்பொருள்கள் எவற்றையும் நினையாமல் அருளாள னான கண்ணன் ஒருவனையே நினைந்து வாழும் கோதை, அப்பெருமாயன் அனுபவித்த பொருளையெல்லாம் கண்ட றிந்துகேட்டுஅவனை அனுபவிக்கக் கோரிய மனவிழைவாலே இத்திருமொழியை இனியதோர் பாட்டோவியமாகவும், அப்பெருமானைக் காட்டும் படமாகவும் வரைந்தார்.

முன் திருமொழியில் அவனைப் பற்றிக் கனவு கண்டார்; கண்டவற்றையெல்லாம் தோழியின் பால் உரைத்தார்.

இத்திருமொழியில் பாஞ்ச சன்னியம் என்னும் சங்கு நினைவுக்கு வரவே அதனிடம் கண்ணபெருமானின் வாய்ச் சுவையைப் பற்றி அறிந்திடக் கேட்டார். எம்பெருமான்

ஊதும்போது அவன் வாயிலிருந்து வெளிப்படும் அமுத நீரைச் சுவைத்த நீ! அதை எனக்கும் தெரிவிப்பாயாக என்று கோதை வினவுகின்றார். கேட்டதற்கு உரிய பதிலைச் சொல்லும் திறனில்லாத சங்கு அமைதியாகவிருந்தது.

அவனை அனுபவிக்கவே மிக்க வேட்கை கொண்டிருந்த கோதை, மீண்டும் சங்கினிடம் நீ! எம்பெருமானின் வாய்ச் சுவையை அனுபவிப்பதாலே நீ! சிறந்த பேறு பெற்றுள் ளாய்! கண்ணபெருமானின் பவளவாயின் அமுதம் மண முடையதாகவிருந்ததா ? சுவையுடையதாகவிருந்ததா ? அவனின் வாயமுதம் எந்தச் சுவையை, எந்த மணத்தைப் பெற்றுள்ளது என்பதை விவரிப்பாயாக! அதை உன்னைப் போன்று என்னால் சுவைக்க இயலவில்லையென்றாலும், நீ அதைப்பற்றி எனக்குரைத்தால் செவியாரக் கேட்டேனும் யான் இன்பம் எய்துவேன் என்றார்.

இப்படிச் சங்கிடம் கேட்கும் கோதைப் பிராட்டியார் எம்பெருமானை அனுபவிக்க எண்ணுகின்ற நிலையோ மிகப் பெரியதாகும். அவனைப்பற்றிட ஆழாங்கால் பட்டுள்ள அவர், பரம்பொருளைக் குறித்துப் பேசுகின்ற பிறருடைய கருத்தினை, அடியார்கள் அவனை மிகையாக விரும்பித் துய்த்த நிலையினை எல்லாம் அனுபவித்திடவே விருப்பங் கொண்டிருந்தார். பல்வேறு வகையாலும் அவனைப் பற்றிப் பயன்காணவே முயன்ற அவருடைய அனுபவத்தின் நிலையைப் பெரிதாகவே அறிஞர் பெருமக்கள் பேசுவர்கள்.

எம்பெருமானோடு ஒப்பிட்டுப்பேசும் போதும் பிராட்டியின் அனுபவ நிலையையே பெரிதாக அறிஞர் பெருமக்கள் பேசுவர். ஆனால் எம்பெருமானின் நிலை யினைப் பிராட்டியின் நிலையைவிடச் சிறந்ததாகச் சொல்ல மாட்டார்கள். ஆம் உதவுகின்ற நிலையிலுங்கூட பிராட் டியின் நிலையினையே மிக உயர்த்திப் பேசுவார்,

இராமபிரான் பிராட்டியைப் பிரிந்திருந்த காலத்தில் அப்பிராட்டியைக் கண்டு வந்த அனுமன் கூறியபோது, இராமபிரான் பிராட்டியின் முகத்தின் அழகு எப்படியுள்ளது? தோளழகு எப்படியிருந்தது என்று கேட்டான். இங்கே எம்பெருமானோடு அணுக்கமாயில்லாத அனுமன் அறிந்து வந்து சொல்லிய பிறகேதான் இராமபிரான் பிராட்டியின் நலனை அறிய முடிந்தது; அனுபவிக்க முடிந்தது.

இங்கே எம்பெருமானோடே சதா சர்வ காலமும் இருந்து அவனை அனுபவிக்கும் சங்கைக் கேட்டு அனுபவிக்கக் கருதும் கோதைப்பிராட்டியின் அனுபவமே பெரியதென்றும், பெருமான் அனுபவமோ அவ்வளவு பெருமையுடையதன்றுஎன்றும் இவ்விருவருடைய பக்தியனுபவத்தில் ஊறித்திளைத்து ஆழங்கால்பட்ட அறிஞர் பெருமக்கள் தெரிவிக்கின்றார்கள். கோதைப் பிராட்டியார் பாஞ்சசன்னியத்தை நோக்கி வாஞ்சையுடன் அருளாளனின் வாயமுதச் சுவையைத் தெரிவிக்குமாறு கேட்கின்றார். அதைப் பரிவுடன், பக்தியுடன் கேட்கின்றார்.

## மாதவன் தன் வாய்ச்சுவை எத்தகையது ?

வெண்ணிறத்தையுடைய சங்கே குவலாய பீட யானையின் கொம்பினை முறித்த கண்ணபெருமானின் திரு அதரத்தினுடைய வாயில் ஊறி வரும் நீரின் இனிமையும், வாசத்தையும் பற்றி அறியவே நான் ஆசையுடன் உன்னைக் கேட்கின்றேன். அப்பெருமானுடைய அழகிய பவளம் போன்று சிவந்திருக்கும் உதடுகளின் மணம் பச்சைக் கருப்பூரம் போன்ற வாசத்தை வெளிப்படுத்துகின்றதா ?

தாமரைப் பூ போன்ற மணத்தினைத் தெரிவிக்கின்றதா? மிகத்தித்திக்கும் இனிமையைத் தெரிவிக்கின்றதா? என்பதைப் பற்றியான் தெரியேன்? அனுபவித்த நீ! இன்ன விதத்திலே இன்னத் தன்மையிலேயிருந்ததென

எனக்குத் தெரிவிப்பாயாக என்று கோதை கோவிந்தனின் பாஞ்ச சன்னியத்தை வினவுகின்றார். அவர் வினவியதைப் பின்வருமாறு

> "கருப்பூரம் நாறுமோ, கமலப்பூ நாறுமோ
> திருப்பவளச் செவ்வாய்தான் தித்தித் திருக்குமோ
> மருப்பொசித்த மாதவன்தன் வாய்ச்சுவையும் நாற்றமும்
> விருப்புற்றுக் கேட்கின்றேன் சொல்லாழி வெண்சங்கே!'
> (64)

என்று சங்கிடம் கேட்பதை ஓவியமாக வரைந்தார்.

இதில், ஆற்றல் சான்ற, தூய்மையுடைய; நல்ல போக்கினைப் பெற்ற வெண்சங்கே! ஆவல் கொண்டு யான் உன்னைக் கேட்கின்றேன்; நீ! மறுக்காமல் சொல்ல வேண்டும்: உனக்குத் தெரியாத ஒன்றைப் பற்றி நான் கேட்கவில்லை; தெரிந்தவற்றையே! நீ அனுபவித்ததையே கேட்கின்றேன். எம்பெருமானின் வாயினின்று ஊறி உதட்டில் படிந்துள்ள இன்பமான சுவை நீரினைப் பற்றித் தான் கேட்கின்றேன்.

அச்சுவையான நீரோ படிந்திருக்கும் உதட்டிலே உன்னை வைத்தே அம்மாமாயன் ஊதுதல் கண்ணுற்றேன்! அவன் உதட்டில் படிந்திருந்த சுவைநீர், பச்சைக் கருப்பூரம் போல் மணத்தையுடைதாயிருந்ததா? தாமரைப் பூவின் மணத்தைக் கொண்டதாயிருந்ததா? மிகுந்த இன்சுவை யினை உடையதாகவிருந்ததா? என்பதை நீ எனக்குத் தெரிவிப்பாயாக! எனக் கேட்டார். சங்கே! மறைக்காமல், மறக்காமல் சொல்வாயாக எனக் கோதை கேட்டார்.

கருப்பூரம் நாறுமோ? கமலப் பூ நாறுமோ? என்ற இரண்டிடத்திலும் உவம உருபு தொக்கியுள்ளது. இவற்றைக் கருப்பூரம் போன்றே நாறுமோ; கமலப் பூப் போன்றே நாறுமோ என விரித்துக் காணவேண்டும். கருப் பூர வாசமும், கமலப் பூ வாசமும் உதட்டில் ஊறிப் படிந்

துள்ள நீரில் இருப்பதில்லை. ஆனால் இருந்தது எனக் கோதை கேட்டது, அவனை அனுபவிக்க வேண்டும் என்ற உணர்வோடு கேட்டதாகும்.

பெருமை சான்றவ னான அருளாளனைப் பார்க்க எண்ணுகின்ற மனமே குதுகலிக்கும்; அப்படியுள்ள மன நிலையில்தான் அவனின் வாயினின்று ஊறி வரும், நீரும் கருப்பூர வாசனையுடையதாக, கமலப்பூ வாசமுடையதாக, தேவாமுத இனிப்பையுடைதாக இருக்கும் என்று எண்ணியே இப்பாசுரத்தில் கோதை பாடியருளினார். அனுபவிக்கின்ற வர்க்குத்தான் இந்த இன்பம் தோன்றும், என நாம் கருதுதல் நல்லது,

இதில் மருப்பொசித்த வரலாற்றைக் கூறுகின்றார். மருப்பு ஒசித்தது என்று கூறியது. யானையின் தந்தத்தை ஒடித்ததைக் குறித்தார். கம்சனால் ஏவப்பட்ட குவலாய பீடம் என்னும் யானையை, அதன் தந்தங்களை ஒடித்தான் அதனாலேயே அந்த யானையை அழித்த எம்பெருமானின் திறத்தை எடுத்துக்கூறினார். ''அவையும் நாற்றமும்'' எனக் கூறியது, எம்பெருமானின் வாயினுடைய வாசத்தை யும் வாயினின்று ஊறிவந்த அமுத நீரின் சுவையையும் குறித்தார்.

''ஆழி வெண்சங்கே" என்றதில் ஆழி கடலுக்குப் பெய ராதலால் கடலிலிருந்தே தோன்றிய வெண்சங்கு என விளங் கிடப் பாடினார் ''வெண்சங்கே'' என்றதில் சங்கின் இயல் பானநிறம் வெண்மையாகும். அப்படியிருக்க சங்கு என்று குறிக்காமல் வெண்சங்கு என்றதற்கு அவனோடு இடை விடாமல் சேர்ந்து இருக்கும் தன்மையைக் குறிக்கவே இவ் வாறு கூறினார் போலும். அவனோடு சங்கு என்றும் சேர்ந் திருப்பதைப்போல கோதையும் சேர்ந்திருக்கவே எண்ணி அதனிடம் முறையீடு செய்தார்,

இந்தப் பாட்டோவியத்தில் தாம் மாயபிரானின் வாயமுதத்தைச் சுவைக்க மிகவிழைவு கொண்டதாகத் தெரிவிக்கின்றார்.

## ஊழியான் கையிலுள்ள சங்கே !

அழகிய சங்கே! கடலிலே பிறந்து அங்கிருந்த பின்னர் பாஞ்சசன்னன் என்ற அசுரனுடைய உடம்பிலே வளர்ந்த நீ! பிறந்தவிடத்தையும், வளர்ந்த இடத்தையும் நினையாமல் எம்பெருமானுடைய கைத்தலமாகிற உயர்ந்த இடத்தில் குடிபுகுந்து, கொடியவர்களான அசுரர்கள் துன்பப்படும் படியாக ஒலி செய்யும் ஆற்றலுடையதாகவே இருக்கின்றாய், இவ்வாறுள்ள உன் பெருமையோ போற்றுவதற்கு உரியதாகும் என்பதைச் சிறந்ததோர் பாட்டோவியமாக வரைந்தார். அதைக்

"கடலில் பிறந்து கருதாது பஞ்சசனன்
உடலில் வளர்ந்து போய் ஊழியான் கைத்தலத்து
இடரில் குடியேறித் தீய அசுரர்
நடலைப் படமுழங்குந் தோற்றத்தாய் நற்சங்கே!" (65)

என்று சங்கின் வரலாற்றைக் குறித்தார்.

சங்கைப் பார்த்து நீ உப்புக் கடலில் உதயமானாய், பின்னர் வன்மைக்குணம் பெற்ற அசுரன் உடலுக்குள் உயிர் வாழ்ந்தாய். இப்படிக் கேவலமான இடத்திலே பிறந்து இழிந்தவனிடத்திலே வளர்ந்த நீ! பின்னர் இனியனான பொன்னரங்கன் திருக்கரத்திலே நின்று நித்திய வாழ்வினைப் பெற்றுள்ளாய். மணிவண்ணனின் வாயிலே பொருந்திப் பேரொலி எழுப்பி, பொல்லாத அசுரர்கள் புலம்பிடவும் நடுங்கிடவும் வைக்கின்றாய். இப்படியெல்லாம் செய்து சிறந்திருக்கும் நீ! பெற்ற பேறு பெரும்பேறாகும் என்றார்.

"கருதாது" என்ற எதிர்மறை வினைஎச்சம் "குடியேறி" என்னும் தொடருடன் இயைத்துப் பிறந்த

இடத்தையும், வளர்ந்த இடத்தையும், அடியோடு மறந்து, எம்பெருமானின் திருக்கையிலே வாழ்ந்து வருகின்றாய் என்று பெருமையாகக் கூறியதாகும்.

பஞ்சசனன் என்னும் அரக்கன் பண்ணவ மூர்த்திக்குப் பகைவன்! ஆதலால் அந்தப் பகைவனை விட்டு நீங்கி மேன்மையுடைய மாயவன் சரத்தலத்தே ஒன்றி நின்றதனைப்

**"பஞ்சசனன் உடலில் வளர்ந்து போய்**
**ஊழியான் கைத்தலத்தே!"**

என்று பாடுகின்றார். "ஊழியான்" என்றதில் எம் பெருமான் என்றும் அழிவில்லாதவன் என்றும் நிலைத்து நிற்பவன் என்றும், யுகம் முடிந்தாலும் முடிவில்லாமல் நிலைத்து நிற்பவன் என்றும் கூறியதாகும். திடர் என்றது உயர்ந்த இடமாகும். அவன் கையோ உயர்ந்த நிலையிலுள்ளதாகும் என்பதை எடுத்துக்காட்டவே "கைத்தலத் திடர்" என்று பாடினார் கோதை.

"நடலைப்படல்" என்றது துயர்படல் என்பதாகும். "தோற்றம்" என்றது மேன்மை என்பதாகும். ஓரிடத்தில் பிறந்து மற்றோரிடத்துக் குடியேறி, கண்ணபிரானின் கையில் நின்ற சங்கினைப் போல எம்பெருமானும் மதுரையில் யதுகுலத்தில் பிறந்தான்; அசுரத்தன்மையுடைய கம்சன் செய்த தொல்லையினை வீழ்த்தவே ஆயர்பாடியில் வளர்ந்து பெருமையுற்றான். சங்கு தீய அசுரரைத் துன்பப்படுத்தியதைப் போல் கண்ணன் துரியோதனாதியரைத் துன்பப்படுத்தினான் இதில் கண்ண பெருமானால் பெருமையெய்திய சங்கைச் சிறப்பித் துள்ளார்.

## மன்னன் வாசுதேவன் கையிலுள்ள சங்கே!

அழகிய பெரிய சங்கே! சரத்காலத்துச் சந்திரன் முழு நிலவாக இருந்த காலத்தில் பெரிய மலையின்

தோன்றியதைப் போன்று நீயும் வடமதுரையை ஆளும் மன்னனான கண்ணபெருமானின் கையின் மேலே நிற்பதாலே மிகவும் பெருமையுற்று ஒளிர்கின்றாய் என்றார் கோதை.

"தடவரையின் மீதே சரற்கால சந்திரன்
இடையுவாவில்-வந்தெழுந் தாலே போல்நீயும்
வடமதுரை யார்மன்னன் வாசுதேவன் கையில்
குடியேறி வீற்றிருந்தாய் கோலப் பெருஞ்சங்கே!" (66)

என்று இசைக்கின்றார்.

சரற்காலமாகிய வசந்த காலத்தில் எல்லாக் கலை நிகழ்ச்சிகளும் நடைபெறும். அக்காலத்தில் வானத்தில் முழு நிலவோ கோல எழில் காட்டி வந்து தோன்றியதைப் போன்று சங்கே கண்ண பெருமானது கையின் மேல் அழகாக நின்று தோற்றமளிக்கின்றாய்; உனக்குக் கிட்டிய வாய்ப்பே பெரிய வாய்ப்பாகும்.

கண்ணபெருமானுடைய திருக்கையைத் தடவரையாகவும், சங்கு சரத் காலச் சந்திரமண்டலமாகவும் உருவகப்படுத்திக் காட்டும் கோதையின் திறத்தினை எண்ணி எண்ணி, வியக்கத்தக்கதாகும்.

"உவா" என்றது அமாவாசையையும், முழு நிலவினையும் குறிக்கும். இங்கே முழுநிலவையே குறித்துப் பாடினார்" இடை "உவாவில்" என்றதை உவா இடையில் என்று மாற்றி "முழு நிலவிலே" எனப் பொருள் கொள்ளுதல் சிறப்பு.

உவா என்பது கடலுக்கும் பெயராகும். ஆதலால் கடலிடையில் நின்று தடவரையின் மீதெழுந்தாற்போல என்றும் பொருள் கொள்ளலாமாயினும் அது சிறப்புடையதாகாது. சரற்கால சந்திரன் என்பது வடசொல்தொடர்.

விகாரமாகத் தமிழ்ப்படுத்திக் காட்டினார். வாசுதேவன் என்றதில் எம்பெருமானை எங்கும் நிறைந்த பரம்பொருள் என்று பகர்ந்தார்.

எங்குமுள்ள வாசுதேவனைப் பற்றிப் பாடி வரைந்த கோதையின் காதல் ஓவியத்தைப் பாடிப்பாடி மகிழ்வதற் குரியதாகும். அருளியல் இன்பம் எய்துவதற்குரியதாகும்.

## தாமோதரன் கையிலுள்ள வலம்புரியே !

வலம்புரி சங்கே கண்ணபெருமானது கையில் சந்திர மண்டலம் போல நின்று இடையறாமல் அங்கே விளங்கி அவனுடைய காதினருகில், பிறர் கேட்காதவாறு இரகசியம் பேசுவதைப் போலச் சேர்ந்தே இருக்கின்றாய். செல்வத்தில் மிகச் சிறந்த இந்திரனும், உனக்கு இணை யாகச் சொல்வதற்கு இல்லை, என்று கூறும் கோதை:

''சந்திரமண்டலம்போல் தாமோதரன் கையில்
அந்தரம் ஒன்றுஇன்றி ஏறியவன் செவியில்
மந்திரம் கொள்வாயே போலும் வலம்புரியே
இந்திரனும் உன்னோடு செல்வத்துக் கேலானே!'' (67)

என்று பாடி வரைந்த இவ்வோவியத்தை அழகுறத்தந்தார்.

இதில் வலம்புரிச் சங்கின் பெருமையை அருமையாகப் பாடினார். கண்ண பெருமானுடைய திருக்கையிலே சந்திர மண்டலம் போல விளங்கி, ஒரு நொடிப் பொழுதும் அவனை விட்டு விலகாமல் இருந்து, கொண்டும், அவனுடைய செவியோடு சேர்ந்தாற்போல ஒன்றி, ஏதோ இரகசியம் பேசுவதாகத் தெரிகின்றது. சிறந்த செல்வத்தைப் பெற்றும் அச்செல்வத்தால் மிகப் புகழ் வாய்ந்திருக்கின்ற இந்திரனும் உனக்கீடு சொல்ல இயலாத அளவில் நீ ஒப்பற்ற செல்வத்துக் குரியவனாயிருக்கின்றாய் என்று கோதை புகழ்கின்றார்.

''அவன் செவியில் மந்திரம் கொள்வாயே போலும்" என்றதில், எம்பெருமானே உன்னை நான் பிரிந்தால் நல்லோர் பலரும் வருந்துவார்கள் என்று அவன் திருச்செவியில் சங்கே சொல்வதைப் போன்ற இக்கருத்து நமக்கு உணர்த்தப்படுகின்றது. ''வலம்புரி" என்றது வலப்பக்கச் சுழியையுடையதாகும். இதற்கு எதிர்மறையாக இடம்புரிச் சங்குமுள்ளது என அறியவேண்டும். இப்பி ஆயிரம் சூழ்ந்தது, இடம்புரிச்சங்கு என்றும், இடம்புரியாயிரம் சூழ்ந்தது வலம்புரி என்றும் நூல்கள் கூறக் காணலாம். இபபியை விட ஆயிரம் மடங்கு சிறந்தது இடம்புரியென்றும் அந்த இடம்புரியினும் ஆயிரம் மடங்கு சிறந்தது வலம்புரியென்றும் கூறுவர்.

ரனை விட வலம்புரிச் சங்கு செல்வத்தால் சிறந்துள்ளது என்று கூறியதற்குக் காரணம், எல்லாச் செல்வங்களையும் உடையவனான கண்ணபெருமான் கையில் நிற்பதே, மிகச் சிறந்த செல்வமானதால் இவ்வாறு கூறினார். திருப்பாவையில் முப்பதாம் பாசுரத்தின் இறுதியில் ''செங்கண் திருமுகத்துச் செல்வத்திருமால்" என்று எம்பெருமானின் செல்வத்தின் மாட்சியைக்

எனவே, இப்பாட்டோவியத்தில் எம்பெருமானிடம் சங்கு உயர்வைப் பெற்றதைப் போன்று தாம் அவனோடு கலந்து நின்று உயர்ந்திருக்கவேயிசைத்தார் கோதை.

## மதுசூதன் வாயமுதம் உண்ட சங்கே !

பாடு சன்னியம் என்கின்ற சங்கே! ஒரே கடலில் உன்னோடு சேர்ந்தே வாழப் பிறந்தவர்கள் எல்லோரையும் ஒருமித்த நிலையில் வைத்து மதிப்பதில்லை என்பதை அறிவாயாக! நீ ஒருவன் மாத்திரம் சிறப்புடன் திகழ்கின்றாய், நீ மட்டும்தான், கண்ண பெருமானுடைய

திருவாயின் அமுதத்தைப் பலகாலமாகப் பருகி வருகின்றாய், அதனால் நீ கொடுத்து வைத்த பாக்கியசாலி என்று கருதுகின்றேன். என்று சொன்ன இச்செய்தியை

''உன்னோ டுடனே யொருகடலில் வாழ்வாரை
இன்னார் இனையார் என்று எண்ணுவார் இல்லைகாண்
மன்னாகி நின்ற மதுசூதன் வாயமுதம்
பன்னாளும் உண்கின்றாய் பாஞ்ச சன்னியமே!''; (68)

என்று மதுசூதன், சங்கு மகிழத்தக்க வகையில் இவ்வோவியத்தை வரைந்தார் கோதை, இதில்

மதுசூதனின் வாயமுதை மனமுவந்து சுவைக்கும் பாஞ் சன்னியத்தைச் சிறப்பித்தார். பாஞ்ச சன்னியம் என்னும் பெயர் பெற்ற சங்கே! நீ தோன்றிய கடலிலே எண்ணிறந்த உயிர்கள் தோன்றியுள்ளன. அவை யாவும் பெறாத சிறப்பை நீ பெற்றது எப்படி? என்று கேட்கின்றார். உன்னைத் தவிர மற்றவற்றை எவரும் தம் நெஞ்சில் நிறுத்துவதில்லை. அவற்றின் உருவத்தையும் குணத்தையும் யாரும் போற்றிப் புகழ்வதில்லை. அவற்றைப்பற்றி அறிந்துகொள்ளவும விரும்புவதில்லை. ஆனால் உன்னைப் பற்றி மட்டும் மக்கள் பெருமையாகக் கூறுவதும் நெஞ்சில் வைத்துப் போற்றுவதுமாக இருக்கின்றார்கள். ஏன் தெரியுமா? கண்ணபெருமானின் கரத்தில் நீ இருத்தலாலே தான் அவ்வுயர்வு உனக்கேற்பட்டது.

அம்மாயன் உன்னைத் தன் வாய் உதட்டில் வைத்து ஊதுவதாலே தான் நீ சிறந்துள்ளாய்; அப்படி ஊதுபவனின் வாய் அமுதம் பருகிப் பருகி நீ பெருமை பெற்றுள்ளாய் என்று சங்கு பெற்றுள்ள பேற்றினைப் புகழ்ந்தார் கோதை.

உன்னுடன் பிறந்தவர்கள் இன்ன உருவத்தை உடையவர்கள் என்றும் இன்ன இயல்பினை உடையவர்கள் என்றும் கூறுகின்ற வகையில் எவருமில்லை, என்பதை

இன்னார் இனியார் என்று தம் ஓவியத்தில் கோதை கூறி யுள்ளார். இன்னார் என்பதில் தீயவர்களைக் குறித்தார்; "இனியார்" என்றதில் நல்லவர்களைக் குறித்தார்.

பாஞ்ச சன்னியமே! நான் பெரியாழ்வார் மகளாகத் தோன்றியிருந்தும், நீ பெற்ற பயனை யான் பெற வில்லையே! நீ பஞ்சசனன் என்னும் தீய அசுரனிடம் வளர்ந்தும் நீ பெற்ற பேறோ சான்றோர்கள் புகழ்கின்ற பெரும் பேறாகும். பிறப்பாலும் வளர்ப்பாலும் என்ன பெருமையிருக்கிறது? நற்பேற்றினைப் பெறுவதெல்லாம் செய்கின்ற அறத்தாலே தான் பெறவியலும் என்பதற்கு நீ சான்றாவாய். இவ்வாறு நீ புரிந்த அறத்தாலே செய்த தவத்தாலே அம்மாயனின் வாயமுதத்தினை விரும்பிச் சுவைக்க உன்னால் முடிந்தது. உனக்கோ அந்த நல்வாய்ப்பு ஏற்பட்டது என்று பாஞ்ச சன்னியத்தைப் புகழ்ந்தார். புகழ்ந்த அப்பாஞ்ச சன்னியத்தைக் கோதை மிக வாஞ்சை யுடன் இந்த ஓவியத்தில் விளங்கிடக் காட்டினார்.

## வாய்த்தீர்த்தம் சுவைத்த வலம்புரியே

வலம்புரிச் சங்கே! நீண்ட தூரம் நடந்துபோய் கங்கை முதலிய தீர்த்தங்களிலே நீராடாமலும் சிரமம் ஏதும் கொள்ளாமலும் நீ! சிறந்தாய். நாரதனின் சாபத்தால் மரமாய் நின்ற மருத மரத்தை முறித்துத் தள்ளிய கண்ண பெருமானுடைய, திருக்கையில் நீ ஏறி, அங்கேயே நித்திய வாழ்வை நடத்திக் கொண்டு வருகின்றாய்! அந்தச் செந் தாமரைக் கண்களையுடையவனின் தீர்த்தமான வாயமுதில் படிந்து நீராடும் பெற்றியினைப் பெற்றாய்! சிறந்த தீர்த்தங் களில் நீராடுவதைக் காட்டினும் எம்பெருமானின் வாயமுதத் தீர்த்தமே சிறந்ததென்றே! அத்தீர்த்தத்தில் பாய்ந் தாடிய சங்கே! நீ மிகப் பெருமைப் பெற்றவனாவாயென்று கோதை பாராட்டினார். இச்செய்தியையே

"போய்த் தீர்த்தம் ஆடாதே நின்று புணர் மருதம்
சாய்த் தீர்த்தான் கைத்தலத்தே யேறிக் குடிகொண்டு
சேய்த் தீர்த்தமாய் நின்ற செங்கண்மால் தன்னுடைய
வாய்த் தீர்த்தம் பாய்ந்தாட வல்லாய் வலம்புரியே!" (69)

என்று அவனின் வாயமுதத் தீர்த்தப் பெருமையைச் சொல்லோவியப் பாட்டமுதமாகவே வடித்துக்காட்டினார். இந்த நான்கடி பாசுரத்தில் அடிதோறும் தீர்த்தம் வரப் பாடியிருத்தல் படிப்பவர்க்குப் பரசவம் ஊட்டும் வகையில் இன்னோசை பயின்று வரச் செய்தது மிகச் சிறப்பாகும்.

முதலடியில் போய்த் தீர்த்தம் ஆடுவதைக் குறித்தார்; இரண்டாமடியில் மருதமரத்தைக் கண்ணன் சாய்த்ததைச் சாய்த் தீர்த்தான் என்றார், மூன்றாமடியில் வெகு தூரததிலே இருக்கும் தீர்த்தங்களைச் சேய்த் தீர்த்தம் என்றார்; நான்காம் அடியில் மாயனின் வாயில்ருந்து ஊறி வரும் நீரை வாய்த் தீர்த்தம் என்று பாடினார். இவ்வாறு பாடுதல் கோதைப் பிராட்டியாருக்குக் கைவந்த கலையாகும்.

இயற்பா அறிந்த இவருக்கே இது கைவந்த கலையாகும். கோதை இத்துறையிலும் மெத்த புகழ்வாய்ந்த கவிஞராகத் திகழ்கின்றார்.

இவ்வுலகில் இருப்பவர்களுக்குப் புண்ணியத் தீர்த்தம் ஆட வேண்டும் என்ற விருப்பம் இருத்தல் இயல்பு. என்றாலும், அதை வாய்ப்புள்ளவர்களே அனுபவிக்க முடிகின்றது; அப்படி வாய்ப்புப் பெற்றவர்கள் ஆயிரம், ஐந்நூறு காத தூரம் சென்று தீர்த்தமாடுதலைக் கேள்வி பட்டுள்ளோம்; இப்படி இவர்கள் எல்லோரும் வெகுதூரம் சென்று தீர்த்தமாடுதலை நமக்கு எடுத்துக் காட்டினார் கோதை.

ஆனால் சங்கைப் பார்த்து நீ சிரமமேதும் இல்லாமலேயே எம்பெருமானின் திருக்கைத் தலத்திலிருந்து கொண்டே அவனுடைய வாயமுதமாகிற தீர்த்தத்தை

அனுபவித்து வருகின்றாயே! அது நீ கொடுத்துவைத்த பேறாகுமென்று புகழ்கின்றார். இதில் நெடுந்தூரம் சென்று அலைந்து திரிந்து தீர்த்தமாடுதல் அங்கே இறைவனைச் சேவித்தல் முதலானவை, பணம், காசு மிக்கவர்களால்தான் முடியும். அப்படி ஆடியும், இறைவனைப் பாடியும் அவர்கள் பயனைக் காணமாட்டார்கள். ஏன்? என்றால் மனத்தாலே அவனை ஒன்றிச் சேவிக்காததேயாகும்: தூரத்தே போய்த் தீர்த்தமாடுதலின் நோக்கம், பரம்பொருளை யடையவே யாகும். அப்படித் தீர்தமாட வசதி பெற்றவர்கள் தீர்த்த மாடினும், கார்மேனியனை மனத்தில் நிறுத்தவில்லை யென்றால் தீர்த்தமாடினும் பயனில்லை. தூரத்தே சென்று தீர்த்தமாடுதல் பெருமையைக் காட்டுமேயன்றி உண்மைப் பக்தியாகாது, உண்மைப் பக்தி, என்பது, மனம் ஒன்றிய நிலையில் இருக்குமிடத்திலேயே அவனை அனுபவிப்பதே யாகும். இதற்கு உதரணமாகச் சங்கு இருந்த இடத்திலேயே பரம்பொருளின் வாயமுதம் பெற்றதைக் கொண்டே அறியலாம். உண்மை என்றது பரம்பொருளோடு மனம் ஒன்றிப் போற்றுதலே யாகும். மேலே சேய்த் தீர்தமாய் நின்ற செங்கண்மால்" என்றதில் சிறந்த தீர்த்தமாகச் செங்கண் மாலைக் குறித்தார். பிற தீர்த்தங்களெல்லாம் சிறப்புக்குரியன அல்ல என்றார் கோதை. சேய்த்தீர்த்தம் என்று தூரத்திலுள்ள தீர்த்தங்களைக் குறித்திருந்தாலும், அவை யாவும் சிறந்ததல்ல என்று செங்கண் மாலை அனுபவிப்பதே சிறந்த இன்பத் தீர்த்தம் என்றார்.

சேய்த்தீர்த்தம் என்பதைச் செங்கண்மாலின் புகழுக்கு அடைமொழியாக்கி அவனின் வாய்த்தீர்த்தம் வாழ்விக்கும் அமுதம் என்றார். இப்பாசுர ஓவியத்தில் எங்கும் பேரொளிகாட்டி நிற்கும் செங்கண்மாலின் பெற்றியினை அற்புதமாக உரைத்தார். மருதமரத்தைச் சாய்த்த மாயவனைக் குறித்தார். அவனையன்றிப் பிறிதொன்றும் நன்மை யளிக்காது என்று அவனையே இதில் மிகவும் சிறப்பித்துக் கூறினார்.

## "சங்கரையா உன்செல்வம் சாலவழகியதே"

அன்றலர்ந்த செந்தாமரைப் பூவில் படிந்துள்ள தேனைப் பருகுகின்ற அன்னப்பறவையின் நிறம் போன்றுள்ள சங்கே! சிவந்த திருக்கண்களையும், மேகத்தைப் போன்று கருத்த மேனியும் பெற்றுள்ள கண்ணபெருமானுடைய அழகிய கைத்தலத்தின் மீதேறிக் கண்வளர்கின்ற நீ! மிகச் சிறப்பினைப் பெற்றுள்ளாய்! என்று சங்கின் பெருமையை விவரித்தார். அதை

"செங்கமல நாண்மலர்மேல் தேன்நுகரும் அன்னம்போல்
செங்கண் கருமேனி வாசுதேவ னுடைய
அங்கைத் தலமேறி அன்னவசஞ் செய்யும்
சங்கரையா உன் செல்வம் சால வழகியதே!" (70)

என்று பாடி இசைக்கின்றார்.

இதில் சங்கை சங்கரையா என்று மரியாதையாக அழைத்துப் பெரியோரிடம் பேசுவதுபோலப் பேசுகின்றார். அலர்ந்த செந்தாமரை மலரின் மேலே படிந்துள்ள தேனை அன்னப்பறவை சுவைக்குமாபோல கண்ணபெருமானின் திருக்கரத்தின் மீதமர்ந்தே அவனின் வாயமுதம் சுவைத்து உறக்கம் கொண்டிருக்கும் திருச்சங்கே! நீ அனுபவிக்கும் போகத்தைக் கண்டு நான் என் சொல்லி அழைப்பேன் என்று சங்கைப் புகழ்ந்தார்.

வெண்மை நிறத்தைப் பெற்றிருக்கும் சங்கினை அன்னத்திற்கு ஒப்பிட்டார் கோதை. எம்பெருமானின் அங்கைத் தலத்தைச் செங்கமலத்திற்கு ஒப்பிட்டார். செங்கமலத்தின் தேனமுதம் நுகர்ந்தது அன்னம்; மாயவனின் வாயமுதம் நுகர்ந்தது சங்கு; என்பதை அழகாக எடுத்துக் காட்டினார்.

"அன்ன வசஞ் செய்தல்" என்பது உறங்குதல் என்றதாகும். சங்கரையா என்றதைச் சங்கு + அரையன் என்று

பிரித்ததில் அரையன் என்றது அரசனாகும்; இங்கே சங்கு களுக்கெல்லாம் அரசன் போன்றவன் நீ! என்று கண்ண பெருமானைக்கொண்டு சங்கைச் சிறப்பித்தார். வாயமுதத் தைச் சுவைத்த பாஞ்ச சன்னியத்தின் பெருமையான வாய்ப்பைச் சிறப்பித்தார். சங்கு அனுபவித்ததைப் போன்று அவனைத்தாம் பெற்று அனுபவித்திடவே விழைந்தார் கோதை.

## உலகளந்தான் வாயமுதம் சுவைத்த ஒண்சங்கே !

சங்கே நீ! உண்டது என்னவெனில்? உலகங்களை அளந்தவனான எம்பெருமானின் திருவாயினின்று ஊறி வந்த அமுதமாகும். நீ! படுத்துறங்குவது எங்கெ என்றால்? கருமை நிறத்தனான அந்த எம்பெருமானின் திருக்கரத்திலே யாகும். இவ்வாறு உனக்கு உணவும், உறக்கமும், எம் பெருமானிடத்திலே யிருப்பதனாலே பெண் குலத்தைச் சார்ந்தவர்கள் உன்னைப் பற்றிப் பெரிய கூக்குரலிடு கின்றார்கள். ஆம்! உன்னைக் குறை சொல்கின்றார்கள்.

ஏன் தெரியுமா? அவர்கள் அனுபவிக்க வேண்டியதை யெல்லாம் நீயே கொள்ளை கொண்டுள்ளாய் என்றே கூச்சலிடுகின்றார்கள் என்பது உனக்குத் தெரியுமா? இப்படி அவர்கள் வருந்துமாறு நீ தவற்றினைச் செய்கின்றாய். இவ்வாறு செய்வது உனக்கோ தக்கத்தாகாது எனக் கூறப் பெறும் இச் செய்தியினைச் சங்கும் உளங்கொள்ளும் வகையில் இனிய ஓவியமாக்கினார் கோதை. அதை,

**''உண்பது சொல்லி உலகளந்தான் வாயமுதம்**
**கண்படை கொள்ளில் கடல் வண்ணன் கைத்தலத்தே**
**பெண்படை யாருன்மேல் பெரும் பூசல் சாற்றுகின்றார்**
**பண்பல செய்கின்றாய் பாஞ்ச சன்னியமே!"** (71)

என்று பாடி இசைத்தார்.

இதில் சங்கு அவனின் வாயமுதம் சுவைப்பதைக் காணும் பெண் மக்கள் அவனின் அந்த அமுதமோ தமக்குக் கிட்டவில்லையே என்ற வேதனையால் சங்கை வெறுத்துக்

கூறுவதாகப் பாடும் கோதைப் பிராட்டி, தம்முடைய மனக் கருத்தையே அப்பெண்களின் மீது ஏற்றிக் கூறுகின்றார் என்பது தேற்றம். பாஞ்சசன்னியமே நீ! செய்வது சிறிதும் நீதியன்று, பெண்ணாய்ப் பிறந்தவர்களெல்லாரும் உன் மீது வசைமொழி கூறும் அளவில் நீ செய்வது சரியில்லை.

கண்ண பெருமானின் வாயமுதை உண்பதும் அவனுடைய கைத்தலத்தில் உறங்குவதுமாயிருக்கின்றாய்!" இஃது எத்தகையதாகவுள்ளதெனின், கோவில் சோற்றைத் தின்பதும், குளத்து நீரைக் குடிப்பதும், கோபுர வாயலில் கிடந்துறங்குவதும், போன்ற நிலையில் சிலர் இருப்பதைப் போல நீயும் இருக்கின்றாய். இப்படியிருப்பது சோம்பேறி யின் வாழ்க்கையாகுமன்றோ ?

இந்த நிலையில் பரம்பொருளையே உன்வசம் ஆக்கிக் கொண்டிருக்கின்றாயே. அவனை விட்டு நீ அகலாமலிருத் தலால் பிறருக்கு வழிவிடாமலே சுயநலத்தால் தப்பிதம் செய்கின்றாய். அவனுக்குரிய மற்ற பெண்களெல்லாம் அவனை அனுபவிக்க முடியாமல் தவிக்கின்றார்கள். சுயநலத்தால் தடையாக உள்ள உன்னை நிந்திக் கின்றார்கள் என்பதை நீ அறிவாயாக! என்று கோதைப் பிராட்டியார் கூறுகின்றார். இதில், ''கண்படை" என்றது உறக்கத்தைக் குறித்ததாகும். பெண்படையார் என்றதில் பெண்கள் திரளாகச் சேர்ந்து அருளாளனை அனுபவிக்க விரும்பி வந்துள்ள நிலையைக் குறித்தார்; திருவாய்ப் பாடியில் உள்ளவர்களும் மதுரையம்பதியில் உள்ளவர்களும் திரண்டு எம்பெருமானை அனுப்விக்கவே வந்ததை இங்கே குறித்துக் காட்டினார்.

''பாஞ்ச சன்னியமே" என்று இப்பாசுரத்தில் விளித்துப் பாடியதால் சங்கை வெறுத்துக் கூறினார் எனக் கொள்ள வேண்டும்!

''வாழாட்பட்டு நின்றுள்ளீரேல் வந்து மண்ணும்
மணமும் கொண்மின்"

என்று கூறியதைப் போன்றும் நீராடப் போதுவீர் போதுமினோ என்றுரைத்ததைப் போன்றும், பொதுவாக அனைவரும் ஏற்று எம்பெருமானை அனுபவிக்க விடாமல் பொறாமையால் நீ மட்டும் தன்னலங்கொண்டு அவனை விட்டுப் பிரியாமல் அனுபவித்தல் ஏற்புடையதாகுமா? என்று சங்கைக் கேட்கின்றார். சங்கே உனக்குப் பொதுமை நோக்கே இல்லாமல் போனதற்கு நீ உப்பு நீரில் தோன்றி, அரக்கன் வயிற்றில் வளர்ந்ததால் ஏற்பட்டது போலும் என்றார்.

எல்லாரும் அனுபவிக்க வேண்டிய கண்ண பெருமானை நீ மட்டும் சுயநலமாக அனுபவிப்பது தக்கசன்று என்பதைப் பாஞ்ச சன்னியமே! என்று விளித்ததால் வெளிப் படுத்தினார்; கோதைப் பிராட்டி எல்லோருமே எம்பெருமானை அனுபவிக்க வேண்டுமென்ற பொதுமை நோக்கம் உடையவர் என்பதை இப்பாசுரத்தால் அறியலாம். அந்த வகையில் இனிது தீட்டியதே இக்காதல் ஓவியம்,

## செல்வப் பெருஞ் சங்கே !

"பெரிய செல்வம் படைத்துள்ள சங்கே! பதினாறாயிரம் தேவிமார்கள் கண்ணபிரானுடைய வாயமுதத்தைப் பருக வேண்டுமென்று விரும்பி எதிர்பார்க்கின்றார்கள். அவர்கள் அவன் பக்தியில் மிக ஈடுபாடு கொண்டவர்கள். அவர்கள் எல்லோருமே அவனின் தூயபதத்தை அனுபவிக்கவே எண்ணுகின்றார்கள், அவர்களோ பதினாறாயிரவர்கள் ஆவார்கள். அவர்கள் எல்லாம் அவனின் அன்புக்குரிய தேவிமார்கள் ஆவார்கள். அத்தகையவர்கள் அனைவரும் அவனின் வாயமுதத்தை அனுபவிக்க இயலாத வகையில் நீ ஒருவனே ஆக்கிரமித்து வண்டுகள் சூழ்ந்து சுவைப்பன போல சுவைத்துக் கொண்டு இருப்பதைக் கண்டு அவர்கள் உன்னோடு விரோதமாகச் சண்டையிடமாட்டார்களா? என்று கூறும் கோதை, இவ்வோவியத்தில் அதைச் சித்திரித் துள்ளார். இக்கருத்தை,

''பதினாறா மாயிரவர் தேவிமார் பார்த்திருப்ப
மதுவாயில் கொண்டாற்போல் மாதவன் தன்வாயமுதம்
பொதுவாக உண்பதனைப் புக்குநீ உண்டக்கால்
சிதையாரோ உன்னோடு செல்வப் பெருஞ்சங்கே!"(72)

என்று இசைத்தார், இதில் சுயநலத்தையுடைய சங்கின் போக்கை எடுத்துக்கூறி, அனைவருமே அனுபவிக்க வேண்டியவனின் வாயமுதத்தை நீ மட்டும் அனுபவிப்பது சரியில்லை என்று பொதுநலத்தையே எடுத்துக் கூறுகின்றார்.

இதில் பொதுவான நோக்கில்லாமல் தன்னலத்தாலே தான் மட்டும் அனுபவிக்கும் சங்கினை வெறுத்துப் பாடுகின்றார். தமக்கு மட்டும் அவன் வாயமுதம் கிட்டவில்லையென்று சொல்லாமல், அவனின் தேவிமார்கள் பதினாறாயிரவர்க்கும் கிட்டவில்லை என்றே கூறுகின்றார். எல்லாருக்கும் எல்லாமும் கிட்ட வேண்டும் என்ற பொது நோக்குடையவர் கோதை. ஆதலால் அவனின் வாயமுதத்தை அனைவரும் சுவைக்க இடம் தர வேண்டுமென்று சங்கிடம் கூறுகின்றார். சங்கே எம்பெருமான் வாயமுதம் உனக்கு மட்டும் சொந்தமானதன்று, அவனின் பக்திக்குரியவர்களான பதினாறாயிரம் தேவிமார்களுக்கும் உரியது. அப்படியிருக்க; நீ மட்டும் உண்ணுவது அவர்களின் வருத்தத்திற்கு ஆளாக நேருமன்றோ? இதனால் உன்னோடு அவர்கள் பிணக்குக் கொள்ளாமல் இருக்க வியலுமா? அவர்களை இப்படி நீ வருத்தினால் சான்றோர்களும், பக்தகோடிகளும் உன்னை மதிப்பார்களா? என்று கேட்கின்றார்.

இதில், பதினாறாயிரம் தேவிமார்களைக் குறித்து ஒரு வரலாற்றினைக் கூறுகின்றார். எம்பெருமான் வராக அவதாரம் எடுத்தபோது, அம்மாயனுக்குப் பூமிப் பிராட்டியின் பால் தோன்றிய நரகாசுரன் உடல் வலிமையாலும் தோள் வலிமையாலும் தனக்கு நிகர் எவருமில்லையென்று செருக்குற்றிருந்த அவன் தேவர்களையும் தேவமாதர்களையும் இம்சித்து வந்தான்,

அவன் இந்திரனின் தாய் அதிதியின் குண்டலங்களைப் பறித்துச் சென்றான்; இந்திரனின் மணிக்கூடப் பருவதத்தையும் வயப்படுத்திக் கொண்டான். வருணனின் வெண்குடையையும் கவர்ந்து சென்றான். இவனின் தொல்லையால், சொல்லொணாத் துயருற்ற தேவேந்திரன் துவாரகைக்குச் சென்று கண்ணனிடம் முறையிட்டான். கண்ணன் பூமிப் பிராட்டியின் உடன்பாட்டின்படி அவளின் அம்சமான சத்தியபாமையைத் தேர் செலுத்துமாறு செய்து, கண்ணன் போர்க் கோலம் பூண்டு நரகாசுரனின் பராக்ச யோதிசப் புரத்திற்குச் சென்று மந்திரியான முரனைக் கொன்று, நரகாசுரனைச் சக்ராயுதத்தால் அழித்தொழித்தான்.

நரகாசுரன், கன்னிகைகளான பதினாறாயிரவரையும் ஒளித்து வைத்திருந்தான். அவர்கள் கண்ணனையே போற்றிவந்தவர்கள். எனவே, அவர்களைக் கண்ணபிரான் காத்திடவே ஆதரவு காட்டினான்; இந்தத் தேவிமார் களைத் தான் கோதை இப்பாசுரத்தின் தொடக்கத்தில் குறித்தார். இவ்வாறு துன்புறுவோர்க்கெல்லாம் நன்மை புரிந்த இன்னமுதனைப் பற்றிய வரலாற்றுச் செய்தியைக் குறித்துப் பேசிய கோதைப் பிராட்டி, அப்பெருமானின் வாயமுதம் சுவைக்கவே விழைந்தார். தம் உள்ளுணர்வை யெல்லாம் இப்பாசுரத்தில் எடுத்துக் காட்டியதை அறியலாம்: இவ்வோவியத்தில் சங்கின் சுயநலத்தைக் கூறினாலும், தம் சுயநலத்தையும் சொல்லாமலேயே சொல்லியிருத்தலையும் அறியலாம்.

## ஆய்ந்தேத்து வார் அணுக்கரே !

பாஞ்ச சன்னியத்தை எம்பெருமானோடு சேர்த் தனுபவிக்கின்ற பெரியதாகிய உறவைத் தம் வார்த்தையால் சொன்னவரும் அழகிய, திருவல்லிபுத்தூரில் அவதாரம் செய்தவரும், சிறந்த புகழையுடையவரும் பெரியாழ்வாரின் திருமகளாருமான கோதை அருளிச்செய்த

இத்தமிழ்ப் பாசுரங்கள் பத்தையும் நித்தமும் பாடிப் பத்தி செய்ய வல்லவர்கள் பாஞ்ச சன்னியம் போன்று அணுக்க மாக நெருக்கங்கொண்டு இன்னமுதனின் இன்பம் துய்க்க வல்லவர்களாவார்கள் என்றார். இப்பத்துப் பாசுரங்களைப் பாடுபவர்களுக்குப் பெரிதும் நன்மை கிட்டும் என்றியம்பி முடிக்கின்றார். இசை எழிலனைய ஓவியமாக இயற்றிய கோதைப்பிராட்டியார்

"பாஞ்ச சன்னியத்தைப் பற்பநாபனொடும்
வாய்ந்த பெருஞ்சுற்ற மாக்கிய வண்புதுவை
ஏய்ந்த புகழ்ப் பட்டர்பிரான் கோதைதமிழீரைந்தும்
ஆய்ந்தேத்த வல்லார் அவரும் அணுக்கரே!" (73)

என்றிசைத்தார். இப்பாசுரங்களை ஏற்றுப் போற்று வோர்க்கெல்லாம் சங்கு பெற்ற பயனை எய்துவார் களென்று இசைக்தருளினார். இதில் பாஞ்ச சன்னியத்தை நோக்கி மாதவன் தன் வாய்ச்சுவையும் நாற்றமும், விருப்புற்றுச் சொல் என்று கேட்கின்றமையால் இச்சங்கு தான் எம்பெருமானுச்கு நெருக்கம் உடையது என்பது கோதையின் கருத்தாகும். இக்கருத்தால் சங்கைப் பெருமையாகப் பாடுகின்றார்.

இவ்வாறு பாடிய இப்பாசுரங்கள் ஏற்புடையனவாகும் என்று கூறுகின்றார். இப்பத்துப் பாசுரங்களைப் பாடுபவர் கள் மிகுந்த பலனைக் காண்பார்கள் என்று இந்தக் கடைசிப் பாசுரத்தில் தெரிவிக்கின்றார். இவற்றைப் பாடுவோர்க்குச் சங்கு அனுபவிக்கின்ற இன்பத்தைச் செங்கண்மாலிடம் பெறவியலும் என்று கூறுகின்றார். சங்கு எம்பெருமானோடு மிக நெருங்கிய உறவு கொண்டே இருத்தல் போன்று கோதைக்கும் கோதை பாடிய தமிழுக்கும் மிக நெருங்கிய உறவு இருப்பதாகச்

"சுற்றமாக்கிய வண்புதுவை
ஏய்ந்த புகழ்ப் பட்டர் பிரான்கோதை தமிழ்!"

என்று பாடிய தொடர் மொழியால் நன்கறியலாம், எம்பெருமானுக்கும், கோதைக்கும், தமிழுக்கும் இருக்கின்ற உறவை ஆக்கிய என்னும் அடைமொழி விளக்கிக் காட்டுகின்றது. "ஏய்ந்த புகழ்ப்பட்டர் பிரான் கோதை" என்று கூறியதில் "ஏய்ந்த புகழினை, பட்டர் பிரானுக்குச் சார்த்திக் கூறாமல் கோதைக்கே அடைமொழி யாக்கிக் கூறுதல் வேண்டும் என்றும் அப்படிக் கூறுவதே- பொருந்து மென்றும் உரையாசிரியர்கள் கூறுவார்கள்: என்றாலும் கோதையோ தம்மைத்தாமே புகழ்ந்து கொள்பவரல்லர். எனவே, நன்றியுணர்வோடு தம் தந்தையை ஏய்ந்த புகழ் பெற்றவர் என்றே கூறிப் போற்றினார். இப்படிக் கொள்வதே கோதையின் பெருமைக் குரியதாகும் என்றுணர்தல் வேண்டும்.

தமிழ் என்றது தமிழாலாகிய பாசுரங்களுக்கு ஆகு பெயராகும். "ஆய்ந்து ஏத்தவல்லார் அவரும்" என்றதனால், இத்திருமொழியாவும் பாஞ்ச சன்னியத்தைப் பற்றிக் கூறியதாகக் கருதுதல் கூடாது. இஃது எம்பெருமானின் பெருமை அனைத்தையுமே சிறப்பித்துக் கூறியதாகக் கொள்ள வேண்டும்.

இப்பாசுரங்களை ஆராய்ந்து போற்றுவதற்குரிய வல்லவர்கள் அருளாளனின் வாய் அமுதத்தின் இனிமையையும் பேரானந்த நிலையையும் அடைவார்கள் என்று இனிது கூறினார். எம்பெருமானின் சிறந்த செவ்வி நிலையினை அனுபவிப்பவர்கள் "அணுக்கரே" என்று பேசுவார். இவ்வாறு பேசியதால் நாமும் ஒப்பில்லா அப்பனுக்கு அணுக்கராக இருக்கவே கோதைப் பிராட்டியார் இக் காதல் ஓவியத்தில் பாடித் தெரிவித்தார்.

## நேரிசை வெண்பா

செய்த நாய்ச்சியார்தம் திருமொழியில் கண்ணபிரான்
மெய்மை விளையாட்டின் மேன்மை தன்னைப்—
பெய்திசைத்த
காதலோவி யத்தைக் கனிந்தளித்த கோதையின்
பாதம் கதியாகும் பாடு!

## திருமகள் கோதையின் செந்தமிழ் ஓவியம் !

பரம்பொருளையே மணாளனாக ஏற்க விரும்பியதால் கோதையார் திருமகளானார், அந்தத் திருமகளோ செந்தாமரைக் கண்ணனைச் செந்தமிழால் ஓவியமாக வரைந்தருளினார். அப்படி ஓவியமாக்கிய கண்ண பெருமானையே நாய்ச்சியார் திருமொழி என்னும் செந்தமிழால் இசைத்துத் தரணிக்குக் காட்டினார். நாய்ச்சியார் என்றால் தலைவி என்பதாகும். தலைவி யாகிய கோதை, நாயகனான தலைவனை ஏற்கப் பாடிய மொழியே நாய்ச்சியார் திருமொழியாகும். இத்திருமொழி நூற்றுநாற்பத் மூன்றாக வரையப்பட்டுள்ளது. இது பதினான்குத் தலைப்புகளில் தீட்டப்பட்டுள்ளது, இப்படி வரைந்த ஒவ்வொரு ஓவியத்திலும் தாவி உலகளந்தானைப் படம் பிடித்துக் காட்டியுள்ளார் கோதை.

அவர், அந்த அருளாளனின் ஆற்றலை, அடியார்களுக்கு அவன் உதவிய அருமையை, கொடியோர்களைச் சாய்த் தொழித்த திறனை, எல்லா உயிர்களிடத்திலும் சென்று நல்லருள் பொழிந்த அவனின் மாட்சியினைக் காட்சிப் படுத்திக் காட்டியுள்ளார்.

கண்ண பெருமானே மண்ணுலக உயிர்களுக்கெல்லாம் அருளுகின்ற கடவுள்; அவனையன்றிக் காக்கும் கடவுள் வேறில்லை என்று நிறுவி இவ்வோவியத்தில் எடுத்துக் காட்டியுள்ளார்.

அச்செம்பொருளான பச்சை நிறவண்ணனை இச்சகத் தோருக்கு எடுத்துக்காட்ட, மெச்சிப் போற்றும் செந்தமிழே பேருதவியாய் இருந்ததால், பெருமையாக அதனைப் போற்றி அழகுறப் பேசுகின்றார். அருளாளனைப் போற்றிப் பற்றிட நோன்பு நோற்றார்; அப்படி நோன்பு நோற்றபோது பாடிய முதல் பிரபந்தம் திருப்பாவை. அத் திருப்பாவையைச் சங்கத் தமிழ்மாலை முப்பது என்று அருமைத்தமிழின் தனிச்சிறப்பை வெளிப்படுத்தினார்.

அடுத்து, அகத்துறை நெறியில் நாய்ச்சியார் திரு மொழியை இரண்டாம் பிரபந்தமாகப் பாடினார். இப்படி ஒப்பில்லா வகையில் பாடிய கோதையார் அதைக் காதல்

ஓவியமாக வரைந்த முதல் திருமொழியில் காமனின் உதவி கோரிப் பாடிய இறுதிப் பாசுரத்தின் இறுதி அடியிலே

''விருப்புடை இன்றமிழ் மாலை வல்லார்
விண்ணவர் கோனடி நண்ணுவரே''

என்று கூறித் தமிழைச் சிறப்பித்தார். இதை விருப்ப முடைய தமிழ் என்றார். இதில் விண்ணோர் தலைவனான கண்ணனைப் பெருமை செய்தார். இதைப்பாடுவோர் அந்த மாயனின் திருவடியை அடைவர் என்று விவரித்தார்.

அடுத்துச் சிற்றில் சிதைக்கும் இரண்டாம் திருமொழியின் கடைசிப் பாட்டின் கடைசி அடியில்

''கோதை வாய்த்தமிழ் வல்லவர்
குறைவின்றி வைகுந்தம் சேர்வரே''

என்று பாடியதில் தமிழைக் கோதை வாய்த்தமிழ் என்று சிறப்பித்தார்; கோதையின் வாய்த்தமிழைப் பாட வல்லவர்கள் குறைவில்லா வாழ்வும் வைகுந்தமும் காண்பார் என்று தமிழின் பெற்றியினைப் போற்றிக் கூறினார்.

பின்னர் ஆயனிடம் ஆடையைக் கோரியபோது பாடிய மூன்றாம் திருமொழியின் இறுதிப் பாசுரத்தின் மூன்றா மடியில்

''இன்னிசையால் சொன்னமாலை
ஈரைந்தும் வல்லவர் தாம்போய்
''மன்னிய மாதவனோடு வைகுந்தம் புக்கு இருப்பாரே''

என்பதில் தமிழை இன்னிசைத் தமிழென்றார், இத் தமிழைப் பாடுபவர்கள் நல்வாழ்வையும் நன்மதிப்பையும் காண்பார்கள் என்றும் அம்மாதவனோடு சேர்ந்து இன்புறுவார்கள் என்றும் உயர்த்தித் தமிழின் சால்பினை விவரித்தார்.

அடுத்துக் கூடலிழைக்கும் நான்காம் திருமொழியின் கடைசிப் பாசுரத்தின் கடைசி அடியில், தமிழாலான

''பாடல் பத்தும் வல்லார்க்கு
இல்லை பாவமே''

என்றதில் தமிழ், பாவத்தைப்போக்கும் பரமனடி காட்டும் என்று அதன் மேன்மையினை விளக்கிக் கூறினார்.

மேலும் குயிலைக் கோவிந்தனிடம் தூது செல்ல அனுப்புவதற்காகப் பாடிய ஐந்தாம் திருமொழியின் ஈற்றடியில்

**''நண்ணுறு வாசக மாலை வல்லார்**
**நாமே நாராயணாய வெண்பரே''**

என்றதில் தமிழை வாசக மாலை என்றார். இத்தமிழே நமோ நாராயணனைப் பாடிடும் அவனடி சேர்ப்பிக்கும் என்றும் அது எட்டெழுத்துடையவன் சீர்மையைப் பேசு கின்ற இனிய தமிழ் என்றும் சிறப்பித்தார்.

ஆயனைக் கனவில் கண்ட கோதை பாடிய ஆறாம் திருமொழியின் இறுதி அடியில்,

**''தூய தமிழ்மாலை ஈரைந்தும் வல்லவர்**
**வாயு நன்மக்களைப் பெற்று மகிழ்வரே''**

என்று கூறியதில் தமிழைத் தூய தமிழ் என்றார். இத்தமிழ் மாலையைப் பாட வல்லவர்கள் இனிய வாழ்வையும் நன் மக்களைப் பெற்று மகிழ்வார்கள் என்றும் அருளாளனின் திருவடியைக் காட்டுவிக்கும் உயர் தமிழ் என்றும் பெருமை செய்தார்.

அவர் அருளாளப்பரம்பொருளின் வாயமுதச் சுவையை அறிய சங்கிடம் கேட்பதற்காகப் பாடிய ஏழாந் திருமொழி யின் இறுதிப் பாசுர ஈற்றடியில்

**''கோதை தமிழ் ஈரைந்தும் ஆய்ந்தேத்த**
**வல்லார் அவரும் அணுக்கரே''**

என்று பாடியதில், தமிழைக் கோதை தமிழ் என்றார். அத்தமிழைப் பாடுபவர்கள் பத்தவதார மூர்த்திக்கு அணுக்கமுடையவர்களாக, நெருக்க முடையவர்களாக ஆவர்ர்கள் என்று கூறி, தமிழை அமிழ்தினும் இனிதாக ஏத்தினார்.

அந்தச் செந்தமிழ் மொழிப் பற்றில் ஆழங்கால் பட்டு, எங்கும் இலங்கும் எம்பெருமானான கண்ணபெருமானின் ஏற்றத்தையெல்லாம் போற்றி வாழ உலகத்தாருக்கு உணர்த்திய கோதைப் பிராட்டியின் நற்றமிழ் வாழ்க வென்றும் வளர்கவென்று கூறி முடிக்கின்றேன்.



**கவிஞர் வி. மு. உலகநாதன்**

பிறப்பு : 20—8—1923

பெற்றோர் : முனிசாமி ஐயா-மங்கைத்தாய் அன்னை

மனைவி : திலகம்மாள்

மக்கள் : கண்ணகி, வாசுகி, பூங்கோதை,
தாமோதரன், தாமரைக்கண்ணன்

இயற்றிய நூல்கள் : நெஞ்சின் நிழல், பாவலர் போற்றும் மகாவித்துவான் மே. வீ. வே., பராசக்தி பாமாலை, பன்னிருவர் தந்த பக்திச்சுரங்கம், கண்ணன் எழில் காட்டும் கவிதைப் பொழில், ஆண்டாள் பாவையும் அழகுத் தமிழும்—இரண்டு பாகங்கள் (இது தமிழ்நாடு அரசின் பரிசு பெற்றது) இரண்டும் ஒன்றே, கோதையின் காதல் ஓவியம் ஆகியவை. பதிப்பித்த நூல்கள் எண்ணிறந்தன. நாள், கிழமை, திங்கள் இதழ்களில் மலர்களில் கவிதை, ஆய்வுக் கட்டுரைகள் எழுதியவர்.

தமிழரசுக் கழகத்தின் சார்பில் தமிழ்நாட்டின் எல்லைகள் மீட்க, தமிழாட்சி ஏற்பட, தமிழ்நாடு பெயர் காண, சுயாட்சி மாநிலம் ஆகிட நிகழ்ந்த போராட்டங்களிலும் சிறை சென்றவர். இத்தகைய தொண்டுள்ளம் கொண்டுள்ளவரைத் தந்தையாராகப் பெற்றதால் யாம் பெருமை பெற்றவராவோம்.

— உ. தாமரைக்கண்ணன்

---

Wrapper Printed at Eskay Art Printers, Madras-5.
Phone : 844727